கலை மகள் துணை.

ஸ்ரீ தத்துவராய சுவாமிகள் இயற்றிய

# சசிவன்ன போதம்

கோவிலூர் ஆதீனம்
7523
கோவிலூர்-630 301

தருக்கவேதாந்தபோதகாசிரியர்
காஞ்சி நகர்
ஆ. செங்கல்வராய முதலியார்
இயற்றிய

தத்துவப் பிரகாசிகை என்னும்
உரையுடன்

விலை ரூபாய் ஒன்று

Rights] 1930. [Regd.

8-2

# *Preface.*

THE COMMENTATOR of this well-known Vedantic Work combines in himself the rare quality of proficiency in the Tamil Language with that in the Vedantic Literature. His commentary is richly illuminated with references to the **Srutis, Smritis** and other well-recognized and unqestioned sources of authority. The author had spared no pains to make the work yield its full value to the reader whatever be his grade of acquaintence with the difficult Science of Brahma-Vidya.

Endeavours in such directions require great encouragement and it is sincerely hoped that this work will soon lead to further efforts on the part of the talented author to benefit the reading public with many more useful works.

N. K. MOHANARANGAM PILLAY, B.A., B.L.,
*Advocate,*
*High Court of Judicature at Madras.*

## சிறப்புப் பாயிரம்.

நியாயசந்திரவேதாந்தபாஸ்கர வீரசேகரஞானதேசிகபாதசேகர

### ஸ்ரீ வீர. சுப்பைய சுவாமிகள் இயற்றிய

எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

எவ்விதி தனையுங் கடந்துபா ரதனி
　　லேமமே புகுநெறி புரிந்த
அவ்வித வன்னன் தனக்கருள் போதத்
　　தமுதினை யாய்ந்துமே லவர்தாம்
ஒவ்வித மாகப் பதவுரை விருத்தி
　　யுரையினை யுவந்திட எவரும்
செவ்விதி னிசைத்தா னுண்மையி னெளியாச்
　　செங்கல்வ ராயமா தவனே.

---

### ஸ்ரீமத் விசுத்தானந்த சுவாமிகள் இயற்றிய

கட்டளைக் கலித்துறை.

பொய்யாச் சசிவன்ன போதமென் னூற்கோ ருரைவகுத்தான்
பொய்யாம் புலவர் புகலுரை யன்றிது போற்றுரையே
மெய்யாம் புகழ்ச்செங் கலுவரா யப்பெயர் மேன்மதியோன்
மொய்யார் தமிழ்க்கல்வி மூதுணர் பண்டிதர் முன்னவனே.

---

### திருவருணை ஈசானிய மடம் சுப்பைய சுவாமிகள் இயற்றிய

நேரிசை வெண்பா.

செங்கல்வ ராயனெனுஞ் செய்யதமிழ்ப் பண்டிதன்சீர்
நங்களது நல்விருத்தி நன்குணர்ந்து—துங்கச்
சசிவன்ன போதத் தனியுரையொன் றீந்தான்
கிசிநீக்கு மெல்லை நிகர்த்து.

பாலக்காடு விக்டோரியா கலாசாலைத் தமிழ்ப்பண்டிதர்

அ. நடராஜ பிள்ளை அவர்கள் இயற்றிய

கட்டளைக் கலித்துறை.

எண்ணு மெழுத்து மிருகண் ணெனக்கொண் டிருநிலத்தில்
விண்ணவர் போற்றுஞ் சசிவன்ன போதம் விளக்கமுறத்
தண்ணிய தத்வப் பிரகா சிகையாந் தனியுரையை
மண்ணவர்க் கீந்தனன் செங்கல்வ ராயனென் மாதவனே.





முகவுரை.

சீர் பெற்றிலகும் இந்நில வுலகத்து மக்களாகப் பிறந்துள்ளோர் அடைய வேண்டுவன, அறம், பொருள், இன்பம், வீடு என நான்கு உறுதிப் பொருள்களாம். அவ்விழுமிய பொருள்களை எளிதில் ஈயவல்லது கல்வியே யென்பதை யறிஞர் யாவரும் உணர்வர். இக் கல்வி, உலகியற் கல்வி, வீட்டியற் கல்வியென இருபாலாகி யியலும் என்ப. உலகியற் கல்வியானது வீட்டியற் கல்வியை யெளிதில் எய்த சிறந்த கருவியாம் என்பதைச் சிறிதும் உணராத சிற்சிலர், தத்தம் வாணாட்களையெல்லாம், உலகியற் கல்வியிலேயே கழித்துவிட்டு, அந்தமில்லின்பத்து அழிவில் பதத்தை யடைதற்குரிய வழிதெரியாது கலங்குகின்றனர். இவ்வுண்மையை,

‘அலகுசால் கற்பி னறிவுநூல் கல்லா
துலகநூ லோதுவ தெல்லாங்—கலகல
கூஉந் துணையல்லாற் கொண்டு தடுமாற்றம்
போஒந் துணையறிவா ரில்.’

என்ற செய்யுள் வற்புறுத்தல் காண்க.

மேற்கூறிய இருபாற் கல்வியையும் ஒருங்கே பெற்று, அத்தகைய கல்வியோடு சீரிய வொழுக்கமு முடையவராய் மிளிர்ந்த தத்துவராய சுவாமிகள் இயற்றிய மோகவதைப் பரணியில் ஒரு பகுதியாய் விளங்குவது சசிவன்னபோதம் என்னும் இச் சிறு நூல். இந்நூல் உருவிற் சிறியதே யாயினும் பொருளில் மிகப் பெரியது என்றற்கு எட்டுணையும் ஐயமின்று.

சசிவன்ன போதம் என்னும் இவ் விழுமிய நூற்கு இப்பொழுது மூன்று உரைகள் உள. அவற்றுள் ஒன்று பழைய வுரை. அதன் ஆசிரியரது பெயர் புலப்படவில்லை.

தருக்க வேதாந்த போதகாசிரியரும் என் நண்பரு மாகிய தமிழ்ப்புலவர் திருவாளர் ஆ. செங்கல்வராய முதலியார் அவர்கள் சசிவன்ன போதமாகிய இந்நூற்குக் கற்ருேர் உள்ளம் களிக்கும் வண்ணம் ஓர் அரிய விரிவுரை யெழுதியுள்ளார். இவ்வுரையைப் ஆழ்ந்து நோக்குவார்க்குத் தருக்கத்திலும், வேதாந்தத்திலும் முதலியார் அவர்கட்கு உள்ள பெரும்புலமை நன்கு புலனும். மேற்கூறிய வுரைகளையும் முதலியாரது விரிவுரையையும் ஒத்திட்டுப் படித்துப் பார்த்தேன். அங்ஙனம் பார்த்த பொழுது, முதலியாரது கருத்துக்கள் பற்பலஇடங்களில் மிக ஆழ்ந்து நூலாசிரியரது மனக்கோளை நன்கு விளக்குவதைக் கண்டேன். ஆகையால், இவரது அரிய வுரை உலகிற்குப் பெரிதும் பயன்படும் என்பது எனது துணிபு. இவர்பால் உரையியற்றும் ஆற்றல் நன்கு அமைந்திருத்தலால், இவர் இது போன்ற நன்னூல்கட்டு அரிய வுரைகள் இயற்றி உலகிற்குப் பெரு விருந்தளிக்குமாறு எல்லாம்வல்ல இறைவர் கருணை புரிவாராக.

சென்னை.
20-12-1930

இங்ஙனம்,
கு. மதுரை முதலியார்,
லயோலா கல்லூரித் தமிழ்ப்புலவர்

உ

சிவமயம்.

## * சசிவன்ன போத மூலம்.

# தத்துவப்பிரகாசிகைஎன்னுமுரை

## அவதாரிகை.

† ஸ்ரீ தத்துவராய சுவாமிகள் தாந்துவக்கக் கருதிய இந்நூல் இடையூறின்றி இனிது முடிதலும், நூலாசிரியராகிய தம்மிடத்துண்டாம் நாஸ்திகப் பிராந்தி நீங்கி ‡ ஜிஞ்ஞாசுக்கள் இந்நூலின்கண் அன்புடன் முயறலும் ஆகிய இவ்விரு பயனின் பொருட்டுச் ¶ சிஷ்டா சாரத்தாற் சேரப் பெற்றதும், தம்மால் அனுட்டிக்கப்பட்டது மாகிய $ மங்கலம் நூற்றுவக்கத்திற் செய்ய வேண்டு மென்பதைச்

---

* 'சசிவன்னபோதம்' என்பது சசிவன்னனது போதத்தை யுணர்த்தும் நூலென விரிதலின், ஆரும் வேற்றுமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகையாம். 'சசிவன்னன்'—சசி (சந்திரன்) போன்ற வெண்ணிற முடையவன் (வெண்குஷ்ட முடையவன்). 'போதம்'—தத்துவஞானம்.

† பிரஹ்ம வித்தையாகிய இலக்குமியை யுடைய.

‡ அறியும் விருப்புடையோர்.

¶ வேதத்திற் கூறப்பட்ட மெய்ப்பொரு ளுணர்ச்சியால், அதனுல் (வேதத்தால்), விதிக்கப்பட்ட கருமங்களைச் செய்யும் வியாசர் முதலியோர் சிஷ்டர்; அவர்களுடைய வொழுக்கம் சிஷ்டாசாரம். ஆன்ருே ரொழுக்க மென்பது மது.

$ மங்கலம் (காப்பு), விக்கினநாசத்திற் கனுகூலமாகிய வியாபாரம். இங்கு விக்கினமென்பது நூன்முடிபிற்குத் தடை

யாயுள்ள பாபமும், வியாபார மென்பது மனோவாக்குக் காயங்களின் கிரியையுமாம். பாபத்தினால், எந்தக்காரியமும் முற்றுப் பெறுவதில்லை; அப்பாபம், மங்கலத்தால், நாசமுறும்: அம்மங்கலம், வத்து நிர்த்தேசம் (வத்துவின் இயல்புரைத்தல்), நமஸ்காரம் (வணக்கு), ஆசீர்வாதம் (வாழ்த்து) என்னும் வேறுபாட்டான் மூவகைப்படும்.

முதலது, நமஸ்கார முதலியவைகளின்றி வத்துவினியல்புரைத்தல். இது நிர்க்குணம், சகுணமென்னும் வேறுபாட்டால் இருவகைப்படும்; அவற்றை, முறையே "வியாபகமாயும், சத்தியமாயு மிருக்கின்ற எதன் பிரகாசத்தால், சூரிய சந்திரர்கள் பிரகாசிக்கின்றார்களோ, அந்தப் புத்திக்குச் சாக்ஷியாகிய நான், சுத்தஸ்வரூபமாகவும், பூரணாநந்த ஸ்வரூபமாகவும் இருக்கின்றேன்" என்றல் முதலிய வற்றானும்,

"நீல மேனி வாலிழை பாகத்
தொருவ னிருதா ணிழற்கீழ்
மூவகை யுலகு முகிழ்த்தன முறையே" என்றல்

முதலியவற்றானும் உணர்க.

நடுவது, வணங்கத்தகும் இறைவன், ஆசிரியன் முதலியவர்களினும், வணங்குபவனிடத்துள்ள தாழ்ந்த வியல்பை யாவருக்கு முணர்த்தும் மனம், வாக்கு, காயங்களின் றொழில். இங்கு, அகத்தில், இறைவன்முதலியவர்களிடத்துள்ள எல்லோரினும் மேலாந் தன்மையைச் சிந்தித்தல் மனத்தின் நமஸ்காரமெனவும், இறைவன் முதலியவர்களின் துதியைச் செய்தல், இதில் தம்மை நமஸ்காரம் செய்கிறே னெனல், அல்லது நமோ நம: ஜயஜய என்று கூறல் வாக்கின் நமஸ்காரமெனவும், தீர்க்க தண்டம் புரிதல் முதலியன சரீரத்தின் நமஸ்கார மெனவும், அவற்றுள், மனதின் நமஸ்காரம் விதையெனவும், வாக்கின் நமஸ்காரம் முளையெனவும், சரீரத்தின் நமஸ்காரம் மர மெனவும் அதினின்றும் இறைவன் முதலியவர்களின் மகிழ்ச்சிவடிவ



பயன் (பழம்) உண்டாமெனவும், அதனால், யாவும் கைகூடுமெனவும் கொள்க.

இறுதியது, நூலாசிரியன், தன் பொருட்டாவது மாணவர் பொருட்டாவது இறைவனைப் பிரார்த்திப்பது. இவற்றை, முறையே "எந்தச் சக்தியின் பலத்தால், ஈசுவரன் சிருஷ்டிக்கிறாரோ, அந்தச் சக்தி இந்தக்கிரந்தம் முடியும் பொருட்டு என் வாக்கிலிருக்கப் பிரார்த்திக்கிறேன்" என்றல் முதலியவற்றானும், "பந்தத்தை நீக்கிச் சுகத்தைத் தரும் சங்கரபகவத் பாதாசிரியர் இந்தக் கிரந்தத்தைப்படிக்கின்றவர் கேட்கின்றவர்களது ஜன்மாதி துக்கத்தை நிவர்த்திப்பாராக" என்றல் முதலியவற்றானும் உணர்க.

சிலர் கடவுள் வாழ்த்து (மங்கலம்), வழிபடுகடவுள் வாழ்த்தெனவும், ஏற்புடைக் கடவுள் வாழ்த்தெனவும் இருவகைப்படுமென்பர். முன்னது, நூலாசிரியன் தானெடுத்துக்கொண்ட நூலிற் கூறும் விஷயத்திற் கேற்ப நூன்முகத்திற் கடவுள் வாழ்த்துக் கூறாது தான் வழிபட்டுவருங் கடவுளை வாழ்த்துதல். அது, சைவர் சிவனையும், வைணவர் விஷ்ணுவையும், ஜைனர் ஜினனையும், பௌத்தர் புத்தனையும் வாழ்த்துதல் போல்வது. பின்னது, நூலாசிரியன் நூன் முகத்தில் நூலிற் கூறும் விஷயத்திற்கேற்பக் கடவுளை வாழ்த்துதல். அது, இராமாயணங் கூறுவோர் இராமனையும், பாகவதஞ் சொல்பவர் கண்ணனையும், கந்தபுராண முரைப்பவர் முருகனையும் வாழ்த்துதல் போல்வது. இங்கு அத்துவிதக் கொள்கையுடையவரான இந்நூலாசிரியராற் கூறப்பட்ட இவ்வாழ்த்து, தமக்கு வழிபடுகடவுளும், தாம் இயற்றிய இந்நூலுக்கு ஏற்புடைக் கடவுளுமாகிய அறிவுருவ ஆன்ம தெய்வத்தைப்பற்றியதாம். இது, முதற் பிரிவின்படி ஆசீர்வாதவடிவ மங்கல மென்க.

நமஸ்காரவடிவ மங்கலத்திலும், ஆசீர்வாதவடிவ மங்கலத்திலும் வத்துவின் சங்கீர்த்தன மிருந்தும் அவற்றை, வத்துநிர்த்தேச வடிவ மங்கலமெனக் கொள்ளாததுபோல, இந்நூலாசிரி

* சீடர்களுக்கு நன்குணர்த்துவான் வேண்டிச் செய்யுள் வடிவமாக வியற்றுகின்றார். அன்றியும், இந்நூலின் † விஷய முதலியவற்றையும் பொருளாற் குறிப்பிக்கின்றார்.

(1) மதிபரிதி யெரிநீர்கால் வானவனி யியமானன்
வடிவா யெல்லா
வதிபதியா யனைத்துமா யல்லாத வறிவுருவை
யகத்துள் வைப்பாம்.

(2) சொல்லாற்றம் மதிவிரகாற் றாயதிது தியதிது
வென்னு மாக்க
ளெல்லார்க்கு மதுவதுவா யிறையிருக்கும் படியேயா
யிருக்க வென்றே.

இவ்விரு கவியும் - குளகம்; (குளகமாவது - பலபாடல்கள் தொடர்ந்து ஒரு வினையைக் கொண்டு முடிவது; "குளகம் பலபாட் டொருவினை கொள்ளும்" குளகமல்லாதது

---

யாற் கூறப்பட்ட மங்கலத்தில், மனதின் நமஸ்காரவடிவ மங்கலத்தன்மை யிருப்பினும் 'இறை யிருக்கும்படியே யாயிருக்க' என்றமையால், அவ்வாறு கொள்ளாது பிரதானம்பற்றித் தனது ஆசீர்வாதவடிவ் மங்கலமாகவே கொள்க.

* சிக்ஷைக்கு (உபதேசத்திற்கு)த் தகுந்த சாதன முடையோர் சிஷ்ய (சீட)ரெனப் படுவர்.

† அதிகாரி, சம்பந்தம், விஷயம், பிரயோஜனம் என்னும் நான்கு அனுபந்தமும் நூற்றுவக்கத்திற் கூறவேண்டியவை. அவற்றை, முதற் செய்யுளில் 'அறிவுரு' என்னும் மொழியால், சீவப்பிரஹ்ம ஐக்கியம் இந்நூலிற்கு விஷயமெனவும், இதன் ஞானத்தால், அஞ்ஞான நிவர்த்தியும் பேரின்ப அடைவுமாய முத்தி பிரயோஜன மெனவும், இதனைப் பெறுதற்குரிய விவேக முதலிய நான்கு சாதனங்களுடன் கூடினவன் அதிகாரிஎனவும், விஷயம் நூல் முதலியவற்றிற்கு ஒன்றற் கொன்றுள்ள பிரதி



முத்தக மெனப்படும்: அது, ஒரு செய்யுள் தனியே நின்று முடிவது; "முத்தகச்செய்யுள் தனிநின்று முடியும்.") இவ்விரு செய்யுட்கும் ஒருங்கு பொருளுரைக்கப் படுகின்றது.

இதன் பொருள்:— (1) * மதி பரிதி எரி நீர் கால் வான் அவனி இயமானன் வடிவாய்=(மாயோபாதியால்), சந்திரன், சூரியன், அக்கினி, சலம், வாயு, ஆகாயம், பிருதிவி, சீவான்மா (என்னும்) அஷ்டமங்கள மூர்த்தமாய், † எல்லா அதிபதியாய்=எல்லாவற்றிற்கும் தலைவனாய், அனைத்துமாய்=(இவ்வாறு வியவகாரத்தில்) சர்வாத்மகமாய், அல்லாத=(வாஸ்தவத்தில் அனைத்துந்தான்) ஆகாத, அறிவுருவை=ஞானகன பரமாத்மாவை, அகத்துள் வைப்பாம்=மனத்தின்கண் வைத்துத் ‡ தியானிப்பாம்;

---

பாத்திய பிரதிபாதக முதலிய தன்மைகளே சம்பந்தமெனவும் குறிப்பித்தனர். பிரதிபாத்தியம்=கூறப்படுவது; பிரதிபாதகம்=கூறுவது. அனுபந்தம்—தன்னை யறிந்தபிறகு அதிகாரியை நூலோடு சம்பந்தப்படுத்துவது. இங்குத் தன்னை என்னுஞ் சொல்லால், அதிகாரி, சம்பந்தம், விஷயம், பிரயோஜன மென்பவற்றைக் கொள்க.

* சிவன் நிலம், நீர், தீ, காற்று, வெளி, சூரியன், சந்திரன், இயமானன் என்னும் அட்ட மூர்த்தமாய் விளங்கும்போது முறையே சருவன், பவன், பசுபதி, ஈசானன், வீமன், உருத்திரன், மாதேவன், உக்கிரன் என்னும் பெயர்களைப் பெறுவன்.

† அட்டமூர்த்தீசுவரராய் (பிருதிவி முதலான அட்ட மூர்த்திகளுக்கும் அதிபராய்) என்பர் சிலர்.

‡ பாவனையெனினும் தியானமெனினும் ஒக்கும்; தியானம், விஜாதிய (வேற்றின) மான விருத்தியை (அந்தக்கரண பரிணமத்தை=எண்ணத்தை) நீக்கி அவ்வத் தியேயத்தைப்பற்றிய பிரத்யயத்தின் (விருத்தியின்) பிரவாகத்தை (தொடர்ச்

(2) சொல்லால்=(சுருதி, ஸ்மிருதி, புராணம், தொல்லோர் நல்)உரைகளாலும், தம்மதி விரகால்=தமது புத்தி சாமர்த்தியத்தாலும், இது தூயது=(நம்மாலனுஷ்டிக்கப்பட்ட) இம்மதமே பரிசுத்தமானது, இது தீயது=(பிறராலனுஷ்டிக்கப்பட்ட) இம் மதம் அபரி சுத்தமானது, என்னும் மாக்களெல்லார்க்கும்=என்று கூறும் மனிதர்கள் யாவருக்கும், அது அது ஆய்= அவ்வம்மதத்திற் கேற்ற பொருள் வடிவமாய், இறை இருக்கும்படியே ஆய்= இறைவன் இருக்குந் தன்மையே போன்று, இருக்க=(யாம்) இருக்குக, என்று=என்று நினைத்து,—(என்றவாறு.)

(1) இங்கு ஆன்மாவிற்குக் கூறப்பட்ட அஷ்டமங்கள மூர்த்தமும் அதிபதியாந் தன்மையும், செயற்கையும் கற்பனையுமாம்; அறிவுருவம், இயற்கையும் உண்மையுமாம்.

இறைவன் ஒருவனே, தனது மாயாரூப வுபாதியால், அத்யாத்மம், அதிதெய்வம், அதிபூதம் என்னும் மூவடிவமா யிருக்கின்றான்; அவ்விறைவனது யதார்த்த சொரூப விசாரத்திற் சாமர்த்திய மற்ற மந்தமதியுடைய

---

சியை)ச் செய்தல். இங்கு உடல் முதலிய அனான்மப் பொருள்களில் ஆன்மபுத்தியும் இன்மையுலகத்தில் உண்மைப்புத்தியும் விஜாதிய விருத்திகள். இது (தியானம்) பிரதீகம், தியேயானுசாரம், அகங்கிரகம் என்னும் வேறுபாட்டால் முத்திறப்படும். இவற்றுள், முதலது, ஒன்றை மற்றொன்றாய்த் தியானிப்பது. உதாரணம்:—சாளிக்கிராமத்தின்கண்ணுண்டாம் விண்டுவின் றியான முதலியன. இடையது, நூல்கள் கூறியபடி தியேயத்(தியானிக்கப்படுவ)தின் வடிவத்தைத் தியானிப்பது. உதாரணம்:- வைகுண்டத்தி லிருக்கும் விண்டுவின் றியான முதலியன. கடையது, தியேயப்பொருளைத் தன்னோடு அபேதப்படுத்தித் தியானிப்பது. உதாரணம்:- சிவோகம்பாவனை முதலியன.



அதிகாரிகளால், முற்கூறிய அத்யாத்ம முதலிய மூவகை வடிவங்களும் இறைவனது சொரூபமென வுபாசிக்கத் தக்கவை என்னுங் கருத்தால், நூல்களில் ஆங்காங்குக் கூறியுள்ள வடிவங்களுள்ளே இறைவன் அஷ்டமங்கள மூர்த்தமாய் இருக்கின்றான் என்பான், 'மதிபரிதி யெரிநீர்கால் வானவனியியமானன் வடிவாய்' என்றும், மதிமுதலிய எல்லா வடிவமாய் விளங்கிய இறைவன், அவற்றின்கண் விறகில் தீயைப்போலக், குகிய (இரகசிய) மாயிருந்து அவற்றைக் காக்குமியல்பினை யுடையதும், முற்கூறிய அதிகாரிகளால், சர்வ காரணத்வ முதலிய தர்மங்களைக் கொண்டு உபாசிக்கப்படுவதும், சர்வ புராணங்களானும் கூறப்படுவது மாய *காரணப் பிரஹ்மவடிவமாய் இருக்கின்றான் என்பான், 'எல்லாவதிபதியாய்' என்றும், மயக்க திருஷ்டியிற்சர்ப்பம், தண்டம், நீர்த்தாரை, பூமியின் பிளவு முதலிய பல வடிவமாய்த் தோற்றியும் உண்மையில் அவைகளுள், ஒன்றும் தான் ஆகாமல் இருந்தவண்ண மிருக்கும் இரச்சுவைப் (கயிற்றைப்) போல, இறைவன் வியவகார திருஷ்டியில் எல்லாவடிவமாய்த் தோற்றியும் பரமார்த்தத்தில் (உண்மையில்) அவைகளுள், ஒன்றும் தானாகாமல் இருந்தவண்ணமிருக்குஞ் சேதனனென்பான், 'அனைத்துமாயல்லாத வறிவுருவை' என்றும் கூறினார்.

அஷ்டமங்கள மூர்த்தத்தையும், எல்லாவற்றிற்கும் அதிபதியாந் தன்மையையும் உளப்படுத்தி 'அனைத்துமாய்' என்று † அனுவதித்தார்; 'அல்லாத' என்று

---

* மாயாவிசிட்ட சேதனம் காரணப்பிரஹ்மம்; மாயையாலுண்டான காரியவிசிட்ட சேதனம் காரியப் பிரஹ்மம்.

† அனுவதித்தல்—அநுவாதம். ஒரு பொருளை முன்னரெடுத்துக் கூறுவது புரோவாதம்; அதனை யொருநிமித்தத்தாற்

மறுத்தற்கு. இங்ஙனம் 'அனைத்துமாய்' நிற்பதும் தனது (பிரஹ்மத்தினது) ஏகதேசத்தில்; அதுவும் தோற்றரவு மாத்திரமே என்னும் பொருள் தோன்ற 'அல்லாதவறிவுருவை' என்றார். இங்கு "இவையாவும் ஆன்மாவே" என மறை புகல்வதையுங் காண்க. அஷ்டமங்கள மூர்த்தங்களுள் சிவன் அத்யாத்மமும், திங்கள் ஞாயிறு அதிதெய்வமும், ஐம்பெரும் பூதம் அதிபூதமுமாம். பிரதானம் பற்றி இவற்றைமாத்திரங் கூறினார்.

இவர் கூறியது,

"நிலநீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன்
புலனாய மைந்தனோ டெண்வகையாய்ப் புணர்ந்துநின்றா
னுலகே ழெனத்திசை பத்தெனத்தா னொருவனுமே
பலவாகி நின்றவா தோணோக்க மாடாமோ."

எனமணிவாசகப்பெருமான் கூறியவாறிருப்பது காண்க.

'அறிவு' என்றமையின், அவ்வியல் பின்றிய அன்னமய முதலிய ஐங்கோசங்களை யான்மா வென்னும் உலகாயதன் முதலிய மதத்தாரும், 'அறிவுருவை' என்றமையின், ஆன்மாவிற்கு ஞானங் குணமென்னும் தருக்கர் முதலிய மதத்தாரும் மறுக்கப்பட்டனர்.

இங்கு 'அறிவுரு' என்றது * சொரூபஞானம்; † விருத்தி ஞானமன்று. 'வடிவாய்,' 'அதிபதியாய்,'

---

பின்னருமெடுத்துக் கூறுவது அனுவாதம். அனுவாதமெனினும் வழிமொழித லெனினு மொக்கும்.

* சொரூபஞானம் - எங்கும் நிறைந்து நிற்குஞ் சிவசைதன்னியம் (பிரகாசம்).

† விருத்திஞானம் - அந்தக்கரணத்தின் பரிணாமமெனும் விருத்தி யவச்சின்ன சைதன்னியம்; இது தோற்ற வொடுக்க முடையது.



'அனைத்துமாய்' என்பவற்றிலுள்ள 'ஆய்' என்னும் வினை யெச்சங்கள் 'அல்லாத' என்னும் ஒரு பெயரெச்சத்தைக்கொண்டு முடிந்தன. 'ஆய்' என்றதில் ஆ—பகுதி; ய்-வினையெச்ச விகுதி; அதற்கு ஆகி என்பது பொருள். 'அதிபதி' என்றது காரணப் பிரஹ்மத்தை. (க)

(2) இங்கு இறைவனுக்குக் கூறப்பட்ட அதுவதுவாந் தன்மையும், செயற்கையும் கற்பனையுமாம். 'சுருதி' முதலியவைகளிலுள்ள * "அன்னரசமயனே ஆத்மா" அவனினும் வேறாயுள்ளிருக்கும் பிராண மயனே ஆத்மா" என்பன முதலிய வாக்கியங்களும், தத்தம் மத சித்தாந்த கர்த்தாக்களாகிய ஆன்றோர் வாக்கியங்களும் என்பான், 'சொல்லால்' என்றும், அவ்வாக்கியங்களுக் கேற்ற நானாவித புத்தி கற்பித யுக்திகளென்பான், 'தம்மதி விரகால்' என்றும், மதங்களின் ஏற்றத்தாழ்வையுன்னி யானைகண்ட குருடர்போல் பரஸ்பரம் (ஒருவருக் கொருவர்) கலகம் விளைத்துக்கொள்ளாநிற்கும் மதஸ்தர்களென்பான், 'தூயதிது தீயதிது வென்னு மாக்கள்' என்றும், இவ்வாறு மதஸ்தர்கள் தத்தம் சித்தாந்தத்திற் கேற்ற தத்துவத்தைக் கொள்ளினும் அவர்கள் யாவருக்கும் விரோதமின்றி அவ்வத் தத்துவமா யிலங்குபவன் இறைவன் என்பான் 'அது வதுவா யிறை யிருக்கும்' என்றும், அதுபோல் யாமும் மதஸ்தர்களெல்லாரோடும் விரோதமின்றி யொழுகுவோமாக வென்பான், 'இறை இருக்கும் படியேயா யிருக்க' என்றும் கூறினார். 'இறை' என்றது காரணப்

---

* சுருதியில் அன்னமயகோச முதலியவற்றை ஆன்மாவென்று கூறியதற்குக் கருத்து யாதெனின், அது, தூலாருந்ததி நியாயத்தால், அவற்றிற்கு அதிஷ்டானமான பிரத்யக பின்ன பரமாத்வை யறிவிப்பதேயாம்.

பிரஹ்மத்தை. இங்கு 'மாக்கள்' என்றது உலகாயதன் முதலிய எல்லாச் சமயத்தாரையும். இவர்களுடைய சித்தாந்தங்கள் அறிய விரும்பின் அவற்றை, 'சர்வதர்சன சங்கிரக' முதலிய நூல்களிற் காண்க. மாக்கள் = விலங்கு போன்று ஐயறிவுடைய ஒருசார் மானிடங்கள். மக்கள் = ஐம்பொறி யுணர்வேயன்றி மனமென்பதோர் அறிவும் உடையவர். "மாவுமாக்களு மையறி வினவே" "மக்க டாமே யாறறி வுயிரே" என்னுந் தொல்காப்பியச் சூத்திரங்கள் இங்குணரத் தக்கவை.

சொல்லால் = உபநிடத முதலிய சத்தப்பிரமாணத்தால், தம் மதிவிரகால் = இலிங்க ஞானம் அல்லது வியாத்திஞானமாகிய அனுமானம் முதலிய பிரமாணங்களால் என்று பொருள் உரைப்பினும் அமையும். தாம் என்னுந் தன்மைப்பன்மை 'தம்' எனக்குறுகியது. தூயது, தீயது என்பவை தூய்மை, தீமை என்னும் பண்படியாய்ப் பிறந்த குறிப்புவினை முற்றுக்கள். இங்குத் தூய்மை என்பது அறியாமை முதலிய குற்றங்களில்லாமையையும், தீமை என்பது அக்குற்றங்க ளுடைமையையும் குறிக்கும். * சிலர் 'இறை' என்பது அன்னீறு புணர்ந்து கெட்டதென்பர்; சிலர் அன்னீறு புணர்ந்து கெட்டதாகக் கொள்ளாது அதனது ஐ, வினை முதற்பொரு ளுணர்த்தும் விகுதி என்பர். முதல் மதப்படி இறு-ஐ-அன், என்றும், பின்மதப்படி, இறு—ஐ என்றும் கொண்டு எங்குந் தங்கு-

* " 'இறைகடியன்'; 'இறைகாக்கும்'; 'உமையமர்ந்து விளங்கும்'; 'தையல்வரும்' என அன்னீறும் ஆளீறும் பெறுது நின்றவற்றை அன்னீறு ஆளீறு என்னுஞ் சப்பிரத்தியய முதலாயின வந்து லோபமாயினவென்று கூறுவர்" என்பது பிரயோக விவேகவுரை.



தலை யுடையவன் என்று பொருள் கூறுவர் அவர். இறுத்தல் = தங்குதல். முதல்மதப்படி ஐ தொழிற்பெயர் விகுதி. 'இறையிருக்கும்படியேயாய்' என்புழி * 'ஆய்' என்பது போன்றென்னும் பொருளது. † "ஆள்வா ரிலிமா டாவேனே" என்புழி ஆவேனே என்பது போல்வேனே என்று பொருள்படுதல்போல. இருக்க-"இயலு மிடம்பா லெங்கு மென்ப" என்றபடி தன்மைப்பன்மையில் வந்த வியங்கோள் வினை முற்று; இது விதித்தற்பொருளில் வந்தது. யாமென்பது தோன்றா வெழுவாய். 'என்று' என்னும் வினையெச்சம் முற் செய்யுளினுள்ள 'வைப்பாம்' என்னும் வினைமுற்றைக் கொண்டது. 'ஆய்' என்பதற்கு அவிரோதமாய் என்றும் பொருள் உரைப்பர். (உ)

மோகவதைப் ‡ பரணி என்னும் பிரபந்தத்தின்

* நால்வர் நான்மணிமாலை 31-வது செய்யுள் "காவாய்ப் பயந்த தடக்கைமலர்" என்புழியும் ஆக்கச்சொல் உவமைப்பொருள் குறித்து நின்றமைகாண்க. 'அதுவதுவாய்,' 'வடிவாய்' 'அதிபதியாய்' என்றல் முதலிய விடங்களில் ஆக்கச்சொல் செயற்கைப் பொருள் குறித்து நின்றமை காண்க.

† திருவாசகம் கோயின் மூத்த திருப்பதிகம்-எ.

‡ பரணியின் இலக்கணம் "ஆனையாயிர மமரிடைவென்ற மானவ னுக்கு வகுப்பது பரணி" என்றும்,

"கடவுள் வாழ்த்துக் கடைத்திறப் புரைத்தல்
கடும்பாலை கூறல் கொடுங்காளி கோட்டங்
கடிகண முரைத்தல் காளிக் கிதிசொல
லடுபேய்க் கவள்சொல லதனுற் றலைவன்
வண்புக ழுரைத்த லெண்புறத் திணையுற
வீட்ட லடுகளம் வேட்ட லிவைமே
லளவடி முதலா வடியிரண் டாக
வுளமகிழ் பரணி யுரைக்கப்படுமே", என்றும் இலக்கண விளக்கங் கூறுதலுணர்க.

கண் பேயிரங்க லதிகாரத்தில், * "பேய்கள் தாகமோக முதலியவற்றால், துன்புற்றுத் தேவியிடம் பலவாறு முறை யிட்டனவெனவும், அவற்றுள், †ஒருபேய்மேற்றிசைக்கண் தீபம் விளங்க ஒரு புருடன்வரக் கனவுகண்டேன்; அதன் பயனைத் திருவாய்மலர்ந்தருள வேண்டுமெனத் தேவியைக் கேட்டதெனவும், அதற்குத்தேவி, இறைவனே உன்னை யாளுதற்கு அவ்வாறு வந்தவனென்றும், காண்டற்கரிய னாயினும் கட்புலனுக்குத் தோன்றும்படி திருவுருதாங்கி இங்கு அன்பர்க் குதவுவன் என்றும் அக்கனவின்பயன் கூறினாளெனவும், அதற்கு அப்பேய், மனமொழிக்கு எட் டாதவனும், பிறப் பிறப் பில்லாதவனும் ஆகிய இறைவன் இவ்வுலகில் திருமேனி சாத்திவருதலும் விழிக்குப் புலனாத லும் எங்ஙனங் கூடும்? மறை முதலிய வற்றிற்கு முரணு றாதோ? என்று வினவின தெனவும் வருவன" இந்நூற்கு முன்றொடர்ச்சி விஷயமாம்.

தேவிகூறல்.

" அருவ னாகிலு மன்பர்க் குருவனாய்  
‡ வருவ னென்றது மாமறை காணுமே."  
" பத்தி யாம்வலை யிற்படும் பார்மிசை  
புத்தி யாலறி யொண்ணாப் புராணனே."

---

* இங்குப் பேய்கள் என்றது முமுட்சுக்களை.

† ஒரு பேய் என்பதை, "எனவிளைப்பெ லாம்விளம்ப விரவுகண்ட தொருகனா நனவெனத் திகழ்ந்ததென்ன வொன்று நின்று நவிலுமே" என்னும் மோகவதைப் பரணிச் செய்யுளா லுணர்க.

‡ 'வருவனென்பது மாமறை சொல்லுமே' எனவும் பாடம்.



பேய்பதைத்தல்.

" தேவி யிப்படிக் கூறத் திருவருள்  
பாவி யேற்கில தென்று பதைக்கவே."

தேவி, இவ்வாறுபதைத்த பேய்க்குப் பயமகற்றுவித்து முத்தியைப் பெறுமுபாயங் கூறத்தொடங்கல்.

(1) அலகை யச்ச மறவக வான்களும்  
உலகின் முத்திபெ றும்பரி சோதுவாம்.

இ-ள்.—அலகை=(முமுட்சுவாகிய) பேயே! அச்சம் அற=உன்னுடைய சனனமரணபயம் நீங்க, அகவான் களும்=மாபாவிகளும், உலகில்=இவ்வுலகின்கண், முத்தி =துன்பவொழிவும் இன்பப்பெறுதியுமாகிய வீட்டினை, பெறும்பரிசு=அடையுந் தன்மையை, ஓதுவாம்=கூறு வாம்; (எ-று.)

'திருவருள் பாவி யேற்கில தென்று பதைக்கவே' என் றமையால், அலகையென்றதற்கு முமுட்சுவாகிய பேயே என்று வருவித்துப் பொருள் எழுதப்பட்டது. * 'அடு பேய்க்கவள் சொலல்' என்றதனால், இங்கு 'அலகை' என் பது விளியாகும். 'முத்திபெ றும்பரி சோதுவாம்' என் றதைக்கொண்டு அச்சமென்பதற்குச் சனனமரண பயம் எனப்பொருளுரைத்தாம். அகவான்=பாவத்தையுடைய வன். அகம்=பாவம், வான் என்பது வடமொழி விகுதி; பகவான் என்பதுபோல. முத்தி, மோக்ஷம், அபவர்க்கம், நிச்சிரேயசு என்பன ஒருபொருட் சொற்கள். காரியப் பொருளில் வந்த அறவென்னும் வினையெச்சம் கூறுவாம் என்னும் வினைகொண்டு முடிந்தது; நெல்விளைய மழை பெய்தது என்பதுபோல. 'அகவான்களும்' என்றதி

---

* இலக்கண விளக்கச் சூத்திரம்.

னுள்ள உம்மை இழிவு சிறப்பாய்த் தர்மவான்களும் என எதிரது தழீஇ நின்றது.

(க)

'பாவிகள், பாவம்நீங்கப்பெறின் முத்தியைப்பெறு
வர்; அவர்கள்மாட் டுள்ளபாவம் எங்ஙனம்
நிவர்த்தியாம்' என்று பேயிரங்கத்
தேவி கூறல்.

(2) புணர்ந்த பாவமெ லாம்பரி பூரண
முணர்ந்த ஞானி விழிபட வோடுமே.

இ-ள்.—புணர்ந்த=(மனம், வாக்குக், காயமென்னும் முக்கரணங்களாற் செய்யப்பட்டு அந்தக்கரணத்தின்கண்) பொருந்திய, பாவமெலாம்=பாவங்களனைத்தும், பரிபூரணம்=பரிபூரண பிரஹ்மத்தை, உணர்ந்த=(ஆன்ம வடிவாய்ச்) சாக்ஷாத்கரித்த, ஞானி=ஞானியின், விழிபட=கிருபாநோக்கம் பட்டவக்கணமே, ஓடும்=நீங்கும்; (எ-று.)

பாவம் தீவினையாற்றோன்றுவது. இது தீவினையின் வேறுபாட்டாற் கீரை விற்றதானியம்போன்று பல்வேறு வகைப்பட்டிருத்தலின் 'பாவமெலாம்' என்றார். பரிபூரணம்—தேச பரிச்சேதமின்றிய தன்மை; அல்லது எல்லாவற்றிற்கும் சத்தாஸ் பூர்த்தியைக் (இருப்பு விளக்கத்தை) கொடுப்பது. தேசபரிச்சேதம்-முற்று மின்மையின் எதிர்மறையாந் தன்மை; முன்னிடத்தின்கண் இராநின்ற குடத்தின் வேறிடத்திலுள்ள * முற்றுமின்மையின் எதிர்மறை குடமாம்; அதில் அதற்கு (அவ்வின்மைக்கு) எதிர்மறையாந் தன்மையுளது; அது தேசபரிச்சேத மெனப்படும்; ஆதலால், குடம் ஏகதேசத்திருத்தலின் தேசபரிச்சேத முடையதாம். "ஆகாயம்போன்று எங்கும் நிறைந்தவனும்

* அத்தியந்தாபாவப் பிரதியோகி.



நித்தியனுமாவன்" என்ற சுருதியும் பரிபூரணத்தன்மையை யறைகின்றது. ஞானி=ஞானமுடையோன். ஞானமுடையோர் நால்வகைப்படுவராயினும் பிரஹ்மவித்து, புறநாட்டமுடையவனாய்ச் சீவன் முத்தியும், அதன் பயனாகிய தவ (மனம்பொறியடக்க) மும் பெருமையானும், வரிட்டன், சீவன் முத்தியும், அதன்பயனாகிய தவமும் பெற்றவனாயினும், வெளிநாட்டஞ் சிறிது மின்மையானும் பார்வை மாத்திரத்தால், சீடர்களது பாவமனைத்தும் போக்கும் மகிமையின்றியவராவர்; இடைப்பட்ட வரன், வரியான் என்னுமிருவரும் சீவன் முத்தியும், அதன் பயனாகிய தவமும் பெற்றவராய்ச் சிறிது வெளிநாட்ட முடையவராயிருத்தலின் சீடர்களது பாவமனைத்தும் பார்வை மாத்திரத்தால், போக்கும் மகிமையுடையோராவர்; ஆதலின், இங்கு 'ஞானி' என்னுஞ் சொல்லால், இவ்வியல்புடைய * சீவன் முத்த வித்வானைக்கொள்க.

இதற்கு, 'தத்துவானு சந்தானம்' நான்காவது பரிச்சேதம் சீவன் முத்திப்பயனாகிய தவநிருபணத்தில் "சீவன் முத்தர்களது தவம் உலகசங்கிரகத்தின் (உலகினரை நல்வழியில் நன்றாகத்திருப்புவதின்) பொருட்டாம். தான் சதாசாரப் பிரவிருத்தனாகி யாவரையும் அச்சதாசாரப் பிரவிருத்தர்களாகச் செய்தல் உலக சங்கிரகம் என்று சொல்லப்படும். வித்வானது தவமுதலியவைகள் அவ்வுலக சங்கிரகத்தின் பொருட்டே யாகின்றன. அச்சங்கிரகத்தின் அதிகாரிகள் சிஷ்யன், பக்தன், தடஸ்தன் (உதா

* ஜீவன் முத்தன்=ஜீவன் முத்தியை யுடையவன்; ஜீவன் முத்தி=சிரவண முதலியவற்றாற் றோன்றின பிரஹ்ம சாக்ஷாத்காரமுடைய வித்வத் சன்னியாசிக்கு ஜீவித அவஸ்தையிற் கருத்திருத் தன்மை முதலிய பந்தத் தோற்றத்தின் நீக்கம்.

ரீனன் = சிஷ்யனும், பக்தனுமல்லாதவன்) என்னும் வேறு பாட்டால் மூவகையாவர். சாஸ்திரத்திற் சொல்லிய சன் மார்க்கத்தில் நடக்கின்றவன் சிஷ்யனாவன். அச்சிஷ்யனோ, பிரஹ்ம வேத்தாவாகிய குருவுபதேசித்த மார்க்கப்படி வேதாந்த சாஸ்திரத்தின் சிரவணாதிகளினால், பிரத்யக பின்ன பிரஹ்மத்தைச் சாக்ஷாத்கரித்து முத்தியையே யடைகின்றான். சீவன் முத்தஞானியினது பக்தனும் அந்த ஞானவானது பூசை, அர்ச்சனைகளினாலும், அவனுக்கு அங்கபான வஸ்திராதி பதார்த்தங்களைத் தருவதினாலும் மனதில் விரும்பிய பதார்த்தங்களை அடைகின்றான். தடஸ்த புருஷர்கள் இருவகைப்படுவர்; ஒருவன் சத்மார்க் கத்தில் (நன்னெறியில்) நடப்பவன்; மற்றொருவன் அசத்மார்க் கத்தில் (தீ நெறியில்) நடப்பவன். சத்மார்கத்திலுள்ள தடஸ்தன், சீவன்முத்தன் சதாசாரத்திற் பிரவிருத்தித் தலைப்பார்த்துத் தானும் அச்சதாசாரத்திற் பிரவிருத்திக் கின்றான். அசத் மார்க்கத்திலுள்ள தடஸ்தனோ, சீவன் முத்தனது விழிபடச் சர்வபாபங்களினின்றும் விடுபடு கின்றான். ஸ்மிருதி: அகம்பிரஹ்மாஸ்மியாகிய அபரோக்ஷ அனுபவ பரியந்தம் எவனுடைய புத்தி பிரத்யக் தத்வத் திற் பிரவிருத்தியை யுடையதோ, அந்த ஞானவானது திருஷ்டிக்கு விஷயமாகும் புருஷர்களெல்லாம் சர்வபாவங் களினின்றும் விடுபடுகின்றார்கள்'' என்றிருப்பதையும், பிரம வித்துச் சீவன் முத்தனல்லன் என்பதற்கு சீவன் முத்தியின் * பயனாகிய ஞானரக்ஷையின் நிருபணத்தில்

* ஞானரக்ஷை, தவம், விசம்வாதாபாவம், துக்க நிவிர்த்தி, சுகாவிற்பாவம் என்னும் ஐந்தும் ஜீவன் முத்தியின் பயன்களாம். அவற்றுள், ஞானரக்ஷையாவது பிரஹ்ம சாக்ஷாத் காரமுடைய தத்துவவேத்தாவிற்கு (தத்துவமுணர்ந்தவனுக்கு) மீண்டும் சமுசய விபர்யயங்க ளுண்டாகாமை.



“வரன், வரியான், வரிட்டன் ஆகிய விம்மூவரும் சீவன் முத்தர்களென்று சொல்லப்படுகின்றார்கள்'' என்றிருப்ப தையும், கைவல்யத்தில், “முன்னிலங்க ளேறியமூ வரு மப்பி யாசிகளா முத்தரல்லர்,பின்னிலங்கள் வரன்வரியான் வரிட்டனெனுஞ் சீவன்முத்தர் பேத மாகும், சொன்ன நடுப் பூமிவந்த ஞானிகளே பிரமவித்தாந் தூய முத்தர்'' என்றிருப்பதையு முணர்க. கைவல்லியத்தில் “ஞானமார் சீவன் முத்தர் நால்வகை யாவர்'' என்று பொதுப்படக் கூறியது * சத்திரி நியாயத்தாலென்க. (உ)

‘ஞானிகளிடத்துப் பார்வைமாத்திரத்தாற் பாவமனைத்தையும்
போக்கத்தக்க மகிமை என்னவுளது?' என்று
பேய் வினவத் தேவி கூறல்.

வேறு.

(3) எழிலாரு ஞானி புகழென்னை † கூற
லுயர்வீ டிவன்சொல் வழிசெய்
தொழிலாளர் சேர்கை யதுகேளு முன்னை
யிதிகாச மொன்று சொலவே.

இ-ள்.—இவன் = இஞ்ஞானியானவன், சொல்வழி = கூறியவண்ணம், செய்தொழிலாளர் = இயற்றும் ஏவலாளர் கள், சேர்கை = அடைவது, உயர்வீடு = சிறந்த மோக்ஷ மாம்; (அங்ஙனமாயின்,) எழிலாருஞானி = (மைத்திரி, கருணை, முதிதை, உபேக்ஷை என்னும்) அழகு நிறைந்த ஞானியின், புகழ் = கீர்த்தியை, கூறல் என்னை = கூறல் எப்படி? (ஆயிரநாவுடைய ஆதிசேடனாலும் கூறல்முடி யாது.) (அங்ஙனம் ஞானியின் சேவையால் முத்தியடைந்

* சத்திரி-குடையுடையோன்; நியாயம்-திருஷ்டாந்தம்.

† “கூற'' எனவும் பாடமுண்டு. அது சிறப்புடைத் தாகாமையை யாய்ந்துணர்க.

தோர் சரிதமுளதோ எனில்,) முன்னையிதிகாசம் = பூர்வம் ஞானிக்குப் பணிவிடைசெய்து முத்தியடைந்த பெரியார் சரித்திரம், ஒன்று = ஒன்றை, சொல = நான்கூற, அது கேள் = நீ அதனைக் கேட்பாய்; (எ-று.)

ஞானிக்குச் சிறந்த இலக்கணம், மைத்திரி முதலிய சற்குணங்கள் எனச், சாத்திரங்கள் கூறுவதைக்கொண்டு 'எழில்' என்னுஞ்சொற்கு இவ்வாறு பொருள் கூறினும். எழில்—வளர்ச்சி எனினுமமையும். "எழிலாவது—வளர்ந் தமைந்த பருவத்தும் இதுவளர்ந்து மாறியதன்றி இன்னும் வளருமென்பது போன்று காட்டுதல்" என்றார் நச்சினார்க்கினியார். எழில்—தொழிற்பெயர்: எழு—பகுதி, இல்—விகுதி. மைத்திரி (நட்பு) — இன்ப முடையோரிடத்து இவரனைவரும் நமரே என்னும் பாவனை; கருணை (அருள்)—துன்பத்திற்குப் பாத்திரமான பிராணிகளிடத்து நமக்குத் துன்பம் நிகழ்தல் கூடாது என்பதுபோல், இவைகளுக்கும் நிகழ்தல் கூடாது என்னும் பாவனை; முதிதை (உவகை)—சற்கரும முடையோர்களைக் கண்டவுடன் முகமலர்தல்; உபேட்சை (நொதுமல்) — தீயோரிடத்து விருப்பு வெறுப்பின்மை. இவை, சீவன்முத்த ஞானியினிடத்து, இயற்கையாய் வளைந்த மரக்கிளைபோன்று, இயற்கையாயுள்ள குணங்கள்; முத்தி விருப்புடையோரிடத்து முயற்சியால், வளைந்துள்ள மரக்கிளைபோன்று, முயற்சியாற் பெறப்பட்டவைகளாம். குருபணிவிடையின் பயன் மோக்ஷமேயென்பான் 'இவன்சொல் வழிசெய் தொழிலாளர் சேர்கை வீடு' என்றார். சாலோக முதலிய பதமுத்திகள் நான்கினும் சிறந்து விளங்குவது ஐந்தாவதாகிய கைவல்ய முத்தி யென்பான் வீடு என்னுது 'உயர்வீடு' என்றார். அரசனது குடிகள்போல, இறைவனது உலகத்தில் வசித்தல் சாலோகம்; அரசனது ஆளைப்போல், இறைவனது அண்மையில் வசித்தல் சாமீப்பியம்; அரசனது தம்பியைப்போல், இறைவனையொத்த உருவத்தைப் பெறல் சாரூப்பியம்; அரசனது மூத்த பிள்ளையைப்போல் இறைவனையொத்துச் சத்தியசங்கல்ப முதலிய ஐசுவரியத்தை (விபூதியை) அடைதல் சாயுஜ்யம். இதனைச் சாரிஷ்டி எனவும் கூறுவர். இவை நான்கனுள், முன்முன்னவற்றினும் பின் பின்னவை சிறந்தவை; இவை, கருமத்தானும் உபாசனையானும் உண்டாவன. கைவல்யமுத்தி, அகம் பிரஹ்மமென்னுஞ் சிறந்த ஞானமொன்றானே பெறப்படுவது: ஆதலின், இது மிகச் சிறந்தது என்க. தொழிலாளர் = ஆத்தமுதலிய பணிகளைப் புரிபவர். இதிகாசம்-தர்மார்த்த முதலிய பயனைத்தரும் பழய சரித்திர வரலாற்றைக் கூறு நூல். 'சேர்கை' என்பதில், 'கை' தொழிற் பெயர் விகுதி. * 'கேளு' என்பதில் உகரம் சாரியை. (௩)

'நீர் கூறுகின்ற இதிகாசம் யாருக்கு யார் திருவாய்மலர்ந்தருளியது?' என்று பேய் வினவத் தேவி கூறல்.

(4) தந்தாப மற்ற பரனேவல் செய்த
வவனுற்ற பேறு தனைமுன்
செந்தா மரைக்கண் முதல்வற்கெ மண்ண
திருவாய் மலர்ந்த திதுவே.

இ-ள்.—இது = இவ்விதிகாசம், தன் தாபம் அற்ற = தன்னுடைய தாபத்திரயங்கள்நீங்கின, பரன் = ஞானியின், ஏவல்செய்த அவன் = ஏவற் பணிவிடைகளைத் தவறுதியற்றின வச்சீடன், உற்ற பேறுதனை = அடைந்துள்ள பயனை,

* 'கேளும்' எனப் பதம்பிரித்துப் பொருள் கூறல், மோகவதைப் பரணியின் றொடர்ச்சிக்கு முரணுதல் காண்க.

முன் = பூர்வம், செந்தாமரைக்கண் = செந்தாமரை மலர் போன்ற கண்களையுடைய, முதல்வற்கு = புருடோத்தம னாகிய திருமாலுக்கு, எம் அண்ணல் = எமது தலைவர், திருவாய்மலர்ந்தது = திருவாய்மலர்ந்தருளிய கதையாம். எ-று

இவ்விதிகாசம், சூதசங்கிதை முத்திகண்டத்திற் கூறப் பட்டிருத்தல் காண்க. தாபத்திரயங்கள் = பிறவித்துன்பங்கள் மூன்று. அவை:—தன்னைப்பற்றி வருவனவும், பிறவுயிரைப்பற்றி வருவனவும், தெய்வத்தைப்பற்றி வருவனவுமாம். முன்னது, பிணி முதலியவற்றாற்றோன்றுந் துன்பம்; நடுவது, தேள் முதலியவற்றாற் றோன்றுந் துன்பம்; பின்னது, காற்று முதலியவற்றாற் றோன்றுந் துன்பம். இவை மூன்றும் இறைவன்பால் எஞ்ஞான்றும் இல்லை; இயல்பாகவே, மெய்யுணர்வுடையானாதலின். ஏனையோர், முயன்று பெற்றமெய்யுணர்வால், நீங்கப்பெற்றனர் என்பான் 'தாபமற்ற' என்றார். இவ்வாறு, திருவள்ளுவரும் "வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க், கியாண்டு மிடும்பை யில" எனக் கூறியுள்ளார். இங்கு 'ஏவல் செய்தவவன்' என்றது, சசிவர்ணனை. உற்றபேறு என்றது, * திருஷ்டபயன், † அதிருஷ்டபயன் என்ற இரண்டையும். அண்ணல் = பெருமையிற் சிறந்தோன் (சிவன்). பரனென்றது—மாநந்தபராயணரை. பின்வரும் 'செந்தாமரை' என்பதை நோக்கித் 'தன் + தாபம்' என்பது 'தந்தாப' மென வந்தது. (ச)

---

* திருஷ்டம்-பிரத்யக்ஷம்.

† அதிருஷ்டம்—அப்பிரத்யக்ஷம்; திருஷ்டபயன், அதிருஷ்ட பயன் என்பவற்றை 15, வது செய்யுளின் உரையிற் காண்க.



"இறைவன் (சிவன்) விஷ்ணுவிற்கு எவருடைய சரித்திரத்தைக் கூறினன்' என்று பேய் கேட்கத் தேவி கூறல்.

(5) உவமிப்பின் ஞானி விழிபட்டு முன்னை
வினைவிட்டு முத்தி யுலகிற்
றவமற்ற வெய்ய வினையே புரிந்த
சசிவன்ன னெய்து கதையே.

இ-ள்.—(இது), உலகில் = இவ்வுலகின்கண், தவமற்ற = தவச்செய்கையற்ற, வெய்யவினையே புரிந்த = தீயகர்மங்களையே இயற்றிய, சசிவன்னன் = சசிவர்ணன், உவமிப்பில் ஞானி விழிபட்டு = (ஒருவாற்றானும்) உவமையின்றிய ஞானியின் கிருபாதிருஷ்டி பட்டமையால் (அக்கணமே) முன்னை வினைவிட்டு = பழவினை (சஞ்சிதகர்மங்)களினின்றும் நீங்கி, முத்திஎய்து கதையே = (அபவர்க்கமென்னும்) வீடுபேற்றை யடைந்த சரிதமேயாகும்; (எ-று.)

'உவமிப்பின்ஞானி' என்று இங்குக் கூறியதுபோலப் பிரமகீதையும்,

"ஈசனு ஞானி யிருந்துள விடத்தே யிருப்பது முத்திதா னந்தத், தேசிக னேவல் செய்பவன் காலென் சென்னியி லிருப்பது மன்னி, மாசிலாப் பரமஞானியா முனிக்கு மகேசனு மொப்பலன் மதிக்கி, லாசிலா வரியு மொப்பலனு மொப்பல னேவரொப் பாரே."

எனக் கூறியது காண்க. தவவினை எனவும், தவமற்ற வினை எனவும், வினை இருவகைப்படும்; அவற்றுள், தவமற்ற வினையும் விலக்கிய வினையெனவும், உதாசின வினையெனவும் இருவகைப்படும்; அவற்றுள், 'தவமற்ற உதாசின வினையைச் செய்தனனோ? சசிவர்ணன்' என்னும் ஐயமகற்றுதற்குத் தவமற்ற வெய்ய வினைபுரிந்த' என்றார்.

'தவமற்ற வெய்யவினை புரிபவர்களுள்ளும் சிலர் ஒவ்வோர் காலத்திற் சிறிது நல்வினை செய்கின்றனர்; இவனும் அவ்வாறு நல்வினை செய்திருத்தல் கூடுமோ'? என்னும் ஐயமகற்றுதற்கு 'வெய்யவினையே' எனத் தேற்றங்கொடுத்துக் கூறினர். அறநூல்களில் விதிக்கப்படாதனவும், விலக்கப்படாதனவும், இயல்பாயுள்ளனவுமாய நடத்தல் முதலிய வினைகள் உதாசின வினைகளெனப்படும். உவமிப்பு = ஒப்பிடுகை. இங்கு ஞானி என்றது, மாநந்தபராயணரை. தவம்—மனம் பொறி வழிபோகாது நிற்றற்பொருட்டு விரதங்களான் உண்டிசுருக்கல் முதலாயின. ஏகாரமிரண்டனுள் முன்னது, தேற்றப்பொருளது; பின்னது அசை. (ரு)

'சாமானிய பாவமுடையவர்களுக்கே பெரியோர் அனுக்கிரகமும், அதனால், முத்தியுமுளவாம்; ஆதலின் இவனும் சாமானிய பாவமுடையவனேயாம்' எனப் பேய்கேட்கத் தேவி அதனைப் பரிகரிக்கின்றாள்.

வேறு.

(6) ஏமம் புகுவா ருளபா தகரா மியாவர்க்
குளுமிக் கவனா குமிவ
னாமம் புகல்வார் குலமும் மெரிவாய்
நரகம் புகுமா றுநடந் தனனே.

இ-ள்.—ஏமம் புகுவாருள = நரகத்தை யடைபவராயுள்ள, பாதகராம் யாவர்க்குளும் = மிக்க பாவிகளாகிய அனைவர்க்குள்ளும், இவன் மிக்கவனாகும் = இவன் மிகச் சிரேஷ்டமுடையவனாகும்; [ஏதனாலெனின் கூறுகின்றாள்.] இவன் = இச்சசிவர்ணன், நாமம் புகல்வார் குலமும் = (தன்) பெயரைக் கூறுகின்றவர்களது வம்சமும், எரிவாய் நரகம்புகுமாறு = அக்கினி நிரம்பிய நரகத்தையடையும் வண்ணம், நடந்தனன் = ஒழுகினன் (ஆதலால்); (எ-று.)



ஏமம் = காவல்; இது நரகத்திற்கு ஆகுபெயர். இது உலகத்தில் பாவஞ்செய்தவர்கள் அடையுமிடம். இது தொகையால், இருபத்தெட்டும், வகையால், நூற்று நாற்பதும், விரியால், இருபத்தெட்டுக் கோடியுமாம். இவற்றுள், மாபாவிகளால், அடையப்படுவன. * ரௌரவ முதலியனவேயாம். இதன் விரிவை அபிதான சிந்தாமணியிற் காண்க. எரிவாய் நரகம்-ரௌரவம், கும்பீபாகம் முதலியனவாம். எரிவாய்-எரிகிற வாயையுடைய என்றும், எரியின்றன்மைவாய்ந்த என்றும் கொள்ளலாம்; இவனியற்றிய தீவினைகளின் பாகுபாட்டைச் சூதசங்கிதை, விருத்தாசல புராண முதலியவற்றிலுணர்க. 'ஏமம் புகுவார் உளபாதகர்ஆம் யாவர்க்குளும்' என்பதற்கு உள்ளத்திற் பாவமுள்ளவராய் அதனால், நரகம் புகுபவராயுள்ள யாவர்க்குளும் என்று பொருள்கூறினும் அமையும். இவன் குலமன்றி இவனாமம் சொல்லுகின்றவர்களது குலமும் எனப் பொருள்படலால், 'குலமும்' என்பதிலுள்ள உம்மை இறந்தது தழீஇின்ற எச்சமாம். 'உள', 'உளும்' என்பவை, இடைக்குறை விகாரங்கள். ஏகாரம் ஈற்றசை. (சு)

---

* ரௌரவம்—ருரு என்னும் பிராணிகளால், ஒரு கணமேனும் தாங்கற்கரிய துன்பம் விளைப்பதாய், அக்கினிச் சுவாலையுடையதாய்ப் பற்பல துன்பம் அனுபவிக்குமிடம் இதனை, இராஜ நரகமென்பர்; இதற்கு இராஜாவாயிருத்தலின் கும்பீபாகத்தை இராஜராஜ நரகமென்பர்; இவ்விரண்டிற்கும் இராஜாவாயிருத்தலின் அவீசியை இராஜதிராஜ நரகமென்பர்; இவற்றை மகாபாவிகள் அடைவரென்க.

‘இவனது பிதிர்க்கள் என்ன கதியை அடைந்தார்கள்’
என்று கேட்கத் தேவி கூறல்.

(7) மலமே வியதீ வினையின் வலியான்
மகிழும் பர்பதத் திலிருந் தவிவன்
குலமே வியதென் புலவா ணர்களும்
கொடிதா நரகங் குடியே றினரே.

இ-ள்.—மலம்மேவிய =(அவித்யா) மலத்தாலமைந்த தீவினையின் வலியால்= தீய கர்மத்தின் வன்மையால், மகிழ் = மகிழும், உம்பர்பதத்தில் இருந்த = தேவபதவியிலிருந்த, இவன் குலம்மேவிய = இவனது வம்சத்திற் பொருந்திய, தென்புல வாணர்களும் = பிதிர்க்களும், கொடிதா நரகம் குடியேறினர் = மிகவுங் கொடிதாகிய நரகத்தைக் காணியாக்ஷியாகக் கொண்டனர் (எ-று.)

சசிவர்ணன் செய்த கொலை, களவு முதலிய தீயகர்மங்கள், விரைய (மூன்றாவது கணத்து)க் கெடுமாகலின், எதிர்காலத்துவரக் கடவதாய நரகத் துன்பத்திற்கு ஏதுவாதல் கூடாமையின் தம்மாற்றேன்றிய பாபவடிவ வியாபாரவாயிலாகக் காரணமென்பது பெற்றும்; வியாபாரம்-அதனிற்றேன்றி அதனிற்றேன்றற்பாலதனைத் தோற்றுவிப்பது. இங்குத் தீயகர்மங்களாற்றேன்றித் தீயகர்மங்களாற்றேன்றற் பாலதாகிய நரகப் பிராப்தியைத் தோற்றுவிப்பது பாபமாதலின் அது வியாபாரமெனப்படும். “தத்துவ ஞானத்தாற் கெட்டது’’ என்றல் முதலிய சுருதிகளானும் தீயகர்மங்களின் அழிவுபாடு, வியாபாரமன்று. இவ்வாறு, துறக்கத்திற்கு ஏதுவாகிய வேள்வி முதலிய சற்கருமத்தின் கண்ணும் உணர்க. எனவே, மூன்றாவது கணத்தில், அழிவுறும் தீயகர்மங்கள், தம்மாற்றேன்றும்



பாபவாயிலாக நரகவேதுவாம்; சாக்ஷாத் (நேரே) ஏதுவன்று என்பது, பெறப்பட்டது. மலம் ஏவிய தீவினை எனப் பிரித்து ஆணவமலத்தாலேவப்பட்டுச் சசிவர்ணன் செய்த தீயகர்மமென்று பொருள் செய்யினு மமையும். ஆணவமல மென்பதற்கு வியாபக அறிவை அணுவாகச் செய்யும் மலமென்பது பொருள்.

“வீணுரை கரும்பு மீசன் மெய்யுரை வேம்பு மாக்குந், தாணுவை யிறைஞ்ச லொட்டா தையலை யிறைஞ்சப் பண்ணு, நாணற விரத்தல் செய்யு நல்லவர்க் கீதல் செய்யா, ஆணவ மலத்தின் செய்தி யிவ்வண மறிந்து கொள்ளே” என்றசெய்யுள் இங்கு, உணரத்தக்கது.

அல்லது, ‘மலமேவியதீவினை’ என்பதற்குத் தீயவாதனைவடிவ மலத்தாலேவப்பட்டுச்செய்த தீயகர்மம் எனப் பொருள் கொள்ளுக. தீவினை என்னும் விதையினின்றும் தீயவாதனை எனவும், பாவமெனவும் கூறப்பட்ட இருமுளைகள், உண்டாமெனவும், பிறன்மனை விரும்பல் முதலிய தீயகர்மங்கள், நரகசாதனமல்ல; ஆனால், இஷ்டசாதனமாம் என்னுமுணர்ச்சியாற் றேன்றிய இச்சையைத் துணையாக்கொண்டு அவ்வாசனை எனப் பெயரிய பிரகிருதியானது, அத்தீயவற்றில் உயிரை ஏவுமெனவும், பாவமென்னும் மற்றோர் முளையானது நரக முதலிய துன்பங்களையாக்குமெனவும் ஒருதலை (துணிபு). அல்லது, ‘மலமேவிய தீவினை’ என்பதற்கு மலவடிவமாகப் பொருந்திய தீயகர்மமென்று பொருள் உரைப்பினும் அமையும். பிதிரராவார்-படைப்புக் காலத்து அயனாற் படைக்கப்பட்டதோர் கடவுட்சாதி; அவர்கட்கிடம் தென்றிசையாதலின், ‘தென்லவாணர்’ என்றார். இவர்கள், தம்மாலபிமானிக்கப்பட்ல பாரது வினையினனுசாரமாகத் துறக்க நரகங்களிற் டசெ

7523

வர்; அபிமானமென்றது, அகப்பற்றுப் புறப்பற்றுக்களை. 'மகிழ்' என்பது, வினைத்தொகை. 'வாழ்நர்' என்பது, 'வாணர்' என மருவிற்று; 'அம்பலவாணன்' என்றாற் போல.

(எ)

'பிதிர்க்கள் இவ்வாறாய கதியை யடைந்தனரெனின்,
இச்சசிவர்ணன் எவ்வாறாயகதியை யடைந்தனன்'
எனவினவத் தேவிகூறல்.

(8) மிகமே வியபுண் ணியபா வமெனும்
வினையின் பயன்மே லொருகா லமுறா
திகமே வருமென் பதனா லுளநோ
யெல்லா மிவனைச் செறவெய் தினவே.

இ-ள்.—'மிகவேவியபுண்ணிய பாவமெனும்=மிகுதியாக அமைந்துள்ள தர்மாதர்மமென்று கூறும், வினையின் பயன்=கர்மத்தின் பிரயோசனம், மேலொரு காலமுறாது=பின்னொரு ஜன்மத்தில் வந்து பொருந்தாமல், இகமேவரும் என்பதனால்=இச்சன்மத்திலேயே தொடரும்' என்று நூல் கூறுகின்றமையால், உளநோய் எல்லாம்=(ஆயுள்வேதத்திற் கூறப்பட்டு) உள்ள (நாலாயிரத்து நானூற்று நாற்பத்தெட்டு) வியாதிகள் யாவும் இவனைச் செற=இச்சசிவர்ணனனைக் கொல்ல, எய்தின=வந்து சூழ்ந்துகொண்டன; (எ-று.)

எல்லாவினையும் இப்பிறவியில் பயனளிக்குமென்பதில்லை; ஆனால், சில வினைகட்கு மாத்திரம் இவ்வாறாயவன்மையுண்டு என்பான், 'மிகமேவிய புண்ணிய பாவமெனும் வினையின் பயன்மே லொருகா லமுறா திகமே வரும்' என்றார். இவ்வாறு,

(அ)



"இப்பவ மதனி லீட்டு மிருவினை பயன ளித்தல்
எப்பவத் தென்னா மையமி தயமே யெண்ணா னன்றோ
வொப்புற விதைதெ ளித்தா லுடன்பல னளித்தல் போல
இப்பவ மீட்டு பாவ மிம்மையே யளிக்கு மென்றே."
என்று பிறருங் கூறியிருத்தல் காண்க. இங்குப் 'பயன்' என்றது இன்பத் துன்பங்களை. 'இகமே' என்பதிலுள்ள ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தது.

சசிவர்ணன் பெற்ற தாபத்தைக் கண்ணுற்றுப் பாகவெக்கியன்
அடைந்த துன்பத்தைத் தேவிகூறல்.

(9) தன்புத் திரநே யம்விடா மையினாற்
றவறாற் றவிவற் பெறுதந் தையுளந்
துன்புற் றினியென் னைகொலோ புதல்வன்
துயர்தீர் வகையென் றுசுழன் றனனே.

இ-ள்.—'தவறற்ற இவன் பெறுதந்தை=(சாஸ்திர நிஷித்த) குற்றங்கள் அமைந்துள்ள இச்சசிவர்ணனை ஈன்ற பிதாவாகிய பாக எக்கியன், தன் புத்திரநேயம் விடாமையினால்=தனது புத்திரவாஞ்சை விட்டு நீங்காமையால், உளந்துன்புற்று=மனம் வருத்தமுற்று, புதல்வன் துயர் தீர்வகை=புத்திரனது துன்பம் நீங்குதற்குரிய உபாயம், இனி என்னை என்று = மேல் என்னவாகும்?' என்று, சுழன்றனன்=கலங்கினன்; (எ-று.)

மகனுக்குற்ற பிணிகள் நீங்குதற்கு லௌகிகவுபாயமாகிய அவுடதங்களைக் கொடுத்தும் அவைகள் நீங்கப்பெறாமையால், 'இனியென் னைகொலோ புதல்வன் துயர் தீர் வகையென் றுசுழன் றனனே' என்றார். சசிவர்ணனது தந்தையின் பெயர் பாகவெக்கியனெனவும், தாயின்பெயர் விரத சீலையெனவும் நூல்கள் கூறும். இங்கு,

"மேகமார் கடல்வளை வியனிலத் தின்முன்
ஞகநா லணிமறை யவர்கு லத்துளான்
யோகமார் சிந்தையி னொருவ னுத்தமன்
பாகவெக் கியனெனப் பகருநா மத்தான்."

என்ற சூதசங்கிதை முத்திகண்டச் செய்யுள் உணரத் தக்கது. * பாகவெக்கியன்-பாகவெக்கியத்தை யுடையவன்; பாகவெக்கியம்-அஷ்டகை, ஆபார்வணம், சிராத்தம், சிராவணி, ஆக்கிரகாயணி, சைத்திரி, ஆச்வயுஜி எனப்படும் ஏழு எக்கியங்(வேள்வி)கள். கொல்,ஒ.ஏ அசைநிலைகள். (கூ)

'இவ்வாறு கலங்கிய பாகவெக்கியன் பின் யாது செய்தனன்'
என்று பேய் கேட்கத் தேவிகூறல்.

(10) ஒன்று மும்வினைத் துயர்துய்ப் பதலா
லொழிவிக் குமுபா யமுனக் கிலதே
யென்று மமறிந் தவனன் புவிடா
திவனைக் கொடுழன் றனனெங் கணுமே.

இ-ள்.—'வினைத்துயர் துய்ப்பது அலால்=(சசிவர்ணன் தானியற்றியுள்ள) தீவினையின்பயனாகிய துன்பத்தை அநுபவித்து ஒழிக்கவேண்டுமே யல்லாமல், ஒன்றும்=(* மணி, † மந்திரம், ‡ அவுடதமென்பனவற்றுள்) யாதொன்றானும், ஒழிவிக்கு முபாயம்=நிவிர்த்தி செய்யும்வகை, உனக்கிலதே=உனக்கில்லையே,' என்றும்=என்று அவ்வூரின் கண்ணுள்ள சாஸ்திரஞ்ஞர்கள் கூறினும், அறிந்தவன்=(அவ்வாறே, தானும் சாஸ்திரங்களால்) உணர்ந்தவனாகிய அப்பாகவெக்கியன், அன்பு விடாது=புத்திரவாஞ்சை விட்டு நீங்காமையால், இவனைக் கொடு=இச்சசிவர்ணனை(த் தலைமீது) எடுத்துக் கொண்டு, எங்கணும் உழன்றனன்=சர்வபுண்ணிய ஸ்தலங்களினும் திரிந்தனன் (எ-று.)

இங்கு, 'வினை' என்றது பிராரத்தவினையை. 'ஒன்றும் வினைத் துயர்துய்ப் பதலா லொழிவிக் குமுபா யமுனக் கிலதே' என்றது, வினையின் ஆற்றலை உணர்த்துதற்கு. இது 'கற்பகோடி நூறாயினும் வினையனுபவியாது வீயாது' என்ற ஸ்மிருதியாம்.

யோகப்பழக்கம், மருந்து, ஜபம், ஓமம், அர்ச்சனை, தீர்த்தயாத்திரை, பெரியோர் தரிசனம், அவர்கள் கிருபாநோக்கம் முதலிய உபாயங்கள் இல்லாவிடத்து இவ்வினை அநுபவியாது வீயாது என்பது ஸ்மிருதியின் பொருள். இவ்வாறு பொருள் கொள்ளாக்கால் புருடப்பிரயத்தனமே வீணாகும். வீணாயின், சிகிச்சைநூல் முதல் வீட்டுநூல்

---

* இருபத்தொரு வேள்விகளுள்ளே ஸோமஎக்கியம் ஏழு, ஹவிர் எக்கியம் ஏழு, பாக எக்கியம் ஏழு. அவற்றுள், ஸோம எக்கியங்களேழாவன:—அக்கினிஷ்டோமம், அதியக்கினிஷ்டோமம், உக்தியம், ஷோடசி, வாஜபேயம், அதிராத்திரம், அப்தோர்யாம மென்பன. ஹவிர் எக்கியங்களேழாவன:—அக்கினியாதேயம், அக்கினிஹோத்திரம், தர்சபூர்ணமாசம், சாதுர்மாஸ்யம், நிருடபசுபந்தம், ஆக்கிரயணம், ஸௌத்திராமணி என்பன. பாகஎக்கியங்களேழும் முன்னுரைக்கப்பட்டன.

* மணி - தன்னைத்தா னறிந்துநின்ற வைத்தியாசிரியன் கோசபீசம் முதலிய ஔடதங்களை முறைப்படி அமைத்துப் புடந்தீர்த்தெடுத்தமைத்ததோர் குளிகைக்கல்; அதனைத் தமரிட்டுத் தரிப்பவரது நோய் முதலியவைகள் உடனே நசிக்குமென்று அகத்தியர் கரிசலை முதலிய நூல்கள் கூறும்.

† மந்திரம்-பஞ்சாக்கர முதலியன.

‡ அவுடதம்-தாமிர பஸ்ப முதலியன.

ஈறுயுள்ள எல்லா நூல்களின் ஆரம்பமே பயனில்லாமற் போம் எனத் துணிந்து உழன்றனன் பாகவெக்கியன் என்பான், "இவனைக்கொடுழன் றனனெங் கணுமே" என்றார்.

"ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும்."

"ஊழையு முப்பக்கங் காண்ப ருலைவின்றித்
தாழா துஞற்று பவர்."

என்னும் குறட்பாக்கள் இங்குணரத்தக்கவை. (௧௦)

'பாகவெக்கியன் மகனை யெடுத்துக்கொண்டு பல புண்ணிய ஸ்தலங்களிற் சஞ்சரித்தலால், உற்ற பயன் யாது' எனப் பேய் வினவத் தேவிகூறல்.

(11) ஒருமா தவன்மற் றிவன்வே தனைகண்
டொழிவற் றுளவொன் றையுளத் துணரும்
பரமா கியஞா னிகள்கண் ணுறலே
பரமா விழ்தமென் றுபகர்ந்தனனே.

இ-ள்.—ஒரு மாதவன் = ஒரு சிறந்த தவமுடைய இருடியானவர், 'இவன் வேதனை கண்டு = (சசிவர்ணன் றந்தையாகிய) இப்பாகவெக்கியன் படுந் துன்பத்தைக் கண்டு, ஒழிவற்றுளவொன்றை = நீக்கமின்றி நிறைந்தஅத்துவிதப் பிரஹ்மத்தை, உளத்துணரும் = உள்ளத்தின்கண் (நானனச்) சாக்ஷாத்கரிக்கும், பரமாகிய ஞானிகள் = உத்கிருஷ்டமாகிய ஞானிகளது, கண்ணுறலே = கிருபாதிருஷ்டிவீழ்தலே, பரமாவிழ்தமென்று = மேலாகிய அவிழ்தம்' என்று, பகர்ந்தனன் = திருவாய்மலர்ந்தருளினார்; (எ-று.)

ஐந்து பேதமுமின்றி விளங்குகின்றதென்பான், பிரஹ்மத்தை 'ஒழிவற்றுளவொன்றை' என்றார். * ஐந்து

* இவ்வைந்து பேதங்களின் கண்டனயுக்திகள் விசாரசாகரம் 3, வது தரங்க விளக்க விரையிற்காண்க.



பேதங்களாவன:—ஜீவேஸ்வரபேதம், ஜீவசடபேதம், ஈஸ்வரசடபேதம், ஜீவஜீவபேதம், சடசடபேதம். இறைவனது உண்மைவடிவத்தை ஐயந்திரிபின்றி, உள்ளங்கைநெல்லிக்கனிபோல், பிரத்யக்ஷமாய் உளத்தின்கண் உணரமுடியுமேயல்லாமல் வேறெவ்விடத்து முணரமுடியாதென்பார் 'உளத்துணரும்' என்றார். இங்கு மாதவ னென்றது-தேவபக்த முனிவரை. இதனை,

"என்றி ரங்கு மிருபிறப் பாளன்முன்
மன்ற வெம்மரு ளாலொர் மறைமுனி
ஒன்று தேவபத் தப்பெய ருள்ளவன்
அன்ற டுத்தனன் மற்றவ னன்மைபோல்."

என்ற சூதசங்கிதை முத்திகண்டச் செய்யுளாலுணர்க. பரமாவிழ்தம் = பூபதி அவிழ்தம். (௧௧)

'தேவபக்தர், முற்கூறியதையே விரித்துரைக்கின்றார்' என்றல்.

(12) தானந் தமிலா ததனைத் தருவான்
சத்தீச் சுரமென் னுமிடந் தனில்வாழ்
* மாநந் தபரா யணரென் பவர்நின்
மைந்தற் குறுநோய்க் குமருந் தெனவே.

இ-ள்.—'அந்தமிலாத = (தேசகாலவஸ்து) பரிச்சேதரகித, தனைத்தான் தருவான் = தனது யதார்த்த சொரூபத்தைத் தான் கொடுத்தருளும் பொருட்டு, சத்தீச்சுரமென்னுமிடந்தனில்வாழ் = கோகுலாபுரமென்னும் க்ஷேத்திரத்தின்கண் வாழ்கின்ற, மாநந்தபராயணர் என்பவர் =

* சூதசங்கிதை முத்திகண்டத்தில், 'மஹாநந்தபராயணர்' என்றிருத்தலின் இங்கு, 'மாநந்திபராயணர்' என்பது 'மாநந்தபராயணர்' எனத் திருத்தப்பட்டது.

மஹாநந்த பராயண ரென்னும் பெயரையுடைய முனிவரே, நின்மைந்தற்கு = உனது புத்திரனை, உறு = பொருந்திய, நோய்க்கு = வியாதிக்கு, மருந்து = அவிழ்தமாவார்;' என = என்று (அம்மாதவர்) கூற, (எ-று.) 'பதமெய்தி மொழிந்தனன்' என, அடுத்த கவியோடு தொடர்ந்து முடியும்.

(1) எது எல்லாவிடத்துமின்றி யாதேனுமோரிடத்திருக்கின்றதோ அது, தேசத்தால் அந்தமுடையது. உதாரணம்:—குடம். ஆன்மா, எங்கும்வியாபித்திருத்தலானும், சர்வ தேசமும் ஆன்மாவின்கண் மாயையால், கற்பிக்கப்பட்டிருத்தலானும் அது, தேயத்தால் அந்தமுடையதன்று.

(2) எது உற்பத்திக்கு, முன்னும் அழிவுபாட்டிற்குப் பின்னும் இல்லையோ அது, காலத்தால் அந்தமுடையது. உதாரணம்:—உடல் முதலியன. ஆன்மா, அவ்வாறின்மையின் அது, காலத்தால் அந்தமுடையதன்று.

(3) எந்த வஸ்துவிற்கு அன்னிய வஸ்துக்களோடு பேதமுண்டாகிறதோ அந்த வஸ்துவிற்கு வஸ்துவால் அந்தமுண்டு. உதாரணம்:—குட முதலியன. ஆன்மா, அவ்வியல்பின்றி எல்லாவற்றின் சொரூபமாய் இருத்தலின் அது, வஸ்துவால் அந்தமுடையதன்று.

இவ்வாறுரிய இலக்கணமமைந்த தமது ஆத்ம சொரூபத்தைச் சாதனம் நான்குமுடைய அதிகாரிகட்கு அங்கை நெல்லிக்கனிபோல, உபதேசிக்கும் சற்கிருத்தியமுடையவர் என்பான், 'தானந் தமிலா ததனைத் தருவான்' என்றார். அந்தம், பாரம், பரிச்சேதம் என்பன ஒரு பொருட்கிளவி. 'அந்தமிலாத-தனை' என்று பிரிக்காமல், 'அந்தமிலாததனை' என்று கொண்டு அந்தமில்லாத பிரஹ்மத்தை என்று பொருளுரைப்பினும் அமையும். இங்கு



அன் சாரியை. சத்தீச்சுரமென்னும்க்ஷேத்திரம், விருத்தாசலத்திற்கு வடகீழ்த்திசையிலுள்ளது; அது, சிவபெருமானைச்சத்திபூசித்தமையால், சத்தீச்சுரமென்னும்பெயரையும் கோ(நந்திதேவர்) பூசித்தமையால், கோபருவதமென்னும் பெயரையும்பெற்றது. இதனை, "அத்தலமு நந்திபெயராலேகோபருப்பதமாய்ச், சத்திபெயராற்சத்தீச்சுரமுமாய்த் தழைத்துளதால்" என்ற விருத்தாசலச்செய்யுளாலுணர்க. மா + ஆநந்த + பர + அயநர் = பேரின்பத்தை மேலான இடமாகவுடையவர்; எனவே, சீவன்முத்தி விலக்ஷணானந்தத்தில் மூழ்கியவர் என்பதாம். இம்முனிவருக்கு மஹாகாருணிகர்என்றும் பெயர் இருப்பதை வடமொழிச் சூதசங்கிதைகொண் டுணர்க. இங்கு,

இருநிலஞ்செய்தவந்தெரிப்பானிலகுறுமத் தலத்தினிடைப்
பெருகுகருணையனறமே பிறங்குநய குணத்தினன்சீர்
மருவுமறை முடிவுணர்ந்தோன் மகானந்த பராயணனென்
றொருபெயர்கொள் சிவயோகி யொப்பிலா னொருவனுளன்

என்ற சூதசங்கிதைச் செய்யுள் உணரத்தக்கது. தருவான் என்னும் வினையெச்சம் வாழ் என்னும் வினையைக் கொண்டு முடிந்தது. 'மைந்தற்கு' என்பதில் இரண்டனுருபு இருக்குமிடத்தில் நான்கனுருபு இருத்தல் வேற்றுமை மயக்கம். 'நோய்க்கு மருந்து' என்பது நோய் நீங்குதற்குத் தரும் மருந்து எனப்பொருள்படுதல்காண்க. 'தான்' என்பது எழுவாயுருபுபடநின்றது. 'தருவான்' என்பதில் தருதல்-இடவழுவமைதி. இங்கு,

"அவற்றுள்,
தருசொல் வருசொ லாயிரு கிளவியுந்,
தன்மை முன்னிலை யாயி ரிடத்த." என்னுந் தொல்

காப்பியச் சூத்திரம் உணரத்தக்கது. (௧௨)

'அந்த மாதவர் மொழியைக் குருமொழியாகக்கொண்ட
பாக எக்கியனது மேற்செய்கை யாது?' என்று
பேய் கேட்கத் தேவிகூறல்.

(13) முடியா வுபதே சமீதென் றவனும்
முனிவன் பதமெய் திமொழிந் தனனிக்
கொடியான் வெருவா துயிற் றியநோய்
கூறற் கரிதா யகொடுந் தொழிலே.

(14) ஈங்குன் றிருமுன் பகரும் படியோ
விவனெய் தியதீ வினையென் னவெலா
நீங்கும் படிதன் னனுபூ தியினு
னிகழும் விழிவைத் தனனின் மலனே.

இ-ள்.—(13) 'இது=இம்மாதவரது உரையே, முடி
யா உபதேசம்=முடி போன்ற (சிரேஷ்டமான) உபதேச
மாகும்,' என்று=என்றுணர்ந்து, அவனும்=அப்பாக
எக்கியனும், 'முனிவன் பதமெய்தி=(சத்தீச்சுரமென்னுந்
தலத்திற்குச் சென்று ஈசானகங்கையில் ஸ்நானஞ்செய்து
சத்தீச்சுரனை வணங்கி மஹாநந்த பராயணராகிய) முனி
வரது திருச்சந்நிதியை அடைந்து, இக்கொடியான்=இக்
கொடிய பாவியானவன், வெருவாது=(சிறிதும்)அஞ்சா
மல், குயிற்றிய=இயற்றிய, நோய்=துன்பத்தைத் தரும்,
கொடுந்தொழில்=கொடிய செய்கைகள், கூறற்கு அரி
தாய=சொல்லுதற்கு அரியவை; (14) (அன்றியும்),இவன்
எய்திய தீவினை=இச்சசிவர்ணன் குயிற்றிய தீவினைகள்,
ஈங்கு உன் திருமுன்=இவ்விடத்துத் தேவரீரது திருச்
சந்நிதானத்தில், பகரும்படியோ=சொல்லுந்தன்மையன
வோ,' என்ன=என்று, மொழிந்தனன்=சொன்னான்;
[பாகவெச்சன் விண்ணப்பித்தவளவில், மாநந்தபராயண
முனிவர் செய்த அனுக்கிரகத்தைத் தேவிகூறல்.] நின்



மலன்=மலரகிதரான மாநந்தபராயணர், எலாம் நீங்கும்
படி=(நோய்களுக்கு நிமித்தமாகிய) சகல தீவினைகளும்
நீங்கும்வண்ணம், தன்னனுபூதியினால்நிகழும்=சுவானு
பூதியினால் விளங்கும், விழிவைத்தனன்=கிருபாதிருஷ்டி
யை வைத்தனர்; (எ-று.)

(13) முனிவன்=மனனசீலன், குறித்த பொருளின்
றொடர்ந்த வெண்ணமுடையவன் என்பதாம். இங்குக்
'கொடுந்தொழில்' என்றது, வர்த்தமானசரீரத்தில்நிகழ்ந்த
தீயதொழில்களை. 'முடியா' என்பதிலுள்ள 'ஆ' என்னும்
ஆக்கச்சொல் உவமப்பொருள் குறித்துநின்றது.

'முனிவன் பதமெய்தி...............ஈங்குன் றிருமுன்
பகரும் படியோ என்ன மொழிந்தனன்' எனக்கூட்டுக.

(14) பெரியோர்களிடத்துக்குற்சித (அருவருப்பான)
மொழிகளைக் கூறல் கூடாதாதலின் 'ஈங்குன் றிருமுன் பக
ரும் படியோ விவனெய் தியதீவினை' என்றான் பாகஎக்கி
யன். அனுபூதியெனினும் அனுபவமெனினும் ஒக்கும்.
அனுபூதியாவது, நினைவின்வேறாயஞானம். உதாரணம்:—
இதுகுடம் என்றல் முதலிய உணர்ச்சிகள். நினைவு-வாசனை
மாத்திரையாற் றோன்றும் ஞானம். உதாரணம்:—அவள்
எனது தாய் என்றல் முதலிய உணர்ச்சிகள். இவ்வனுபூதி
யும், மெய்-பொய் என இருதிறப்படும். பொய்யனுபூதி,
பஞ்சகோசங்களுள் ஒவ்வொன்றையும் நான் என்னும்
உணர்வும், உலகுமெய் என்னும் உணர்வுமாம். மெய்யனு
பூதி, பஞ்சகோசவிலக்ஷண ஆன்மாவே பரசிவம் என்னும்
ஐக்கிய ஞானமாம். நானே பிரஹ்மம் என்னுந் தியான
மன்று. உலகு பொய்என்னும் உணர்வும் மெய்யனுபூதி
எனப்படும். இங்கு, 'அனுபூதி' என்பதனால், மெய்யனு
பூதியைக் கொள்க. (கச)

திருக்கண் வைத்த மாத்திரத்தில் சசிவர்ணன் அடைந்த பயனைத் தேவிகூறல்.

(15) கணியா தபவக் கடுவா னதிருக்
கண்வைத் தலும்விட் டனகா துகடும்
பிணியா வையுநல் லபிதா விறைதாள்
பேணிப் பணியென் றுபெயர்ந் தனனே.

இ-ள்.—கணியாத பவம் = கணித்(அளவிட்டறி)தற்கரியபிறவிநோய்க்கு, கடுவான திருக்கண் வைத்தலும் = விஷம்போன்ற அழகிய கிருபாதிருஷ்டியை வைத்தமாத்திரத்தில், காது கடும்பிணி யாவையும் விட்டன = இவனைக் கொல்வதற்குச் சூழ்ந்த கொடியநோய்களனைத்தும் விட்டு நீங்கின; [‘இத்தகைய மகாத்மியத்தைக் கண்ணுற்ற பாகவெக்கியன், மேற்செய்த காரியம் யாது’? எனத் தேவி கூறல்.] நல்ல பிதா = சற்குணங்கள் நிறைந்துள்ள பாகஎக்கியனென்னும் பிதாவானவன், இறை தாள் = தலைவன் திருவடியை, பேணிப்பணி = விஸ்வசித்து (மன-மொழி-மெய்க ளென்னும் முக்கரணங்களானும்,)வழிபட்டுய்தி, என்று = என்று கூறி, பெயர்ந்தனன் = தனது இடத்திற்குச் சென்றனன்; (எ-று.)

சிவான்மாவைப் பிறவி முடிவின்றி அனாதியாய்த் தொடர்ந்து வருதலின் ‘கணியாதபவம்’ என்றார். தத்துவ ஞானத்தினும் வன்மையானது பிராரத்தம்; இதற்குச் சத்துரு, சற்குருவின் கிருபா திருஷ்டி, தீக்ஷை முதலியன என்று சாஸ்திரங்கள் கூறலின், சசிவர்ணனைப்பற்றிய பிராரத்தவினையும், அதன்பயனாகியவியாதியும்மாநந்தபராயணரது கிருபாதிருஷ்டியால், நீங்கின. இதன் விரிவை 10ம், பாட்டின் உரையிற்காண்க.



பொருட்செலவு, சரீர சிரமம் முதலிய உபத்திரவங்களைத் தானடைந்து பெரியோர் வாயிலாகவே, புத்திரனுக்குற்ற வியாதியை நிவிர்த்தித்தும் பின் அவன் தனக்கு உபகாரியாகவேண்டுமென்று கருதாமல் அவனது ஆத்மலாப மாத்திரத்தையே விரும்பினமையின் ‘நல்லபிதா’ என்றார். ஈஸ்வரப் பணியினும் குருவின் பணி மிகச் சிறந்தது. ஏனெனின் ஈஸ்வரப்பணி அதிர்ஷ்டபயனுக்கு ஏதுவாம். குருவின்பணி அதிருஷ்டம்-திருஷ்டம் என்னும் இருபயனுக்கும் ஏதுவாம். எது தருமாதருமங்களின் உற்பத்திவாயிலாய்ப் பயனுக்கு ஏதுவாமோ அதனை அதிருஷ்டபயனுக்கு ஏதுவென்பர். எது தருமாதருமங்களின் உற்பத்தியின்றி நேரே பயனுக்கு ஏதுவாமோ அதனைத் திருஷ்டபயனுக்கு ஏதுவென்பர். கடவுட்பணி தருமத்தின் உற்பத்திவாயிலாக உட்கரணத் * தூய்மை வடிவபயனுக்கு ஏதுவாதலின், இதனை அதிருஷ்டபயனுக்கு ஏதுவென்பர். குருவின்பணி, தருமாபேக்ஷையின்றி ஆசிரியனது பிரசன்னத்தன்மையால், உபதேசவடிவ பயனுக்கு ஏதுவாயிருத்தலின் திருஷ்டபயனுக்கு ஏதுவென்பர். அன்றியும், குருவின்பணி தருமத்தின் உற்பத்திவாயிலாக உட்கரணத் தூய்மைவடிவ பயனுக்கு ஏதுவாயிருத்தலின் அதிருஷ்டபயனுக்கும் ஏதுவென்பர். இவ்வியல்பால், கடவுட்பணியினும் குருவின்பணி மிகச் சீரியதாம்; ஆதலின், மிக்க அன்போடும் பிரஹ்மவித்தாகிய ஆசிரியனைப் பணியவேண்டும் என்பான் ‘பிதா இறைதாள் பேணிப்பணி’ என்றான். ‘யாவை’ என்னும் அஃறிணைப்பன்மைப்பெயர் எல்லாமென்னும் பொருள்பட நின்றது. ‘கடுவான’ என்பதில் ஆக்

* தூய்மை—மல(பாப) நீக்கம்; இது, அனுமானத்தாலறியப்படுதலின், அதிருஷ்டபயன் எனப்படுகிறது.

கச்சொல் உவமைப்பொருள் குறித்து நின்றது. (௧௫)

பிதா அகன்றபின் சசிவர்ணன் குருவிற்கு இயற்றிய
பணிவிடையின் பாகுபாட்டைத் தேவி அருளல்.

(16) இடனே முதலா கவுவந் திறையோ
னேவும் பணிசெய் திவனும் சிலநா
ளுடனே யிவனே திருமே னிதனக்
குரியா னெனவுற் றனனும் பனெடே.

இ-ள்.—இவனும் = இச்சசிவர்ணனும், உவந்து = சந்தோஷித்து, இறையோன் = ஆசிரியரால், ஏவும் = ஏவப்பட்ட, இடனே முதலாக = தானம், (ஆத்தம்) முதலியனவாக, பணிசெய்து = பணிகளைக் (குறைவற) இயற்றி, சில நாளுடனே = சில தினங்களுக்குள், இவனே = இச்சசிவர்ணனே, திருமேனிதனக்கு உரியானென = (ஆசிரியர்) திருமேனியைப் பாதுகாத்தற்கு உரிய சீடனென்று உலகங் கொண்டாடும்படி, உம்பனெடே உற்றனன் = ஆசிரியரோடு (தேகத்தின்சாயைபோல்)விட்டு நீங்காதிருந்தனன்; எ-று.

குருவுக்கு இயற்றும் பணிவிடை ஆத்தம், அங்கம், தானம், சற்பாவம் என நால்வகைப்படும். ஆசிரியர் குறிப்பறிந்து சொல்லாமலே நடத்தல் ஆத்தப்பணிவிடை; ஆத்தம்-அன்பு. குருவின்றிருவடியைக் கழுவல் முதலியன அங்கப் பணிவிடை; அங்கம்-உறுப்பு. குருவினது மனை, நிலம் முதலானவற்றைக் காத்தலே தானப்பணிவிடை; தானம்-இடம். குருவைச் சாக்ஷாத் பரசிவம் எனக் கருதுவதே சற்பாவப்பணிவிடை; சற்பாவம்-உண்மைப்பாவனை அல்லது நல்ல பாவனை. இப்பணிகளை ஏற்கும் குருமூர்த்தியானவர், துறவறத்திலிருப்பினுமிருப்பர்; இல்லறத்திலிருப்பினுமிருப்பர். இதனை வேறு நூல்களிற் காணலாம்.



"ஆத்தமுட னங்கமே தானஞ்சற் பாவ
மாமவற்றுட் குருபரனுக் கனுகூல விருத்தி
யாத்தமுயர் குருபரன்குற் றேவலே யங்க
மருட்குரவர்க் குரியமனை நிலமுதலா மவற்றைக்
காத்தலது தானமாஞ் சற்குருவே மெய்யாக்
கண்டசிவ மெனநம்பு மதுவேசற் பாவம்."

என்று வேதாந்தசூடாமணி கூறுவது இங்குஉணரத் தக்கது. இவற்றின் விரிவைஉணரவேண்டின்விசாரசாகரம் மூன்றுவது தரங்கம் காண்க. 'உடன்' என்னும் மூன்றும் வேற்றுமைச் சொல்லுருபு ஏழாம் வேற்றுமைப் பொருள் தந்து நின்றமையின் அது, வேற்றுமை மயக்கமாம். 'இவனே' என்பதிலுள்ள ஏகாரம் பிரிநிலை; மற்ற ஏகாரங்கள் அசை. (௧௬)

சசிவர்ணன் ஆசிரியர்க்குப் பணிவிடைபுரிந்து பெற்ற
பயனைத் தேவிகூறல்.

(17) நன்றாய் முனிதாள் வழிபா டதனு
னுவிதமா னபிறப் பினைவிட்
டொன்றா கியவீ டுணருத் தமர்கட்
குளசா தனநா லுமுதித் தனவே.

இ-ள்.—(சசிவர்ணன்), முனிதாள் = ஆசிரியரது திருவடிகளில், நன்றாய் = (அவர்க்குச்) சந்தோஷமுண்டாக, வழிபாடதனால் = வழிபட்டு வந்ததனால், நானுவிதமான பிறப்பினைவிட்டு = சுர, நர, திரியக்முதலியஎழுவகைப்பிறப்புக்களையும்நீக்க, ஒன்றாகிய = அத்துவிதமாகிய, வீடு = முத்தியை, உணர் = (அடைய) எண்ணும், உத்தமர்கட்கு = உத்தமாதிகாரிகளாகியமுமுட்சுகட்கு, உள = உளவாகிய, சாதனநாலும் = விவேகாதிநான்கு சாதனங்களும், உதித்தன = (அவனுக்குத்) தோன்றின; (எ-று)

நானுவிதமான பிறப்பு என்பதை,

"ஊர்வ பதினொன்று மொன்பதா மானுடம்
நீர்பறவை நாற்காலோர் பப்பத்தாம்-சீரிய
பந்தமாந் தேவர் பதினு லயன்படைத்த
அந்தமில்சீர்த் தாவரநா லைந்து."

என்னும் வெண்பாவானுணர்க. நான்கு சாதனமாவன:—விவேகம், வைராக்கியம், சமாதிசட்கசம்பத்தி, முமுட்சுத்வம் என்பனவாம். விவேகம், ஆன்மாநித்தியம், ஆன்மாவினும் வேறுபட்ட யாவும் அநித்தியம் எனச் சுருதி, மிருதி, யுக்திகளைக் கொண்டு ஆராய்தல்; நித்தியம் அழிவுபாட்டிற்குப் பிரதியோகியாகாதது; அநித்தியம் அழிவுபாட்டிற்குப் பிரதியோகியாவது. வைராக்கியம் இம்மை, மறுமை என்னும் இருவுலகங்களினும் உள்ள அநுகூலபோகம், போகசாதனம் என்பவற்றில் இச்சையில்லாமை. சமாதிசட்கசம்பத்தி - சமம், தமம், விடல், சகித்தல், சமாதானம், சிரத்தை யென்னும் ஆறின் அடைவாம். சமம்-அகக்கரணத்தினுள்ள விடயசிந்தனத்தின் நிக்ரகம். தமம்-செவி முதலிய புறக்கரணங்களை ஓசைமுதலிய புலன்களினின்றும் தகைதல். விடல்-விதிபூர்வகமாய்ச் சர்வகருமங்களையும் நீக்கல். சகித்தல்-சீதம் உஷ்ணம், சுகம் துக்கம், மானம் அவமானம், நிந்தை துதி என்பவற்றைப் பொறுத்தல். சமாதானம்-கேட்டல் முதலானவற்றின்கண் ணுண்டாம் சித்தத்தின் ஒருமை. சிரத்தை-குரு, வேதாந்த வாக்கியங்களினுள்ள விஸ்வாசம். முமுட்சுத்துவம்-முத்தியின்கண்ணுண்டாம் விருப்பம்.

இந்நான்கு சாதனமும் அதிகாரிக்கு விசேடணம் (இலக்கணம்) என்று ஸ்ரீசங்கர பகவத் பாதாசாரியர் கூறியுள்ளார். சிலர் முமுட்சுத்வமொன்றே அதிகாரிக்கு விசே



டணமென்றும், விவேக முதலியவை அதற்குச் சாதனமென்றும் கூறுப. இவற்றைப் பெற்றவன் பிரஹ்ம விசாரத்திற்கு அதிகாரியாகின்றான். ஒன்றாகிய வீடு-கைவல்ய முத்தி. 'நன்றாய்' என்பதிலுள்ள 'ஆய்' என்னும் வினை எச்சம் 'ஆக' எனப் பொருள்பட்டது; எச்சத்திரிபு. 'பிறப்பினைவிட்டு' என்பதில் 'விட்டு' என்பது 'விட' என்னும் செயவென்னெச் சத்திரிபு. இவ்வினையெச்சம் 'உதித்தன' என்னும் வினைகொண்டு முடிந்தது. (௧௭)

சசிவர்ணன் தனது குறையை ஆசிரியர் சந்நிதியில்
விண்ணப்பஞ் செய்யும்பொருட்டு, அவரது
அனுமதியை விரும்பல்.

(18) முனிவன் றிருமுன் புளதன் குறைதான்
மொழிவன் சிலவஞ் சலிகுஞ் சியதாய்ப்
பனிவந் திருகண் கள்பதங் களிலே
பலகால் வலம்வந் துபணிந் தனனே.

இ-ள்.—உளதன் = உள்ளதன்னுடைய, சிலகுறை = சிலகுறைகளை, முனிவன் திருமுன்பு = ஆசிரியரது அழகிய சந்நிதியில், தான்மொழிவன் = தான் (சசிவர்ணன்) கூறும் பொருட்டு, அஞ்சலி குஞ்சியதாய் = கும்பிட்டகை தலைமீதுளதாக, இருகண்கள் பனிவந்து = இரண்டு கண்களினும் தாரைதாரையாய் நீர்பெருக, பலகால் வலம் வந்து = பன்முறை பிரதக்ஷணஞ்செய்து, பதங்களிலே பணிந்தனன் = இரண்டு திருவடிகளினும் (விதிப்படி) வணங்கினான்; (எ-று.)

இங்குப் பெருகியநீர் துன்பக்கண்ணீர் என்க. குருபரனை, மூன்று தரமாயினும் அல்லது ஐந்து, ஏழு, ஒன்பது, பதினைந்து, இருபத்தொரு தரமாயினும் பிரதக்ஷணஞ் செய்தலும்; மூன்று தரமாயினும், அல்லது ஐந்து, ஏழு, ஒன்பது, பன்னிரண்டு தரமாயினும் நமஸ்காரஞ்

செய்தலும் வேண்டும். இங்குச் சசிவர்ணன், பக்தியின் மேலீட்டால், இவ்விதிகளைக் கடந்து, பிரதக்ஷணமும், நமஸ்காரமும் செய்தனன் என்பான் 'பலகால் வலம்வந்து பணிந்தனனே' என்றார்.

"எழுமூன் றல்லா லைம்மூன் றென்பா
னேழைந்து வழுவா மூன்றுஞ் செய்வலம்"

என்பதுமுதலியன இங்கு உணரத்தக்கவை. அஞ்சலி-இருகரங்களையும் கூப்பல். குஞ்சி-குடுமி; இது சிரத்திற்காகிவந்தது. 'ஆக' எனற்பாலது 'ஆய்' எனத்திரிந்து நின்றது. 'வந்து' என்பது வரவென்னுஞ் செயவெனெச்சத்திரிபு. வானீற்று வினைஎச்சம் 'வன்' என முதல் குறுகிற்று. 'தான்' என்பது இங்கு எழுவாயுருபு பட நின்றது. 'குஞ்சியதா' எனவும் பாடம். (௧௮)

ஆசிரியர், 'துன்புறுதற்குரிய காரணமென்னை?' என, அதற்குச் 'சசிவர்ணன் பிறவிக்கடலைக் கடப்பதெப்படி'? என்று வருந்தினேன் எனல்.

(19) அருளே வடிவா கியமா முனிதா
னறியா தவர்போ லவழுங் கலுறும்
பொருளே தெனமைந் தனடுங் கினனிப்
பொல்லா தபவப் புணரிக் கெனவே.

இ-ள்.—அருளேவடி வாகிய மாமுனி = கருணையே வடிவமாய் விளங்கும் சிறந்த (மாநந்தபராயண) முனிவர், தான்அறியாதவர் போல = தாம்(சர்வஞ்ஞரா யிருந்தும் சீடனது உள்ளக் கருத்தை) உணராதவர்போல, அழுங்கல் உறும்பொருள் ஏது=(ஏமைந்த!) நீ வருந்தற்குரிய காரணம் யாது? (அதனைக்கூறுதி), என=என்று ஆஞ்ஞாபிக்க, (அதற்கு), மைந்தன் = (சசிவர்ணனென்னும்) புத்திரன், இப்பொல்லாத பவப்புணரிக்கு=(சுவாமின்!) இக்



கொடியபிறவிக்கடலுக்கு, நடுங்கினன் = பயந்தனன்;(ஆதலால், அதன் நிவிர்த்தியுபாயத்தை நாயேனுக்குத் தேவரீர் அருளல்வேண்டும்),எனவே = என்றுவிண்ணப்பிக்க,எ-று. 'இவைகூறிடுமே' என அடுத்த கவியோடு தொடரும்.

"இந்தவி டும்பையு டம்புறு மேது
தந்தையெ னப்புகழ் கின்றிலர் தக்கோ
ரந்தமி லாதவ கண்டமு நம்முட்
டந்தவர் தந்தையெ னச்சமை வுற்றார்"

என்று பிரமகீதையில்,குருவைத் தந்தையெனக்கூறுதற்கியைய ஈண்டுச் சீடனை 'மைந்தன்' என்றார். முத்தாபத்திற்கும் ஏது பூதமாதலின் 'பொல்லாதபவம்' என்றார். காரண காரியத் தொடர்ச்சியாய்க் கரையின்றிவருதலின் 'பவப்புணரி' என்றார். இங்குப் 'பொருள்' என்னுஞ்சொல் காரணமென்னும் அருத்தமுடையது. 'தானறியாதவர்' என்பது ஒருமையிற்பன்மைமயங்கியவழுவமைதி. 'தான்' என்பது எழுவாயுருபுபட நின்றது. (௧௯)

ஆசிரியர், சீடனுக்குப் பிறவிக்கடலின் அகலத்தைத் தொகுத்துத் திருவாய்மலர்ந் தருளல்.

(20) வெருவும் பிறவிக் கடல்வித் தரமுன்
வேதா கமகீ தைவிளம் புமதைக்
குருவுந் தனதன் பன்மனத் தளவிற்
கொளுமா றுதொகுத் திவைகூ றிடுமே.

இ-ள்.—வெருவும் பிறவிக்கடல் வித்தரம்=(முத்திவிருப்புடையோர்) அஞ்சத்தகுந்த பிறவிக்கடலின் விரிவை, முன் = முன்னர், வேதாகமகீதை விளம்பும் = வேதம், ஆகமம், கீதை ஆகியஇவைகள் விளம்பியுள்ளன; அதை = அப்பிறவிக்கடலின்விரிவை, குருவும் = ஆசிரியரும், தனது

அன்பன் மனத்தளவில்=தமது அன்பனுகிய சீடனது புத்தியின் (கிரகணசக்தி) அளவில், கொளுமாறு=(அவன்) கிரகிக்கும்படி, தொகுத்து=சுருக்கி, இவை கூறிடும்=இவற்றைக் கூறுகிற்பர்; (எ-று.)

"பந்தத்துருவங்கேட்டுணரிற்பரவீட்டுருவமேல்வெளியாம்"என்பதனல்,சசிவர்ணனுக்குப்பயத்திற்குஏதுவாகிய பிறவிக்கடலின்றன்மையை ஆசிரியர் முன்னர்க்கூறத்தொடங்கினர்.கு+ரு=குரு; கு=அஞ்ஞானமென்னும்இருள்; ரு=ஞானமென்னும் ஒளி. ஆகவே, ஞானத்தால், அஞ்ஞானத்தை யொழிப்பவர் குருவாவர் என்பது ஆம்: "சகல சாத்திரவுணர்ச்சியும், பிரஹ்மநிட்டையும் உடையவர் குருவாவர்" என்னும் இலக்கணம் இங்கு உணரற்பாலது. கோடி பிரம்மாக்களின் ஆயுளினுலும், மாயையாலாக்கப்பட்ட பதார்த்தங்களின்நிருபணத்திற்கு முடிவுண்டாகாதென்பதனை ஸ்ரீவால்மீகர் வாசிட்டத்தில் அனேக இதிகாசங்களால், நிருபித்த சித்தாந்தத்தைக் கொண்டு ஆசிரியர்சுருக்கமாக உபதேசிக்கத்தொடங்கினர்என்பான் 'தொகுத்து' என்றுர் 'வித்தாரம்'என்பது வித்தரம் எனக்குறுகிற்று.'குருவும்' என்பதிலுள்ளஉம்மைஇறந்ததுதழீஇநின்றது.

(௨௦)

பிறவி, எவ்வுறுப்புக்களின் ஒப்புமையைக்கொண்டுகடல்வடிவாயுருவகஞ் செய்யப்பட்டதோ அவ்வுறுப்புகளின் விசேடங்களை வாணிக்கின்றுர்.

வேறு.

(21) மரண பவங்க ளான புனலை யுடையது
மதியை விழுங்கு காம வரவு பெரியது
கரண வொழுங்க ருது விடய விரைநுகர்
கணமொ டியங்கு மீன மிகவு முகள்வதே.



இ-ள்.—மரணபவங்களான புனலை உடையது=சனனமரணங்களாகிய நீரையுடையது; மதியை விழுங்கு காம அரவுபெரியது=புத்தியென்னும் சந்திரனை விழுங்குகின்ற ஆசையென்னும் சர்ப்பத்தை மிகவும் உடையது; ஒழுங்கு அருது=தத்தம் முறைதவருது, விடய இரைநுகர்=விடயமாகிய உணவைப் புசிக்கின்றதும், கணமொடு இயங்கும்=கூட்டம் கூட்டமாகச் சஞ்சரிக்கின்றதுமாகிய, கரண மீனம்=பொறிகள் என்னும் மீன்கள், மிகவும் உகள்வது=மிகவும் குதிக்கப் பெறுவது; (எ-று.)

பிரசித்த சமுத்திரத்தின்கண்ணுள்ள நீர், இவ்வளவென்று அளவிட்டுக் கூறல் கூடாததுபோல, சனனமரணமும் இவ்வளவென்று அளவிட்டுக் கூறல் கூடாமையின் 'மரணபவங்க ளான புனல்' எனவும், அரவு, சந்திரனை விழுங்குவதுபோல, காமம், புத்தியை விழுங்குவதால்' 'மதியை விழுங்கு காம வரவு' எனவும், கடலின் கண்ணுள்ள மச்சங்கள் இங்குமங்கும்ஓடுகின்றன;தவிடுமுதலிய இரைகளைப் புசிக்கின்றன; அவைபோல, கண் முதலிய கரணங்களும் விஷயங்களில் அலைகின்றன; உருவ முதலிய இரைகளை உட்கொள்ளுகின்றன; அதனல், 'கரண............ மீனம்' எனவும் உருவகித்துள்ளார் ஆசிரியர்.

மரணம்-உடற்கும்,பிராணனுக்கும்உண்டாம்இறுதிக்கண்ணதாகிய சையோகத்தின் அழிவுபாடு. பவம்-உடற்கும், உயிர்க்கும் உளதாம் முதற்கண்ணதாகிய சையோகம். காமம்-இவ்விடயம் எனக்கு எப்போது கிடைக்குமென்னும் அவாவிசேடம். இது, மதியைக் கெடுக்குமென்பதை, "சப்தாதி விஷயங்களை மனத்தால், தியானஞ்செய்

யும் புருஷனுக்குஅவ்விஷயங்களிடத்தே *சங்கமுண்டாம்; அச்சங்கத்தால்,காமமுண்டாம்.' அக்காமத்தால்,†குரோத முண்டாம்; அக் குரோதத்தால், ‡ சம்மோக முண்டாம்; அச்சம்மோகத்தால், ¶ ஸ்மிருதியின் பிறழ்ச்சியுண்டாம்; அந்த ஸ்மிருதியின் பிறழ்ச்சியால், புத்தியின் நாசமுண் டாம், அந்தப் புத்தியின் நாசத்தால் அவன் $ நாசத்தை யடைவன்'' என்னுங் கீதை வாக்கியத்தாலுணர்க.

கிரகண காலங்களிற் சந்திரனை மறைக்கின்றபூமியின் சாயையை இராகுகேதுக்களென்னுங் கரும்பாம்பு செம் பாம்புகளாகக்கூறுகின்ற புராண நூல் வழக்குப்பற்றி,'மதி யை விழுங்கு காமவரவு' எனக் கூறினர்.

சப்தம், பரிசம், உருவம், இரசம், கந்தம் என்னும் ஐந்துவிடயங்களையும் முறையே செவி, மெய், கண், நாக்கு மூக்கு என்னும் ஐம்பொறிகளும் நுகர்கின்றன என்பான் 'ஒழுங்கருது விடய விரை நுகர் கணமொ டியங்கு மீன மிகவு முகள்வதே' என்றார். "எவ்விந்திரியம் உருவ முத லிய ஐங்குணங்களுள் எக்குணத்தைக் கவர்கின்றதோ அவ்விந்திரியம் அக்குணமுடையதேயாம்; எங்ஙனம்

* சங்கம்—இது, நமக்குச் சுகசாதனமென்னுஞ் சோப ஞத்தியாசருபப் பிரீதி விசேஷம்.

† குரோதம்—கண்சிவத்தல் முதலியவற்றிற்குக் காரண மான துவேஷ விசேஷம்.

‡ சம்மோகம், காரிய அகாரிய விவேகமின்றியதன்மை.

¶ இங்கு, 'ஸ்மிருதி'என்றது குரு சாஸ்திரம் உபதேசித் தருளிய பொருளின் அனுசந்தானவடிவஸ்மிருதியை.

$ சர்வ புருஷார்த்தங்கட்கும் அயோக்கியனுவன்.



சக்ஷுா, ரசனம், கிராணம், துவக்கு, சுரோத்திரம் என் னும் ஐந்து இந்திரியங்களும் முறையாக உருவமுதலிய குணங்களைக் கவர்கின்றன,'' என்று தருக்கநூல் கூறு வதையும் இங்கு ஊகித்துணர்க. கரணம்-கருவி; இங்குப் புறக்கருவியாகிய பொறிகளைக் கொள்க. 'விடயம்' என் றது சப்த முதலியவற்றை. 'கரணமீனம்' என இயையும். 'நுகர்' என்பது வினைத்தொகை. இங்கு 'மதி' என்னுஞ் சொல் புத்தி, சந்திரன் என்னும் இரு பொருள்படுதல் காண்க. (உக)

(22) பெருமித மென்று கூறு பெருமை யுடையது
பிணிக ளெனுங் கெடாத புலவு கமழ்வது
வருமிட ரின்ப மான திரைகள் பொருவது
மனமெனும் வஞ்ச ராஜ மகர முறைவதே.

இ-ள்.—பெருமிதம் என்று கூறு பெருமை உடை யது=கர்வமென்று கூறும் பெருமையையுடையது; பிணி கள் எனுங் கெடாத புலவு கமழ்வது=நோய்கள் என்று கூறும் ஒழியாத புலால் நாற்றம் வீசப்பெறுவது; வரும்= (இருவினைகளால்)வருகின்ற, இன்பம் இடர் ஆன =இன்பத் துன்பங்களாகிய, திரைகள் பொருவது=அலைகள்மோது தலையுடையது; மனம் எனும் வஞ்சராஜமகரம் உறைவது =மனமென்கின்ற கபடம் பொருந்திய இராஜமகர மச்சம் வசிக்கப் பெறுவது; (எ-று.)

கடலின் பெருமை, 'கிணறு, குளம் முதலிய நீர்நிலை களுள் ஒன்றுந்தனக்கு நிகரில்லை' என்னுந் தன்மைவாய்ந் தது; அதுபோல, பெருமிதமும், தனக்கு ஒருவரும் நிக ரில்லை என்னுந்தன்மை வாய்ந்தது, ஆதலின், 'பெருமித மென்று கூறு பெருமை' என்றும், மச்சம் முதலிய புலால்

தீநாற்றமுடையதுபோல், நோய்களும் தீநாற்றமுடைமையின் 'பிணிகளெனுங் கெடாத புலவு' எனவும், அலைகள் மாறிமாறி வருவதுபோல், இன்பத் துன்பங்களும் மாறி மாறி வருகின்றமையின் 'இடரின்பமான திரைகள்' எனவும், மகரம், மீன்களுக்குத் தலைமைவாய்ந்திருப்பதுபோல, மனமும், கண் முதலிய கருவிகட்குத்தலைமை வாய்ந்திருத்தலின் 'மனமெனும் வஞ்சராஜமகரம்' எனவும் உருவகித்துக் கூறியுள்ளார்.

இங்குப் 'பெருமை' என்றது கம்பீரமாந் தன்மையை. மகரம்-சுறுமீன்; இது கடலிலே வாழ்வது; இதனை 'மகராலயம்' என்னும் கடலின் பெயரைக் கொண்டும், "கடல் வாழ்சுறவு" என்ற தொல்காப்பியங் கொண்டும் உணர்க.

(23) அளவி லகந்தை யாமை யபரி மிதமுள
தவாவு நிறைந்த வாழ மறிய வரியது
களவு நெருங்கு பாரு மலையு முடையது
கலக விடங்கண் மேவு கிருமி நெளிவதே.

இ-ள்.—அளவு இல் அகந்தை = ஒரு வரையறையில்லாத அகங்கார மென்னும், ஆமை = ஆமைகள், அபரிமிதம் உளது = அளவிறந்தவைகள் இருக்கப்பெறுவது; அவாவு = இச்சையென்னும், நிறைந்த = மிகுந்த, ஆழம் அறிய அரியது = ஆழத்தை அறிவதற்கு முடியாத தன்மையுடையது; களவு நெருங்கு பாரும் மலையும் உடையது = திருடு என்னும் நெருங்கிய பார்களையும், மலைகளையுமுடையது; கலகவிடங்கள் மேவு கிருமி நெளிவது = கலகஞ் செய்பவரென்னும் விஷங்கள் பொருந்திய புழுக்கள் நெளியப் பெறுவது; (எ-று.)

தேகங்கடோறும் அகந்தை வெவ்வேறாய், அனேகமாய் இருத்தலின் 'அபரிமிதமுளது' என்றார். 'அகந்தை' என ஒன்றைக் கூறினராயினும், இனம்பற்றி மமதையும் கொள்க.



'அகந்தை'—தேகம் நானென்னும் நிச்சயம்; 'மமதை'—போக்கிய சமுகம் எனதென்னும் நிச்சயம். இங்கு, "வந்துவந்து பிறவிதொறு மகமமதை வளரும்" என்பது நோக்கத்தக்கது. நெய்விட்ட அக்கினிபோல், நூறு கோடி வருட பரியந்தம் விடயங்களை அனுபவிக்கினும் அவாவின் நிறைவைக் காணமுடியாது என்பான் 'அவாவு நிறைந்த வாழ மறிய வரியது' என்றார். இங்கு "ஆசைக்கோரளவில்லை யகிலமெலாங் கட்டியாளினும்" என்று தாயுமானர் கூறுவதையுங் காண்க. முன்னர் (21-வது செய்யுளில்) அரவு வடிவமாயுருவகஞ் செய்யப்பட்ட காமம், மங்கையர் விஷயமாயுள்ளது; இங்கு 'அவா' என்றது, பொதுவாயுள்ள விருப்பத்தை.

ஆமை எதனுலும் பேதிக்க முடியாததுபோல், அகந்தையும் ஞானந்தவிர மற்றெதனுலும் பேதிக்க முடியாமையின் 'அளவி லகந்தை யாமை' எனவும், கடலின்கண்ணுள்ள ஆழத்தின் நீட்சியைக் காணமுடியாததுபோல், அவாவின் நீட்சியையும் காணமுடியாதாதலின் 'அவாவு நிறைந்த வாழம்' எனவும், கடலின்கண்ணுள்ள பாரும், மலையும் முறையே மறைந்தும், வெளிப்பட்டும் இருந்து கப்பலிற் செல்லும் பிரயாணிகளை வருத்துவதுபோல், மறைந்து திருடலும், வெளிப்படையாய்த் திருடலும் ஆன்மாக்களைவருத்தலின் 'களவு நெருங்கு பாரு மலையும்' எனவும், கடலின்கண்ணுள்ள விஷக் கிருமிகள் கடித்துத் துன்புறுத்துவது போல், கலகஞ் செய்பவர்களும் கலகஞ் செய்து துன்புறுத்தலின் 'கலக விடங்கண் மேவு கிருமிநெளிவதே' எனவும் உருவகித்தனர். மறைந்து திருடல், வெளிப்படையாய்த் திருடல் என்பவற்றை,

“மறைவி னிலாயினும் வலியினி லாயினும்
பிறர்பொருள் வவ்வுதல் பெரிய கள்ளமாம்.”

என்ற ஈசுரகீதைச்செய்யுளானுணர்க. பார்-பாறை;இதனை, * “பார்முதிர் பனிக்கடல் கலங்கவுள் புக்கு” என்பதனால், உணர்க. ‘அவாவு’ என்பது இங்குத் தொழிற்பெயர். கலகம்-ஆகுபெயர். இங்கு, ‘அளவில்’ என்பது, அகந்தையினது விருத்திக்கு (பெருக்கத்திற்கு) ஓர் முடிபின்மையையும், ‘அபரிமிதம்’ என்பது, அகந்தையினது பலவாந்தன்மையையுங் குறிக்கும். (உரு)

(24) துகளெனு நன்க லாத நுரைக டருவது
துறவெனு மின்ப மான கரையை விடவகன்
மகளிரெ னுந்த வாத வலிய சுழியது
மறலியு மஞ்சு கோப வடவை யெரிவதே.

இ-ள்.—துகள் எனும்=(பஞ்ச) சூதகமெனப்படும், நன்கு அலாத=நன்மையல்லாத, நுரைகள் தருவது=நுரைகளைக் கொடுப்பது; இன்பம் ஆன=இன்பத்திற்கு நிமித்தமாய, துறவு எனும்=சந்நியாச மெனப்படும், கரையை=தீரத்தை, விட=(அதிகாரிகள்) விட்டு நீங்குமாறு (செய்கின்ற), மகளிர் எனும்=பெண்களெனப்படும், தவாத=கெடாததும், அகல்=அகன்றதும், வலிய=வலியதும் ஆகிய, சுழியது=சுழற்சியையுடையது; மறலியும்=எமனும், அஞ்சு=அஞ்சத்தக்க, கோபவடவை எரிவது=கோபமாகிய வடவாமுகாக்கினி எரிந்து கொண்டிருக்கப் பெறுவது; (எ-று.)

கடலின்கண்ணுள்ள நுரை அசுத்தமாயிருப்பதுபோல, பஞ்சசூதகமும், அசுத்தமாயிருத்தலின் ‘துக

* திருமுருகாற்றுப் படை.



ளெனு நன்க லாத நுரைகள்’ எனவும், கடலை நீந்திக்கரையைச் சேர்ந்தவனுக்குக் கரை விசிராந்திக்கு ஏதுவாதல்போல, துறவும் அதிகாரியின் விசிராந்திக்கு ஏதுவாதலின் ‘துறவெனு மின்ப மான கரை’ எனவும், சுழியானது கரையை அடையவொட்டாது தன்பால் இழுத்துக்கொள்வதுபோல், மகளிரும், துறவையடைய வொட்டாது தன்பால் இழுத்துக் கொள்ளுதலின் ‘மகளிரெ னுந்த வாத வலிய சுழி’ எனவும், வடவாமுகாக்கினியானது பயங்கரரூபமாயும், தாபரூபமாயுமிருப்பதுபோல,கோபமும்,பயங்கரரூபமாயும், தாபரூபமாயு மிருத்தலின் ‘மறலியு மஞ்சு கோப வடவை’ எனவும் உருவகித்தனர்.

பஞ்சசூதகங்கள்-சநநாசௌசம், மரணாசௌசம்,சண்டாளர் நீரிற்றோய்தல், சுராபானம்பண்ணல், பொய்கூறல் என்பன. சிலர், சநநாசௌசம், மரணாசௌசம், இருதுசூதகம், உச்சிட்ட சூதகம், சண்டாள பரிசூதகம் என்றுங் கூறுப.

துறவு-புறமாகிய செல்வத்தின்கண்ணும், அகமாகிய யாக்கையின்கண்ணும் உளதாயபற்றினை, அவற்றது நிலையாமைநோக்கி, விடுதலாம். “யாதனின் யாதனி னீங்கியா னோத லதனி னதனி னிலன்” என்றலின், ‘துறவெனுங் கரை என்னாது ‘துறவெனு மின்ப மான கரை’ என்றார்; இங்ஙனங் கூறினமையின் இல்லறம் துன்பமான கரை என்பதுஅருத்தாபத்தியாற்பெறும். இல்லறம்பிறவிக்கடலுக்கு இக்கரை எனவும், துறவறம் அக்கரை எனவுங் கொள்க. இவ்வியல்பினதாய துறவெனுங் கரையை மங்கையர்மீது அவாவுடையோர் ஏறல்முடியாது; ஏறினும் பூர்வநிலையே அடைவர் என்பான் ‘மகளிரெ னுந்த வாத வலிய சுழியது’ என்றார். வடவை-பகன்,தான் செய்ததவாக்கினி

யைப் பிதிர்க்கள் கட்டளைப்படி கடலில்விட அது பெட்டைக் குதிரை உருக்கொண்டு தங்கியது. இன்பத்திற்கு நிமித்தமான கரையை 'இன்பமான கரை' என்றது உபசாரம்; "பிறப்பென்னும் பேதமை" என்பதுபோல. 'மறவியும்' என்பதிலுள்ள உம்மை உயர்வுசிறப்பாய் இறந்தது தழீஇயது. (உச)

(25) வெருவரு கின்ற போக முதலே யுடையது
விவிதம னந்த மான துறையு மறிபவ
ரொருவர் கடந்து போக விரகி லெழுபவ
வுததிவி ளம்ப யாவ ருலகி லறிஞரே.

இ-ள்.—வெருவருகின்ற=(முத்தி விருப்புடையோர்) அஞ்சத் தகுந்த, போகமுதலேயுடையது=(இகபரங்களிலுள்ள மாலே, சந்தன வனிதாதி விஷயங்களாகிய) போகமென்னும் முதலைகளை யுடையது; விவிதம் அனந்தமான=வெவ்வேறுவிதமாயும் அனந்தமாயுமுள்ள, துறையும்=மார்க்கங்களையும், அறிபவர்=அறிபவர்களுள்ளே, ஒருவர்=ஒருவராயினும், கடந்துபோக=தாண்டிச் செல்ல, விரகுஇல்=சாமர்த்தியமில்லாத, எழுபவ உததி=(தேவர் முதலிய) எழுவகைப் பிறப்பென்னும் கடலின் பெருமையை, விளம்ப=(எடுத்துக்)கூற, உலகில்=உலகத்தின்கண், அறிஞர் யாவர்=அறிஞர் யாவருளர்? (ஒருவருமில்லை.); (எ-று.)

முதலையானது, ஆளை விழுங்குவது போலப் போகமும் ஆளை விழுங்குவதால், 'போக முதலே' எனவுருவகித்தனர்.

'துறை' என்றது, பௌத்தாதி சமயங்களை. 'விவிதம்' என்பது, பௌத்தாதி மதபேதங்களை யுணர்த்துதற்கும்,



'அனந்தம்' என்பது அம்மதங்களின் உள்ளிட்ட பிரிவுகளை யுணர்த்துதற்கு முரிய விசேஷணம் (அடை). பிறப்பின் வகையை (கஎ)வது செய்யுளுரையிற் காண்க. 'துறையும்' என்பதிலுள்ள உம்மை உயர்வு சிறப்பு. 'வெருவருகின்ற'—'அஞ்சத்தக்கதும், கர்மஜன்னியமாய் வருகின்றதுமான' என்று பொருளுரைப்பினு மமையும். (உரு)

'புத்தர் முதலிய புறச்சமயத்தோர் தாண்டுதற்கு வலியற்றவராயினும், சைவர் முதலிய வுட்சமயத்தோராயினும் அதனைத் தாண்டாரோ' என்னுஞ் சசிவர்ணனுக்கு ஆசிரியர் கூறல்.

(26) பொறிவழி சென்று மீளு மவல மதிகொடு
பொருசம யங்க ளாறு மறிய விழுமதி
லறிவழி வொன்றி லாத பொருள தெனவுள
வனுபவ வங்க மேறு மறிஞ ரகல்வரே.

இ-ள்.—பொறிவழி=ஐம்புலவழியாக, சென்று=(பஞ்சவிடயங்களிற்) சென்று, மீளும்=(மொத்துண்டு) திரும்புகின்ற, அவலமதிகொடு=(அறியாமை என்னும்) குற்றம் நிறைந்த புத்தியைக்கொண்டு, பொருசமயங்கள் ஆறும்=(துவித)வாதஞ் செய்யும் சட்சமய வாதிகளும், அதில் மறிய விழும்=அப்பிறவியென்னும் சமுத்திரத்தில் அதோமுகப்பட்டு விழுவார்கள்; [இப்போது ஆசிரியர், சசிவர்ணனுக்குச் சமுசார சாகரத்தைத் தாண்டுதற்குரியவுபாயமுளதென வுபதேசஞ் செய்கின்றார்.] அறிவு=(அவஸ்தாத்திரய) சாக்ஷிரூபப் பிரத்ய காத்மாவானது, அழிவு ஒன்று இலாத=நாசம் பொருந்துதல் இல்லாத, பொருள் அது=பிரஹ்மமாம்; எனஉள=என்றுளதாகிய, அனுபவ வங்கம் ஏறும்=சுவானுபவ மென்னும் கப்பலில் ஏறுகின்ற, அறிஞர் அகல்வர்=ஞாதாக்கள் (பிறவி என்னுங் கடலைக்) கடப்பார்கள்; (எ-று.)

'பொறி' என்றது, மெய்வாய் முதலியவற்றை. ஈண்டுப் 'பொருதல்' என்றது, வாதம், செற்பம், விதண்டை என்னும் மூன்றனுள் நடுவதும், இறுதியதும் ஆய வாதங்களை. வாதம்-உண்மை உணர்தல் வேட்கை யுடையோன் * கதை. † செற்பம்- ‡ சாதன மிரண்டுமுள்ள வெல்லும் வேட்கையுடையோன் கதை. $ விதண்டை-தன் கோட்பாட்டை நிலைபெறுத்தாத கதை. முதலது, குரு சீடர்களுக்கு அல்லது ஒரு குருவினிடத்துக் கற்கும் இரண்டு சீடர்களுக்கும் உண்டாகும்சம்வாதமாம்; நடுவதும், இறுதியதும் யுக்திப் பிரமாணங்களில் வல்ல பூர்வபக்ஷி சித்தாந்திகளுக்குண்டாகும் வாதமாம். 'ஆறுசமயம்' என்றது சைவம், வைணவம், காணாபத்தியம், கௌமாரம், சௌரம், சாக்தேயம் என்பவற்றை. ஆறுசமயத்தவரை 'ஆறு சமயம்' என்றது உபசாரம். இவ்வறுசமய வாதிகளும் செற்ப முதலிய வாதத்தினால், உண்மை யனுபவமின்றி வாளா வீணாளாய்க் கழிப்பராதலின் 'மறிய விழுமதில்' என்றார். ஈண்டு 'அறிவு' என்றது, சொரூபஞானத்தை. சொரூபஞான விருத்திஞானங்களின் வேறுபாட்டை முதற்செய்யுளுரையிற் காண்க. அகம்பிரஹ்மாஸ்மி என்னும் அனுபவ

---

* கதை=கூறுவார் பலரை யுடைத்தாய்ச் சங்கை யுத்தரங்களைப் பயக்குந் தொடர்மொழியின் கோவைப்பாடு.

† செற்பவாதம்புரியும் இருவரும் தத்தம் பக்கத்தைத் தாபித்தலும், பரபக்கத்தை மறுத்தலும் செய்வர்.

‡ பரபக்ஷ நிராகரண சுவபக்ஷசாதனம்.

$ விதண்டாவாதம்புரியும் இருவருள் ஒருவர், சுவபக்கத்தை மாத்திரம் நிலைநிறுத்துவர்; பரபக்கத்தை மறுப்பதில்லை. மற்றொருவர், பரபக்கத்தை மாத்திரம் மறுப்பர்; சுவபக்கத்தை நிலைநிறுத்துவதில்லை.



முடையவர்களுக்கு அஞ்ஞானமும், அதனாற்றோன்றும் பிறவியுமில்லை யாதலின் 'அனுபவ வங்கமேறு மறினா ரகல்வரே' என்றார். 'அது'-பகுதிப் பொருள் விகுதி. இங்கு,

"பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தா
ரிறைவ னடிசேரா தார்."

என்றகுறள் உணரத் தக்கது. (உசு)

'சசிவர்ணனுக் குண்டாகிய பிறவித் துன்பத்தின் பயம் நீங்குதற்குரிய வுபாயத்தை யுபதேசியாது, பிறவியைக் கடல் வடிவமா யுருவகித்துக் கூறியது, அப்பிறவித் துன்பத்தின் பயம் விருத்தியாதற்பொருட்டேயாம்; அவ்வாறு கூறியும் அவனிடத்துப் பிறவிப் பயம் விசேடமாகத்தோன்றாமையின் அது நீங்கற்குரிய வுபாயத்தை ஆசிரியர் எவ்வாறு உபதேசிக்கலாம்' என்றபேய்க்குத் தேவி கூறல்.

(உஅ) புணரிக டந்து போக விரகி லெனமொழி
பொழுதுபு லம்பி யாவி புதல்வ னிறுமுன
முணர்வெனும் வங்க மேறு மறினா ரகல்வரென்
றுரையைவ ழங்கி நாத னுவகை யருளவே.

இ-ள்.—புணரி கடந்துபோக=(பிறவிப்பெருங்) கடலைத் தாண்டிச்செல்ல, விரகுஇல் எனமொழி பொழுது= ஆற்றலில்லை என்று (ஆசிரியர்) திருவாய் மலர்ந்தருளிய வக்கணமே, புதல்வன் புலம்பி=(சசிவன்ன னென்னும்) புத்திரன்-(பலதுறைகளிற் றேர்ந்தவர்களும் தாண்ட முடியாத பிறவிக்கடலை யான் எவ்வாறு தாண்டுவேன் என்று) அழுது, ஆவி இறுமுனம்=பிராணன் நீங்குவதற்கு முன்

னமே, உணர்வுஎனும்வங்கம் ஏறும் அறிஞர்=பிரஹ்மஞானமென்னும் கப்பலில் ஏறியுள்ள மகான்கள், அகல்வர்=(பவக்கடலைத்) தாண்டுவார்கள்; என்ற உரையை வழங்கி=என்றமொழியைக் கூறி, நாதன்=குரு மூர்த்தியான வர், உவகை அருள=மகிழ்வை யுண்டுபண்ண,(எ-று.) 'அடிதொழுது' என, அடுத்த கவியோடு தொடரும்.

'உணர்வெனும் வங்கமேறு மறிஞ ரகல்வரே' என்றமையால் பிறவிவடிவ பந்தம், உண்மையன்று ; ஆனால் மித்தை என்பது அருத்தாபத்தியாற் பெற்றாம் ; தடிகொண்டடித்தல் முதலிய தொழிலான் அழிவுறுவது உண்மையின்றன்மை யெனவும், அஃதன்றி உண்மை யுணர்வால் அழிவுறுவது மித்தையின்றன்மை எனவும் முறையே புற்றரவும், கயிற்றரவும் ஆகிய இவ்விரு உதாரணங்களிற் கண்டு தெளிக. ஈண்டு "ஆன்மாவை யுணர்ந்தவன் சோக (பந்த)த்தைக் கடக்கின்றான்" என்ற சாந்தோக்கிய சுருதியின்பொருள் உணரத்தக்கது. புணரி-(நதிகள் தன்னிடம் வந்து) புணரப்பெறுவது; புணர்-பகுதி; புணர்தல்-கலத்தல்; இ-பெயர்விகுதி. (நதிகளை மனைவியராகவும் கடலைக் கணவனாகவும்கொண்டு அதனை நதிபதியென்று வழங்குதல் உணரத் தக்கது).

"சம்சார சமுத்திரத்தே யிருக்கும் கருமமெனும் அற்ப ஓடத்தில் சுரோத்திரியப் பிரஹ்மநிஷ்ட குருவென்னுஞ் செம்படவனில்லை; பிரம்மசர்யாதி சாதன மென்னும் அனுகூல வாயுவுமில்லை; அக் கரும ஓடம் இயற்கையானே கணந்தோறு மழிவதாம் ; திடமற்றதாம் ; அதுகொண்டு எம்மதிமான் பயமின்றிச் சமுசார சமுத்திரத்தே புகுவன் ? மற்றோ, அதைக்கடக்க எம்மதிமானும் அவ்வோடத்தைப் பற்றான் ; விசாரமின்றிய மூடனே பற்றுவனாதலின்,முத்தியையடைய விரும்புவோர் அதனைக்கடக்க அவ்வோடத்தை யொருகாலும் பற்றவேகூடாது. இச்சம்சார சமுத்திரத்தே யிருக்கும்!துறக்க வின்பமெனும் மீன முதலியவற்றை யடைவிக்கும் அக்னிஹோத்திராதி கரும ஓடத்தைப்பற்றித் தன்னைக் கிருத கிருத்தியனென வெண்ணியிருக்கும் மூடனாகிய கருமி ஒருகாலும் இக்கடலைக் கடவான்; மாறாக அவன் காமக்குரோதாதி எனும் அலைகளால் கருமஓடம் நடுங்குவதால் அக்கடலின் பிறப்பிறப்பு வடிவ நீரின்கண்ணே அடிக்கடி மூழ்குவான் ; ஒருகாலும் சுகத்தை அடையான்" என்று ஆத்மபுராணம் கூறுவதை இங்கு ஆராய்ந்துணர்க. உஎ



'சசிவர்ணன், பிறவித்துன்பம் நீங்குதற்குரிய ஞானத்தை யுபதேசித்தருளல் வேண்டும்' என்று விண்ணப்பித்தல்.

வேறு.

(28) வாழியென விறைவனடி தொழுதுவரு பவமா
மாழியினை யகலுமறி வருளுகென வவரே.

(இ-ள்.—இறைவன் அடிவாழி என=(சசிவர்ணன்) குரு மூர்த்தியின் திருவடி நீடூழிவாழக்கடவ தென்று துதித்து, தொழுது=அத்திருவடியை வணங்கி, வரு=(தொன்று தொட்டு) வருகின்ற, பவம்ஆம் ஆழியினை=பிறவியாகிய சமுத்திரத்தை, அகலும் அறிவு=கடத்தற்கேதுவாயுள்ள ஞானத்தை, அருளுக என=அனுக்கிரகம் செய்தருளல் வேண்டுமென்று விண்ணப்பிக்க, அவர்=(அதற்கு), அம்முனிவர், (எ-று.)—'அறிவதறிவெனவே' என 38-வது செய்யுளோடு தொடரும். (உஅ)

வினவிய சீடனுக்குப் பிறவிக்கடலைத் தாண்டுதற்குரிய வித்தையை உபதேசிக்கும் பொருட்டு, முன்னர் வித்தையைப் பரம், அபரம் என இருவிதமாகக் கூறுகின்றார்.

(29) பரவறிவு மபரவறி வெனவுமிரு பரிசாத்
திரவறிவை யறியுமவர் மொழிவர்தெளி வுறவே.

இ-ள்.—பர அறிவு எனவும் அபர அறிவு எனவும்=(வித்தையை), பரவித்தை யெனவும், அபரவித்தையெனவும், இருபரிசா=இருதன்மையாக, திரவறிவை=சொரூப ஞானத்தை, அறியும் அவர்=அறிந்த பெரியோர், தெளிவு உற=ஐயந்திரிபின்றி, மொழிவர்=கூறுவர்; (எ-று.)

அறிவிற்குத் திரமென்னும் விசேட்ணம்(அடை) சொரூபஞான மென்றுணர்த்தற்கு. 'என' என்னு மிடைச்சொல் இரண்டிடத்துங் கூட்டப்பட்டது. (௨௯)

பரவித்தை, அபரவித்தைகளின் சொரூபத்தைக் கூறல்.

(30) அபரவுணர் வருமறைகள் முதலகில கலையு
முபரமம தறவுதவு முணர்வுபர வுணர்வே.

இ-ள்.—அருமறைகள் முதல் அகிலகலையும்=அரிய (கர்மகாண்ட மயமான) வேதமுதலிய சர்வகலைகளும், அபர உணர்வு=அபர வித்தையாகும்; உபரமம் அது அற உதவும் உணர்வு=சித்த விசிராந்தியை மிகவுங்கொடுக்கும் வித்தை, பர உணர்வு=பரவித்தை யாகும்; (எ-று.)

அபரஞானம், அபரவித்தை என்பன ஒரு பொருட்கிளவி. பரஞானம், பரவித்தை என்பன ஒருபொருட்கிளவி. அபரஞானம்—மறை முதலியனவும், இவற்றாற்றோன்றும் தீயோம்பல் முதலிய வினைகளின் ஞானமுமாம். பரஞானம்=தத்துவமசி முதலிய உபநிடத வாக்



கியங்களும், அவற்றாற்றோன்றும் அத்துவிதப் பிரஹ்மத்தின் ஞானமுமாம்.

“இருக்கு வேதமுதலிய (யசுர், சாமம், அதர்வணம், சிக்ஷை, கற்பம், வியாகரணம், நிருத்தம், சந்தசு, சோதிஷ) வடிவமாகச் சுருதியிற்கணிக்க(எண்ண)ப்பட்ட எவ்வபர வித்தை யுண்டோ அது, அதுவரையில் (ஆத்மாவைக் கூறுதவரையில்) அனாத்மாவை விஷயமாகக் கொண்டிருத்தலால், கூறப்பட்ட அத்துவித தத்துவத்தைக் கூறுதல் இல்லை; அங்ஙனமே அதனால் (இருக்கு வேதமுதலிய வடிவாயுள்ள அபரவித்தையால்) உண்டாய ஞானங்களும், அக்கினி ஹோத்திர முதலிய கருமங்களை விஷயமாகக் கொண்டிருத்தலால், அனாத்ம விஷயங்களை யுடையன என்று அவைகளுக்கும் (ஞானங்களுக்கும்) அபர வித்தையாந்தன்மை உண்டு” எனறும், “தத்துவமசி முதலிய உபநிடத வாக்கியங்களாற்றோன்றிய எந்த ஞானத்தால், இனிக்கூறப்புகும் இலக்கணமுடைய அந்த அழிவற்ற பிரஹ்மம் அடையப் படுகிறதோ அது(ஞானம்), ஆன்மாவை விஷயஞ்செய்யும் அஞ்ஞானத்தை நிவிர்த்திக்குந் தன்மை மூலமாய் மோக்ஷ சாதனத்தன்மை யுடைமையால், பர வித்தை” என்றும் பிரமகீதை ஏழாவது அத்தியாயம் 3, 4, 5 சுலோகங்கட்கு ஸ்ரீ வித்தியாரண்ணியர் திருவாய் மலர்ந்தருளிய வியாக்கியானம் இங்குக் கவனிக்கத்தக்கது.

இவ் வியாக்கியானத்தைக் கவனிக்கும்போது பரஞானம், அபரஞானம்என்ற சொற்கள் பர(பிரஹ்ம)த்தை விஷயஞ்செய்யுஞ் ஞானம் பரஞானமெனவும், அபரத்தை (பிரஹ்ம மல்லாததை=அனான்மாவை) விஷயஞ்செய்யுஞ் ஞானம் அபரஞான மெனவும் பொருள்படுதல் காண்க.

எனவே, அபரோக்ஷ ஞானமன்றிப் பரோக்ஷஞானமும் பரஞானமென்பது பெற்றும்.

"வேதவே தாங்கமா திகளபர வித்தைபர
மார்த்தத் திற்குப்
போதமா முபநிடதம் பரவித்தை யென்றுரைப்பர்
புந்தி சான்றோ
ரேதமிலப் பரவித்தை யாற்றசேந் தியங்களுக்கு
மெட்டா தாயு
மோதவ்விந் தியங்களிலா தாயுமுறை மெய்ப்பொருளை
யுணர்த லாமால்"

என்ற சூதசங்கிதையும்,

"இங்குநா மறிய வேண்டுவ திரண்டு
விச்சையவ் விரண்டினு ளொன்று
பங்கமா மபரை பரையெனப் படுவ
தொன்றதிற் பழமறை நாலு
மங்கமா றுண்மை யமையிதி காச
மாதிக ளபரையா மற்ற
தெங்குமாய் நின்ற தொன்றையா தொன்று
லெய்தலா மதுவிறை யருளால்.'

என்ற பிரமகீதையும், இங்குணரத் தக்கவை.

'மறைகள் முதலகில கலை' என்றது, வேதம்நான்கு, வேதாங்கம்ஆறு, நியாய மீமாம்சைகள் இரண்டு, ஸ்மிருதி புராணங்கள் இரண்டு ஆகிய * சதுர்த்தச (பதினான்கு) வித்தைகளை. அகம் பிரஹ்மம் என்னும் பரஞானத்தால், பாதிக்க(பொய்யென்று துணிய)ப்படின் இவ்வுலகின் கண்ணும், மனம் செல்லும் ஆற்றலின்றியது; இவ்வாறு

* இவற்றை விரிவாயுணர விரும்பின் விசாரசாகரம் எ-வது தரங்கம் காண்க.



அகத்தும் புறத்தும்போவ தொழிந்த அம்மனம் விறகில்லாத தீயைப்போலத், தானேஉபசாந்த மாகின்றது; அப்பரஞான மில்லையாயின் உலகின்கண் சத்தியத்தன்மை நீங்காமையின் பொருள்களின் ஆகாரமான விருத்திகளோடு பெருக்கத்தை யடைந்து மனது மிகத்தூல மாகின்றது; இவ்வாறுய மனதிற்கு உபசாந்த முண்டாவதில்லை; * இவ்வுடன் பாடெதிர் மறைகளால், அப்பரஞானம் மனதின் உபசாந்தத்திற்கு ஏது வென்பான் 'உபரமமதறவுதவு முணர்வுபர வுணர்வே' என்றார். உபராமம் என்பது 'உபரமம்' என்றாயிற்று; மனதின் ஒடுக்கமென்பது இதன் பொருள். அது-பகுதிப்பொருள் விகுதி. (ங௦)

பரவித்தை, அபரவித்தைகளை யுடையவர்
இத்தகைய ரெனல்.

(31) ஆகம விதங்களறி வாரபர மறிவார்
யோகமொ டுறங்குமவ ரேபர முணர்ந்தோர்.

இ-ள்.—ஆகம விதங்கள் அறிவார்=நானாவிதமாயுள்ள கர்மகாண்ட மயமான வேதம்,அங்கம் முதலியவற்றை அறிபவர்கள், அபரம்அறிவார் = அபரத்தை உணர்பவராவர்; யோகமொடு உறங்கும் அவரே=சித்தவிருத்தி நிரோதரூப யோகத்தோடு (மித்தையாப் பிரபஞ்ச விஷயத்தில்) நித்திரை யுற்றிருப்பவரே, பரம் உணர்ந்தோர்=பரத்தை உணர்பவராவர்; (எ-று.)

ஆகமம்-இறைவனிடத்திருந்து வருவது; எனவே, இறைவனு லாக்கப்பட்ட நூலுக்குப் பெயர் ஆகமமென்றாயிற்று. "சித்தவிருத்தி நிரோதம் யோகம்" என்னும் பதஞ்சலி சூத்திரம் இங்கு நோக்கத்தக்கது. இங்கு, 'உறக்கம்'

* இஃதிருப்பின் இஃதாகும் என்பது உடன்பாடு; இஃதில்லையேல் இஃதாகாது என்பது எதிர்மறை.

என்றது, பகிர்முக நாட்டமின்மையை. அபரம்-வேள்வி முதலியவை. பரம்-பிரஹ்மம். ஏகாரம், பிரிநிலைக்கண் வந்தது. தெளிவுபற்றி, 'யோகமொ டிறங்குமவ ரேபர முணர்ந்தோர்' என இறந்தகாலத்தாற் கூறினர்; காலவழுவமைதி.

அபர வித்தையை நிந்தித்தல்.

(32) புராணமிதி காசமெவை யும்பொரு ளனைத்தின்
பிராணனறி யாதுளவி டத்திவை பிதற்றே.

இ-ள்.—புராணம்=புராணம், இதிகாசம் = இதிகாசம் (முதலிய), இவை எவையும் = இவையனைத்தையும் (கற்று அவற்றின் பொருள்களை யறிவதும்), பொருள் அனைத்தின் பிராணன்=சர்வ வஸ்துக்களின் பிராண பூதமான பரமாத்மாவை, அறியாது உளவிடத்து=அறியாமல் உள்ள விடத்து, பிதற்று=பிதற்றலாய் முடியும்; (எ-று.)

பிரஹ்மம், பதுமம், விஷ்ணு, சைவம், பாகவதம், நாரதீயம், மார்க்கண்டேயம், ஆக்நேயம், பவுஷியத், பிரஹ்மவைவர்த்தம், இலிங்கம், வராகம், ஸ்காந்தம், வாமனம், கூர்மம், மச்சியம், காருடம், பிரஹ்மாண்டம் எனப் புராணம் பதினெண் வகைப்படும்; இவற்றை இயற்றியவர் ஸ்ரீ வியாசர்; இவை, சர்க்கம், பிரதி சர்க்கம், வம்சம், மனுவந்தரம், வம்சானுசரிதம், என்னும் பஞ்ச இலக்கணமும், வைதீகதருமம், தாந்திரீகதருமம் எல்லாவற்றையுங்கூறும். சனற்குமாரமுதல் பார்க்கவம் இறுதியாகிய பதினெண் உபபுராணங்களும் வைதீக தருமத்தையே கூறும்.

இதிகாசம் - பாரதம், இராமாயண முதலியன; இவற்றை, இயற்றியவர் ஸ்ரீவியாசர், வான்மீகிமுதலியோர்; அவை, சத்துவ முதலிய குணபேதங்கள், தேவத்திரய இலக்கணங்கள், தேவ தானவாதிகள் சனனக்கிரமம், யுதிஷ்டிர இராமச்சந்திராதிகள் சரிதம், வைதீக முதலிய தருமங்கள் எல்லாவற்றையும் வரையறுத்துக் கூறும்.

பிராணன், தேகம் நிலைபெறுதற் கேதுவாயிருத்தல் போல, பரமாத்மா, சர்வ ஜகத்தும் நிலைபெறுதற் கேதுவாயிருத்தலின் அதனை, 'பொருளனைத்தின் பிராணன்' என்றார். 'பிராணன்' என்பது இங்கு உவம ஆகுபெயர். உம்மை முற்றுப் பொருளது. (கூஉ)



(33) இயலறிவ திசையறிவ தினமறிவ துளவா
மயலறிவ தறிவதல வறிவறிவ தறிவே.

இ-ள்.—இயலறிவது=இயற்றமிழை யறிவதும், இசையறிவது=இசைத்தமிழை யறிவதும், இனம் அறிவது=நாடகத் தமிழை யறிவதும், உளவாம்=உள்ளனவாம்; அது=அவற்றின் ஞானம், அயல் அறிவு=அஞ்ஞானமாம்; (ஆதலால்),அது அறிவு அல= அந்த ஞானம் யதார்த்த ஞானமன்று; அறிவு அறிவதே அறிவு=ஆத்மாவை அறிவதே யதார்த்த ஞானமாம்; (எ-று.)

இயற்றமிழென்பது, தமிழ்மக்கள் தம் இன்னுயிரெனக் கருதும் இலக்கண இலக்கியங்களாய்ப் புலநெறி வழக்கிற் படுவனவாய செய்யுள் நூல், வசன நூல்களின் தொகுதி; அவை சங்க நூல்களும், மற்ற நூல்களும், அவற்றின் உரைகளும் ஆம். இது இசைத்தமிழ், நாடகத்தமிழ் என்பவற்றிற்கு உயிரெனவும், காரணமெனவும் படுதலின் முன்னர் வைக்கப்பட்டது.

இசைத்தமிழென்பது, பண்ணொடு கலந்துந் தாளத்தொடு கூடியும் இயங்குந் தமிழ்ப் பாடல்களாலியன்ற இலக்கியங்களும், அவற்றின் இலக்கணங்களுமாய நூல்

களின் தொகுதி; அவை, முற்காலத்து, நந்தமிழ் நாட்டில் வழங்கிய 'பெருநாரை', 'பெருங்குருகு', 'இசைநுணுக்கம்', முதலியனவும், இடைக்காலத்துத் தோன்றிய தேவார முதலியனவும், இக்காலத்து வெளிப்பட்டு லவுங்கந்த புராணகீர்த்தனை முதலியனவும் ஆம்; இது நாடகத் தமிழுக்கு முன்னர்த் தோன்றினமையானும், சிறப்பும், விளக்கமும் தந்து நிற்பதானும் இயற்றமிழ்கொண் டியங்குவதானும் இடையில் வைக்கப்பட்டது.

நாடகத் தமிழென்பது, கையில் நூலெடுத்துப் படித்தற்குரிய அவகாசமில்லாத வேலைக்காரர்களுக்கும், படிக்கத் தெரியாதவர்களுக்கும் நடித்துக்காட்டி நல்லறிவு புகட்டற்குரிய நெறியைத் தழுவிநிற்கும் நூல்களின் தொகுதி: அவை, முற்காலத்துச், சங்கப் புலவர்களியற்றிய 'பரதம்'; 'அகத்தியம்', 'முறுவல்', 'சயந்தம்', 'குணநூல்', 'செயிற்றியம்', 'மதிவாணர் நாடகத் தமிழ்நூல்', 'கூத்தநூல்', முதலிய நூல்கள் பலவிருப்பினும் இக்காலத்துக் கிடைக்கக்கூடியன சிலப்பதிகார முதலிய சில நூல்களேயாம்.

களவொழுக்கம்பற்றிய செய்திகளை யுணர்த்தும் நூல்களும் நாடகத்தமிழி லடங்குமென்பது "இத் தமிழ் நாடகத்தமிழ் எனப்படும்; என்னை? களவி ஒழுங்குபடக் கோத்துக் கதைபோல, வந்து நாடகத்துக் கேற்றலின்" எனத் தஞ்சைவாணன்கோவை யுரையாசிரியர் கூறுவதாற்புலனும். "நாடகம், கதை தழுவிவருங் கூத்து" என்று அடியார்க்கு நல்லார் கூறுவது இங்குணரத்தக்கது.

இந் நாடகத்தமிழ், வேத்தியலென்றும், பொதுவியலென்றும் கூறப்பட்ட இரண்டு கூறுபாட்டினை யுடையது; வேத்தியல் அகமெனவும், பொதுவியல் புறமெனவுங் கூறுப; அவற்றை, முந்து நூல்களிற் காண்க. இது, இயற்றமிழ், இசைத்தமிழ் என்னு மிரண்டுமின்றி இயங்காமையான் இறுதியில் வைக்கப்பட்டது. முன்னைய இரண்டும் கேள்வியின்பத்தை மாத்திரம் பயக்கும்; இது,கேள்வி இன்பத்தையும் காட்சி இன்பத்தையு மொருங்கே பயக்கும்.



விசாரத்தால், அல்லது நனவிற் சுழுத்தியினு லுற்பன்னமாய சிவப்பிரஹ்மஐக்கியஞானம் அஞ்ஞான நிவர்த்தகமாம்; ஆதலின், அதுவே ஞானமாம். இயல், இசை, நாடகமென்னும் முத்தமிழின் ஞானம் அஞ்ஞான நிவர்த்தகமன்று; ஆதலின், ஞானமன்று, அஞ்ஞானமேயாம் என்பான் 'அயலறிவ தறிவதல வறிவறிவ தறிவே' என்றார். இவ்வாறு திருமந்திரத்தில்,

"தன்னை யறிவ தறிவா மஃதன்றிப்
பின்னை யறிவது பேயறி வாகுமே."

என்றருளிச் செய்திருப்பது காண்க. 'அது' என்பது தொகுதியொருமை. ஏகாரம், பிரித்துக் கூட்டப்பட்டது. செவ்வெண்டொகை விகாரத்தாற்றொக்கது. (௩௩)

(34) நவிலுகலை யறுபத்து நாலுமறி வாரும்
பவலயம தறுசுத்த பரமமறி யாரே.

இ-ள்.—நவிலுகலை அறுபத்து நாலும் = கூறுகின்ற அறுபத்துநாலு கலைகளையும், அறிவாரும் = உணர்பவரும், பவலயம் அது அறு = உற்பத்தி நாசமின்றிய, சுத்தபரமம் அறியார் = பரிசுத்த பரமாத்மாவை யறியார்; (எ-று.)

அறுபத்துநாலு கலைகளாவன அக்கரவிலக்கணம், இலிகிதம், கணிதம், வேதம், புராணம், வியாகரணம், நீதிசாஸ்திரம், ஜோதிடசாஸ்திரம், தருமசாஸ்திரம், யோகசாஸ்திரம் முதலியன. மற்றவற்றை அபிதான சிந்தா

மணியிற் காண்க. 'அறுபத்துநாலும்' என்பதிலுள்ள உம்மை - முற்றும், 'அறிவாரும்' என்பதிலுள் உம்மை-உயர்வு சிறப்பும் ஆம். 'பவலய மதறு' என்பது, பிரஹ்மத்தின் தன்மையை விளக்கவந்த இயற்கை யடைமொழி; இனம் விலக்க வந்ததன்று. 'அது' - பகுதிப் பொருள் விகுதி. (௩௪)

(35) ஆகவறி வாளரறி வாரிவை யனைத்து
மேகவறி வாளரிவை யாவுமறி யாரே.

இ-ள்.—இவை அனைத்தும்=(அறுபத்துநாலு கலைகளாயுள்ள) இவையனைத்தையும், ஆக அறிவாளர் அறிவார்=தேகாத்ம புத்தியையுடையவர் அறிவார்; ஏக அறிவாளர்=அத்துவித ஞானமுடையவர், இவை யாவும்=(அறுபத்துநாலு கலைகளாயுள்ள) இவை யனைத்தையும், அறியார்=உணரார்; (எ-று.)

தேகாத்ம புத்தியை யுடையவர் இவை எல்லாவற்றையும், பொருளெனக் கருதி அப்பியசித்துணர்வார்; ஏக அறிவாளர் பிராரப்தவசத்தால், கலைகளிற் பிரவிர்த்திக்கினும், அவற்றைப், பொருளெனக் கருதி அப்பியசித்துணரார் என்க. உம்மைகள்-முற்றுப்பொருளன. (௩௫)

'கலை முதலியவைகள் மோக்ஷ சாதனமாகாவிடினும், இந்திரிய நிக்கிரகமாகிய தமமானது மோக்ஷசாதனமென நூல்களிற் கூறியிருத்தலால், அஃதுடையோர் முத்தியைப் பெறுவர்' என்னுஞ் சசிவர்ணன் சங்கைக்கு ஆசிரியர் கூறல்.

(36) ஐயறி வறிந்தவை யடங்கினவ ரேனு
மெய்யறிவி லாதவர்கள் வீடது பெறுரே.

இ-ள்.—ஐயறிவு அறிந்து=ஐந்தாகிய ஞானேந்திரிய சுபாவங்களை யறிந்து, அவை அடங்கினவரேனும்=(பஞ்ச



விடயங்களில் செல்லவொட்டாமல்) அவற்றைத் தகைந்தவரா யிருப்பினும், மெய்யறிவிலாதவர்கள்=யதார்த்த ஞானமில்லாதவர், வீடது பெறுர்=வீடுபேற்றை அடையார்; (எ-று.)

*'சாந்தி', †'தாந்தி' யென்பவற்றையுடையராய் நல்லாசிரியனையடுத்துக் கேட்டல், சிந்தித்தல், தெளிதல் என்பவற்றை யியற்றி நிஷ்டைகூடி அனுபூதியைப் பெற்றவர் துன்பநிவர்த்தி இன்பப் பிராப்தி வடிவமுத்தியைப் பெறுவர். கேட்டல் முதலானவைகளுக்குச் சாதனமாயுள்ள சாந்தி தாந்தி என்பவற்றில் மாத்திரம் நிலைபெற்றவர் முத்தியைப்பெறுர் என்பான், 'ஐயறிவு....பெறுர்' என்றுர். இங்கு 'அறிவு' என்பது ஆகுபெயர். 'மெய்யறிவு' - ஜீவப்பிரஹ்ம ஐக்ய ஞானம். உம்மை-உயர்வு சிறப்புப் பொருளில் வந்தது. 'வீடு' என்பது முதனிலைதிரிந்த தொழிற்பெயர். 'அது' பகுதிப் பொருள் விகுதி. (௩௬)

அனுத்ம விஷயமான அபரவித்தையைத் தூஷித்துப் பரவித்தையின் சொருப மிதுவென வுணர்த்தல்.

(37) மெய்ம்மையறி வல்லதமில் வேறறிவ தெல்லாம்
தம்மையறி யும்மறிவ தேயறிவு தானே.

இ-ள்.—தமில்வேறறிவதெல்லாம்=தம்மினும் பின்னமாக (உள்ள அனுன்மப் பொருள்களை அறிகின்ற) வறிவனைத்தும், மெய்ம்மை யறிவல்ல=யதார்த்த ஞானமல்ல; தம்மை அறியும் அறிவதே=(பிரத்யகபின்ன பிரஹ்ம ரூபமாகிய) தம்மையறியும் அறிவே, அறிவு=யதார்த்த ஞானமாகும்; (எ-று.)

* சாந்தி - மனவடக்கம்.
† தாந்தி - பொறியடக்கம்.

"ஈண்டுநானாவென்பது அற்பமுமில்லை;" "எவன் அநேகவிதமாய்ப் பேதத்தைப் பார்க்கின்றானோ அவன் மிருத்தியுவால் (எமனால்), மிருத்யுவையே (மரணத்தையே) பெறுவன்." "யான் வேறு கடவுள் வேறு எனப் பேத பாவனையுடன் உபாசனை செய்பவன் தத்துவத்தை அறியவில்லை." "பசு (விலங்கு) எங்ஙனமோ அங்ஙனம்." என்றல் முதலிய சுருதிகள் பேதத்தை நிந்தித்துள; "அகம் பிரஹ்மாஸ்மி" "அயமாத்மா பிரஹ்மம்" என்றல் முதலிய சுருதிகள் அபேதத்தைப் போதித்துள. அன்றியும், பிரத்யக்ஷசித்த பேதத்தை வேதங்கூறாது; கூறின் அப்பிரமாணமாம், என்னை? அஞ்ஞாத அர்த்தத்தை யுணர்த்துவது பிரமாணம் எனப்படுதலின். அத்துவிதம் அஞ்ஞாதம் (அறியப்படாதது); இதனையுணர்த்துங் கருத்தையேயுடையது வேதம்; துவைத வடிவபேதம் பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்களால் ஞாதம் (அறியப்பட்டது); ஆதலின், அது இதனையுணர்த்துங் * கருத்துடையதன்று; ஆதலின், அத்துவித வடிவமாய் என்றும் விளங்கும் தன்னிடத்துக் காணப்படும் பேதங்கள் யாவும் கற்பிதம். அவற்றின் ஞானம் உண்மை ஞானமன்று; ஆனால், பிராந்தி ஞானமாம் என்பான் 'மெய்ம்மையறி வல்லதமில் வேறறிவ தெல்லாம்' என்றார். வேதாந்த சித்தாந்தத்திற் கூறியுள்ள ஜீவப்பிரஹ்ம ஐக்யஞானமே யதார்த்த ஞானமென்பான் 'தம்மையறி யும்மறிவ தேயறிவு தானே' என்றார். 'தான்' கட்டுரைக்கண்வந்த அசைநிலை. 'அது' பகுதிப் பொருள் விகுதி. 'அறியும்மறி' என்புழி மகரம், ஓசையின் பொருட்டாய் ஒற்றில்வழி வந்தவொற்று. (௩௭)

* எப்பொருளின் ஞானம் விரும்பிய பயனையளிப்பதும், எப்பொருள் பிரத்யக்ஷ முதலிய பிரமாணங்களால், அறியப்படாதுமாமோ, அப்பொருளிடத்தே சுருதிக்குத் தாற்பரியமென்க.



'சிவனைப் பூஜகனாகவும், ஈஸ்வரனைப் பூச்சியனாகவும், பத்திர புஷ்ப முதலியவற்றைப் பூஜாசாதனங்களாகவும் இவ்வாறு பேதமாக அறியும் அறிவு யதார்த்தஞான மாகாதோ' என்னுஞ் சசிவர்ணன் சங்கைக்கு ஆசிரியர் கூறல்.

(38) பூசனையு மதுசகல பொருளுமறி தமையு
மீசனையும் வேறதற வறிவதறி வெனவே.

இ.ள்—'பூசனையும் = ஆராதனையையும், அது சகல பொருளும் = அவ்வாரதனைக்குரிய சகலசாமக்கிரிகளையும், அறிதமையும் (பூஜாவிதிகளைத்) தெரிந்த (பூஜகனாகிய) சிவனையும், ஈசனையும் = (பூச்சியனாகிய) ஈஸ்வரனையும், வேறதற அறிவது = அபேதமாகவறிவதே, அறிவு = யதார்த்த ஞானமாகும்;' என = என்று (மாநந்தபராயண சுவாமிகள்) திருவாய்மலர்ந்தருள, (எ-று.) - 'அருளுகெனவே' என அடுத்த கவியோடு தொடரும்.

யாவுஞ் சுத்தசிவம் என்றுண்டாந் தெளிவே தத்துவ ஞானமென்பதாம். கடலின்கண்ணுதித்த நுரை, திவலை, குமிழிகள் எங்ஙனம் நீர்மயமாமோ அங்ஙனம் பூச்சியனான ஈசனும், பூஜகனான சிவனும், பூஜையும், அதற்குவேண்டிய யாவும் பிரஹ்ம மயமேயென்க.

"புகல ரும்பரப் பிரமமாங் கடறனிற் புணர்பரைத் திரையீசன், சகமொ டாருயி ரெனுநுரை யாதிக டந்து மாற்றிடுமென்றே, பகரு நான்மறை யெனினதி லெதையெ தைப் பற்றுவாம், சுகசொ ரூபமே யனைத்துமென் றகற் றுதி துவிதபா வனைநெஞ்சே"
என்று வைராக்கிய சதகங்கூறுவது இங்குக் காண்க.

'தமையும்=சிவனையும், ஈசனையும்=ஈஸ்வரனையும், வேறதற=(ஔபாதிகபேதமேயன்றி, சொரூபமாகப்) பேதமில்லையென, அறிவது அறிவு = சாக்ஷாத்கரிப்பது யதார்த்த ஞானமாம்; அது=அவ்யதார்த்த ஞானமே, பூசனையும்=(இறைவனுக்குச் செய்யும்) பூஜையும், சகல பொருளும்=சர்வ சாஸ்திரார்த்தங்களும் (ஆம்); அறி=(இவ்வியல்பினையுடைய ஞானத்தின் மகாத்மியத்தை அறியக்கடவாய்,' என=என்று (மாநந்தபராயண முனிவர்) திருவாய்மலர்ந்தருள, என்று அன்னுவயித்துப் பொருள் கூறினும் அமையும்: இஃதமையுமாறு,

"எப்பொருள் களுந்தா னுகி யிலங்கிடு மறிவா மீச
னப்படி விளங்கு கின்ற தறிதலே யவன்ற னக்கு
மெய்ப்படு பூசை வேருேர் செயலினு லன்று மெய்யே
இப்படி ஞானந் தன்னு லிறைஞ்சிடப் படுவா னீசன்"

எனப் பிரமகீதை கூறுவது காண்க.

(௩அ)

பரவித்தையே சம்சார சமுத்திரத்தைத் தாண்டுதற்கேதுவெனவும், தம்மையறியுமறிவேபரவித்தையெனவும் ஆசிரியர்கூறியதுபற்றிச்சசிவர்ணன். 'உலகில்யாவரும்தம்மையறிந்தவர்களாகவே யிருக்கின்றனர்; அத்தமது ஞானம் பிறவிக்கடலின் நிவர்த்திக்கு ஏதுவாகாமல்மாருக அக்கடலின் மூழ்குவதற்கு ஏதுவாயிருத்தலால், ஆசிரியர் அருளிச்செய்த 'தான்' என்னுஞ் சொற்பொருள் இத்தேகத்தினும் வேறுபோற்ருேன்றுகிறது; இதனை, ஆசிரியர் முகமாகவே நன்ருயறிவோம்' எனவெண்ணிச் சங்கித்தல்.

(39) தானெனு முடம்பது தனைத்தவிர வேரு
யானெனு மருத்தமுள வோவருளு கெனவே.



இ-ள்.—'தான் எனும் உடம்பு அது தனைத்தவிர=(நான் மனுடன், நான் பிராமணன் என்பன முதலிய பிரதீதியின் பலத்தால்), தானென்று விவகரிக்கப் படுவதாகிய தூல உடலைத் தவிர, வேருய்=(இதற்கு)ப் பின்னமாய், யான் எனும் அருத்தம் உளவோ=யானென்று விவரிக்கப் படும் (ஆன்மப்)பொருள் உண்டோ?, அருளுக எனவே=(உண்டெனின் அதனைத்) திருவாய் மலர்ந்தருளல் வேண்டும்' என்று (சசிவர்ணன்) கேட்க, (எ-று.)—'நிகழ்கின்றதனு லென' என்று 56-வது செய்யுளோடு தொடரும்.

நான் பருத்தவன் நான் இளைத்தவன், நான்மனுடன் என நிகழும் அனுபவத்தால், இத்தூலவுடம்பே ஆன்மாவெனப்படும். என்னை? எல்லா நூலாசிரியர்களாலும் அகம் சப்தத்திற்கு அர்த்தமும், அகம்பிரதீதிக்கு விடயமும் ஆன்மாவாகுமெனப் படுதலின். கூறியமுறைப்படி அகம் சப்தத்திற்கு அர்ந்தமாந் தன்மையும், அகம் பிரதீதிக்கு விடயமாந் தன்மையும் பருமை, மென்மை முதலிய தர்ம விசிட்ட (கூடிய) தூலவுடம்பினிடத்தே தோற்றுகின்றன; ஆதலின், தூலவுடம்பே ஆன்மா ; இதனினும் புறம்பாக ஆன்மா, அனுபவத்திற்கு விடயமாக வில்லையே என்பான், 'தானெனுமுடம்பது தனைத்தவிர வேருயானெனு மருத்தமுளவோ' என்றும், ஒருகால் தூல வுடம்புக்குப் புறம்பாக வான்மா, இருப்பின் இம்மூடனுக்கு இவ்விரகசியத்தை யுபதேசிக்கலாமா என்று திருவுளத்திற் கருதாமல் என்மீது கருணைவைத்துத் திருவாய் மலர்ந்தருளல் வேண்டுமென்பான், 'அருளுக' என்றும் சசிவர்ணன் கூறினுன். ஓகாரம் வினுப்பொருளில் வந்தது. 'அருளுகென' என்றதில் அகரம் தொகுத்தல். 'அது'-பகுதிப்பொருள்விகுதி. 'தன்'-சாரியை.

(௩௯)

இவ்வாறு, வினவிய சீடனுக்குத் தேகேந்திரியாதி காரிய சப்த வுபாதிகளினின்றும் சுத்தாத்மாவை, வேறு பிரித் துணர்த் தக் கருதிய ஆசிரியர், முதலில் தூல தேகத்தினும் தேகிரூப ஆத்மா வேறெ‌ன, எட்டுச் செய்யுட்க ளால், அருளிச் செய்கின்றார்.

வேறு.

(40) † எனதாடை பொன்பூ மகன்றையல் பாய்மா
விபங்கண் முகங்கால்கை மெய்யென்ன வென்றுந்
தனதா யுரைப்பான் வகுத்திந்த வூனைத்
தானென் றயர்த்துஞ் சொலத்தக்க தன்றே.

இ-ள்.—எனது ஆடை=(உலகின்கண் புருடனானவன்) எனது வஸ்திரம், எனது பொன்=எனதுசுவர்ணம், எனது பூ=எனது பூமி, எனது மகன்=எனது புத்திரன், எனது தையல்=எனது மனைவி, எனது பாய்மா=எனது குதிரை, எனது இபம்=எனது யானை (என்று விவகரிப்பதுபோலத் தேகத்திற்கு வேறாகிய தேகியானவன்), எனது கண்=, எனது முகம்=, எனதுகால்=எனது பாதம், எனது கை=எனதுபாணி, எனதுமெய்=எனது தேகம், என்ன=என்று, இந்த ஊனை=இந்த மாமிசம் பொருந்திய உடலை, வகுத்து=வேறுபிரித்து, என்றும்= எப்பொழுதும், தனதாய் உரைப்பான்=தன்னுடைய தாகக் கூறுநிற்பன்; (எங்ஙனம் தன்னுடையதாக விவகரிக்கப்பட்ட ஆடை முதலிய பதார்த்தங்களினும் அவற்றை உடையோனாகிய அப்புருஷன் வேறோ அங்ஙனம் உடைமைப் பொருளாக விவகரிக்கப்பட்ட கண் முதலிய அவ

† ஆடை முதலியன பிறிதின் கிழமைப்பொருள்கள் எனவும், கண்முதலியன தற்கிழமைப் பொருள்கள் எனவுங்கொள்க.



யவ சமுதாயமான தேகத்தினும் அதனையுடையோனாகிய தேகி வேறேயாவன்; ஆதலின், அது), தான் என்று அயர்த்தும் சொலத்தக்கது அன்று=அகஞ்சத்தார்த்தமென்று மறந்துங் கூறத்தக்கதன்று; (எ-று.)

மமதைக்கு விடயமாதலின் தூலவுடம்பு அனான்மாவேயாம்; இங்ஙனங் கூறியதனால், இவ்வனுமானம் பெறப்பட்டது:—தூலவுடம்பு ஆன்மாவன்று, மமதைக்கு விடயமாதலின், எது எது மமதைக்கு விடயமாமோ அது அது ஆன்மாவன்று, ஆடை முதலியன போலும். தூலவுடம்பு பக்ஷம், ஆன்மாவன்று என்பது சாத்தியம் (துணிபொருள்), மமதைக்கு விடயமாதலின் என்பது ஏது, எது எது மமதைக்கு விடயமாமோ அது அது ஆன்மாவன்று என்பது வியாத்தி, ஆடை முதலியனபோல என்பது திருஷ்டாந்தம் என்றுணர்க. எனது என்னுஞ் சொல் முதனிலைத் தீவகமாய் ஆடை முதலிய உபமானத்தின்கண்ணும், கண் முதலிய உபமேயத்தின் கண்ணும் சென்றியைதலுணர்க.

'இபம்' என்றதின்பின் போன்று எனும் உவமை உருபு தொக்கது. உவமையணி. "தேர்கரிமாகாலாள்" என்புழி மாவென்னுஞ்சொல் குதிரையென்னும் பொருளையுணர்த்துவதுபோன்று 'எனதுமா' என்னுமிடத்து அப்பொருளை உணர்த்தாமையின் 'பாய்மா' எனச் சிறப்புச் சொல்லோடு கூட்டி யுரைத்தனர்.

"வினைசார் பினமிட மேவி விளங்காப்
பலபொரு ளொருசொல் பணிப்பர்சிறப் பெடுத்தே."

என்னுஞ் சூத்திரம் இங்கு உணரத்தக்கது.

பொய்யுடலை 'மெய்' என்பது, மங்கல வழக்கு. பொய்யாயுள்ள உடல் மெய்யென்று புல்லறிவாளராற் கருதப்படுதலின் 'மெய்' என்றாரெனினும் ஒக்கும். 'என்றும்,' என்பதிலுள்ள உம்மை முற்றுப்பொருளது. 'அயர்த்தும்' என்பதிலுள்ள உம்மை இழிவுப்பொருளது. 'ஏ' ஈற்றசை.

(41) தாளாக வூராழி யார்வென்னில் வீணை
தண்டாக வன்மார்பு தட்டாக மொட்டா
நாளாம லர்ச்சென்னி கூந்தற் கொடித்தேர்
நாளுளு மூர்வானில் வேறாக நாடே.

இ-ள்.—தாள் ஊர் ஆழியாக = பாதங்கள் ஊர்ந்து செல்லும் சக்கரங்களாகவும், வென்னில் வீணைத்தண்டு ஆர் ஆக = முதுகிலுள்ள வீணைத்தண்டு அஞ்சுரு ஆணியாகவும், வன்மார்பு தட்டாக = வன்மை பொருந்திய மார்பானது தேர்த்தட்டாகவும், நாளாமலர்ச் சென்னிமொட்டா = அன்றலர்ந்ததாகிய பூக்களணிந்த சிரசானது மொட்டாகவும், கூந்தல் கொடி = கூந்தலானது கொடியாகவும் (இருக்கின்ற), தேர் = (இந்தச் சரீரரூப)ரதம், நாள் நாளும் = எஞ்ஞான்றும், ஊர்வானில் = செலுத்துகின்ற புருடனினும், வேறாக நாடு = அன்னியமாகக் கருது; (எ-று.)

இரதமெனப்படுந் தூலவுடம்பு ஆன்மாவன்று; இரதாரூடன் ஆன்மாவென்பதாம். இங்ஙனங் கூறியதனுல், இவ்வுடம்பு ஆன்மாவன்று, இரதமெனப்படுதலின், பிரசித்த இரதம்போல என்னுமனுமானம் பெறப்பட்டமை காண்க.

இவ்வுடம்பாகிய இரதத்திற்கு இந்திரியங்கள் குதிரைகள், மனம் கடிவாளம், புத்திசாரதி, ஆன்மா எஜமானன் என்றுணர்க. 'நாளுளும்' என்பதில் உம்மை முற்றுப்பொருளது. மொட்டு - கூம்பு; குமிழ்வடிவா யிருப்பதென்



பர். "விடுசுடர்ப் பரிதி தழும்புற நிவந்த கூம்பின்" என்றார் பிறரும். (சக)

(42) கடக்குஞ் சரம்பண்ணி யுண்ணின் றொருத்தன்
கைபாத கன்னங்கண் மெய்போ லியக்குங்
கிடக்கும் நடத்தா விடத்திவ் வுடம்புங்
கிடக்கும் மொருத்தன் னடத்தா விடத்தே.

இ-ள்.—ஒருத்தன் = ஒருபுருடன், கடக்குஞ்சரம் பண்ணி = (மூங்கில் முதலானவற்றுன்) மத ஜலத்தை யுடைய யானையைப்போல (ஒருருவம்) அமைத்து, உள் நின்று = (அவ் யானையின்) உட்புகுந்து நின்று, கைபாதம் கன்னங்கள் = துதிக்கை, கால்கள், காதுகள் ஆகிய இவற்றை, மெய்போல் = உண்மை(யான யானையின் இயக்கம்) போல், இயக்கும் = இயக்கா நிற்பன்; நடத்தாவிடத்து = இயக்காவிடத்து, கிடக்கும் = (அவ்யானைசேட்டையற்றுக்) கிடக்கும்; (அதுபோல), இவ்வுடம்பும் = இத்தேகமும், ஒருத்தன் நடத்தாவிடத்து = (தேகியாகிய) ஒரு புருடன் இயக்காவிடத்து, கிடக்கும் = (சேட்டையற்றுக்) கிடக்கும்; (எ-று.)

இயக்கப்படுவதாகிய விவ்வுடம்பு ஆன்மாவன்று; இயக்கும்புருடனே ஆன்மாவென்பதாம். இங்ஙனங் கூறியமையான், இவ்விடம்பு ஆன்மாவன்று, இயக்கப்படுதலின், தாருவினுற் செய்த யானை யுருவம்போலவென்னும் அனுமானம் பெறப்பட்டதென்க. ஆன்மா, நனவின்கண் ஐம்பெரும் பூதங் கொண்டமைக்கப்பெற்ற வியாவகாரிக தூலவுடம்பினுள்நின்று கை, கால் முதலிய உறுப்புக்களையும் உடலாகிய உறுப்பியையும் இயக்கும்; கனவின்கண் நித்ராதோஷத்தோடுங் கூடிய தூலாவித்தை (காரியாவித்தை)

யினுல், அமைக்கப்பெற்ற பிராதிபாசிக தூலவுடம்பினுள் நின்று கைகான் முதலிய யாவற்றையும் இயக்கும்; உறக்கத்தின்கண் வியாவகாரிக தூலவுடம்பு பிணம்போலச் சேட்டை யற்றுக்கிடக்கும்படி கை, கான்முதலிய வொன்றையும் இயக்காமல் நிற்குமென்க. இஃதெடுத்துக் காட்டுவமையணி. ‘கடம்’ என்னுங் கன்னத்தின் பெயர் அதினின்று பெருகும் மதநீர்க்கு இடவாகுபெயர். குஞ்சரம்-காட்டுப் புதர்களில் மகிழ்ந்து சஞ்சரிப்பது என்றும், துதிக்கையையுடைய்தென்றும் உறுப்புப் பொருள்படும் வடசொல்; (குஞ்சம் - காட்டுப்புதரும், துதிக்கையும்.) ‘கன்னங்கள் என்று பிரிக்காது ‘கன்னம்+கண்’ என்று பிரிக்கினும் அமையும். ‘கிடக்கும்,’ ‘இயக்கும்’ என்பவை செய்யுமென்னும் முற்றுக்கள்.

“தேகமல் லாமல் வேறே தேகியார் காணே னென்ருய்
மோகமாங் கனவில் வந்து முளைத்தவ னெவனீ சொல்வாய்
சோகமாங் கனவு தோனருச் சுழுத்திகண் டவனுர் சொல்
ஆகநீ நனவிலெண்ணு மறிவுதா னேது சொல்வாய்” [வாய்
என்ற கைவல்யச் செய்யுள் இங்குணரத்தக்கது. (சஉ)

(43) * ஒருகூறு மலமாகு மொருகூ றுடம்பாகு
மொருகூறு மனமாகு முண்டற்ற வன்ன
மிருகூறு நீயாகி னெருகூறு நீயா
மிழிக்கும் மலஞ்சோ ரிடப்பட்ட வுடலே.

* “அன்னஜலத்தையுண்ணும் தேகதாரிகள் எத்திரிவிருத ரூப அன்னத்தைப் பக்ஷணஞ் செய்வரோ, எத்திரிவிருத ரூப நீரைப் பானஞ்செய்வரோ, அவ்விரண்டும் ஜடராக்கினியின் சம்பந்தத்தானே மண் முதலிய மூன்று ரூபத்தானே மூவகையாம். இவ்வாறு மூன்று விபாகத்தையடைந்த அன்னநீரின்



இ-ள்.—உண்டு அற்றஅன்னம்=உண்ணப்பட்டுச் சீரணித்த அன்னமானது (ஜாடராக்கினியின் சம்பந்தத்தான் மூன்றுபகுதியாம்; அவற்றுள்), ஒருகூறு மலமாகும்=ஒரு பகுதி அமேத்தியமாகும்; ஒருகூறு உடம்பாகும்=ஒரு பகுதி சரீர ரூபமாம்; ஒருகூறு மனமாகும்=ஒரு பகுதி மனோரூபமாம்; (அவற்றுள்) இருகூறு நீயாகில்=(மலம், மனம் என்னும்)இருபகுதிகள் நீயாகின், இழிக்கும் (சுருதிகளாலும் பெரியோர்களாலும்) நிந்திக்கப்படுவதும், மலஞ்சோரிடப்பட்ட = மலங்கசிந்துகொண் டிருக்கப்பட்டதுமான, உடல்=(தூல)வுடம்பாகிய, ஒருகூறும் நியாம்=ஒரு பகுதியும் நீயாவாய்; (எ-று.)

உண்ணப்பட்ட அன்னம் தூலம், மத்திமம், சூட்சுமம் என மூன்று பகுதியாம்; அவற்றுள் தூலப்பகுதி மலமாகும்; மத்திமப்பகுதி உடம்பாகும், சூட்சுமப்பகுதி மனமாகும். இதனுற்ருன் சுருதியில் மனம் அன்னமயமெனப்பட்டிருக்கிறது, அன்னத்தின் காரியமாகிய மலமும் மனமும் எங்ஙனம் ஆன்மாவன்ரு அங்ஙனம் அன்னத்தின் காரியமாகிய இவ்வுடம்பும் ஆன்மாவன்று என்ப

தைஜச பாகமும் சூட்சுமம், மத்திமம், தூலம் என மூவகையாம். முதலதோ வாக்கு வடிவமாய்ப் பரிணமிக்கும்; இடையதோ மஜ்ஜை வடிவமாய்ப் பரிணமிக்கும்; கடையதோ என்பு வடிவமாய்ப் பரிணமிக்கும்; ஆங்கே, ஜலீய பாகமும் மூவகையாம். முதலதோ பிராண வடிவமாய்ப் பரிணமிக்கும், இடையதோ இரக்த ரூபமாய்ப் பரிணமிக்கும், கடையதோ மூத்திர ரூபமாய்ப் பரிணமிக்கும். ஆங்கே மண்ணின்விபாகமும், மூவகையாம். முதலதோ மனரூபமாய்ப் பரிணமிக்கும், இடையதோ, மாம்சரூபமாய்ப் பரிணமிக்கும்; கடையதோ மலரூபமாய்ப் பரிணமிக்கும்” என்று ஆத்ம புராணங்கூறுதல் இங்குணரத்தக்கது.

தாம். இங்ஙனங் கூறியவற்ருல், உடம்பு ஆன்மாவன்று, அன்னத்தின் காரியமாதலின், மலமுதலியவற்றைப்போல வென்னும் அனுமானம் பெறப்பட்டமை உணர்க. சசிவர்ணன், அன்னமயமாகிய மலம்போல அன்னமயமாகிய மனமும் புறம்பு என்னும் சாஸ்திர வுணர்வைப்பெற்றவனுதலின் அவனுக்குத் தூலவுடல், இந்திரியம், பிராணன் என்னுமிவை மூன்றும் ஆன்மாவல்லவென நிஷேதிக்கப்பட்டபின்னர்,(53, வது செய்யுளில்)அவ்வாறு நிஷேதவாயிலாக ஆன்மாவன்று என்று அறியப்படுவதாகிய மனத்தையும், மலத்தோடு சேர்த்து ஈங்கு (தூலசரீர நிஷேதப் பிரசங்கத்தில்) 'இருகூறு நீயாகி னொருகூறு நீயாம்' என்று எடுத்துக்காட்டு அமையக்கூறினர் ஆசிரியர். 'உண்டு' என்பது செயப்பாட்டு வினைப்பொருளது. 'இழிக்கும்' என்புழி மகரம் இசைப்பொருட்டாய் ஒற்றில்வழி ஒற்ருய் வந்தது.

(சங)

(44) கிளரா தரத்துண்ணு மன்னஞ்சு டக்கை
கிட்டப் பொருதே யிருந்தார் முனிந்தார்
தளரா துறுப்பொன்று முயிர்போக வன்றே
தழற்பள்ளி மீதே துயின்ருர் சகித்தே.

இ-ள்.—கிளர் = மிகுந்த, ஆதரத்து உண்ணும் = அவாவுடன் உண்ணுதற்குரிய, அன்னம் சுட = அன்னமானது தகிக்கும்படி, கை கிட்ட பொருதே = கரமானது சமீபிக்க (அதனைப்)பொறுக்காமல், இருந்து முனிந்தார் ஆர் = இருந்துகோபித்தவர் எவர்?, உறுப்புஒன்றும்தளராது = (கைகான் முதலிய) உறுப்புக்களுள் ஒன்றுங் குறைவுபடாமல், உயிர்போக = பிராணன் நீங்க, அன்றே = அக்கணமே, தழற்பள்ளிமீது = நெருப்பாகிய படுக்கையின் மீது,



சகித்துத் துயின்ருர்(ஆர்) = பொறுத்துக்கொண்டு துயின்றவர் எவர்?; (எ-று.)

'தானெனு முடம்பது தனைத்தவிர வேரு
யானெனு மருத்தமுள வோவருளுக.'

என்ற சீடனுக்கு உடலுக்குப் புறம்பாக உணர்வுடைப் பொருளாகிய ஆன்மா வொன்றுண்டு என்னு மனுபவம் எளிதிலுண்டாம் வண்ணம் ஆசிரியர்,

'கிளரா தரத்துண்ணு மன்னஞ் சுடக்கை
கிட்டப் பொருதே யிருந்தார் முனிந்தார்'

என வினவிய வினுவால், போந்த பொருள், உடல் அன்னத்தின் சுடுகையை உணரவும், மனைவி முதலியோரை நோக்கி வெகுளவும் வல்லதன்று; இதனினும் வேருயொன்று இருத்தல் வேண்டுமென்பதே. பாக்கு வெற்றிலை சுண்ணும்பு மூன்றுங் கூடியவிடத்து ஒரு சிவப்புத் தோன்றுதல் போல, கை, கான் முதலிய உறுப்புக்கள் அல்லது ஐம்பெரும் பூதங்கள் கூடிய கூட்டத்தால், முற்கூறியபடி உணரவும் வெகுளவும் வல்லது உடல்: ஆதலின், அது ஆன்மா என்று சீடன் வினவக்கூடுமென்பதையுணர்ந்து ஆசிரியர்,

'தளரா துறுப்பொன்று முயிர்போக வன்றே
தழற்பள்ளி மீதே துயின்ருர் சகித்தே.'

என வினவிய வினுவால், போந்த பொருள் உடலுக்குப் புறம்பாக ஆன்மா இல்லாவிடின் முன்போன்று சுடுகையை உணரவும் சுற்றத்தாரை நோக்கி வெகுளவும் வல்லதாதல் வேண்டும்; அவ்வாறின்மையின் உணர்வுடைப் பொருளாகிய உயிர் உடலுக்குப் புறம்புபட்டதென்பதே.

முனிந்தவர், ஆன்மனுர் எனவும் துயின்றவர், உடலனுர் எனவும் கொள்க.

'முனிந்தார்', 'துயின்ருர்' என்பவை வழுவமைதி. "உவப்பினு முயர்வினுஞ் சிறப்பினுஞ் செறலினும், இழிப்பினும் பால்திணை இழுக்கினு மியல்பே." என்னும் நன்னூற் சூத்திரம் இங்குணரத் தக்கது. 'ஆர்'—யார் என்பதன் மரூஉ. இது வினுக்குறிப்பு வினைமுற்று; 'முனிந்தார்' 'துயின்ருர்' என்பன வினையாலணையும் பெயர்கள். 'ஒன்றும்' என்பதில் உம்மை முற்று. 'உண்ணும்' என்னும் பெயரெச்சம் அன்னமென்னும் செயப்படு பொருளைக் கொண்டு முடிந்தது. 'ஆர்' என்பது துயின்ருர் என்றவிடத்துங் கூட்டப்பட்டது.

முனிந்தார் = முனிவதற்கு ஏதுவா யிருந்தவரும், துயின்ருர் = துயில்வதற்கு ஏதுவாயிருந்தவரும், ஆர் = யார்? என்று ஒரு வினுவாக்கிப் பொருள்கூறினும் அமையும். இதற்கு விடை உடற்கு வேருகிய வான்மா வென்பது போதரும்; தன்(ஆன்மாவின்)சையோகத்தால், முனிதலும், வியோகத்தால் துயிலுதலும் உடற்கண் ணிகழ்கின்றமையின்.

(45) *நிழற்பாவை † கண்ணுடி யிற்பாவை கைகா
னிமிர்க்கும் முடக்கு மிவன்செய்யு மெல்லாந்
தொழிற்பால வாமற்றிவ் வுடலஞ்செய் தொழிலுஞ்
சுடர்ஞான வடிவான வன்செய்த தொழிலே.

இ-ள்.—நிழல்பாவை = (உடலின்)நிழல்வடிவ சாயையும், கண்ணுடியிற்பாவை = கணணுடியிற் ரேன்றும் பிரதிவிம்பமும், கைகால் நிமிர்க்கும் முடக்கும் = கைகால்களை நீட்டும் மடக்கும்; எல்லாம் = அத்தொழில்க ளனைத்தும், இவன் செய்யும் தொழிற்பாலவாம் = (அதிட்டானமும், பிம்பமும் ஆகிய)இப்புருடன் செய்யும் தொழில்களிடத்தனவாம்; (அதுபோல), இவ்வுடலம் செய்தொழிலும் = இவ்வுடல் செய்கின்ற தொழில்களும், சுடர்ஞான வடிவானவன் = சுயம்பிரகாச சேதன வடிவ ஆன்மாவானவன், செய்த தொழில் = இயற்றிய தொழில்களிடத்தனவாம்;

ஆன்மா நிஷ்கிரியம் என்று மறையன்றயினும், புடைபெயர்ச்சி(சலனம்)சித்துப் பொருளில் நிகழுமன்றி அசித்துப் பொருளில் நிகழாது என்னும் உலக அனுபவம் பற்றி ஆன்மாவை வேறுபடுத்துவதற்கு இவ்வாறு கூறினுரென்க. உண்மையாயாராயின் செய்கையும், செய்விக்கையு மற்றது ஆன்மாவாகும்; ஆனுல், இதன் சன்னிதான மாத்திரத்தால், சூரியன் முன் தாமரைபோன்று, யாவும் தொழிற்படும் என்க.

" செய்கையுஞ்செய் விக்கையுமற் றிருக்குங் காந்தச்
சிலைமலைமுன் னிரும்புகள்சேட் டிக்கு மாபோல்

---

* சரீரம், விருக்ஷ முதலியவற்ருல், எவ்வளவிடத்தில் பிரகாசத்தின் தடையுண்டாகிறதோ, அவ்வளவிடத்தில், பிரகாச விரோதியான அந்தகாரம் (இருள்) உண்டாகிறது; அவ்வந்தகாரம் நிழல்(சாயை) எனப்படும்.

† சிலர், பிரதிபிம்பத்தினைச் சாயை என்பர்; சிலர், 'அந்தகாரம் நீலவுருவமுடையதாதல்போல, சாயையும் நீலவுருவமுடையதாதல் நியமம். படிகம், முத்து என்பவற்றின் பிரதிவிம்பம் வெண்ணிறமுடையதாதலும், பொன்னின் பிரதிவிம்பம் மஞ்சள் நிறமுடையதாதலும், செந்நிறமுடைய மாணிக்கத்தின் பிரதிவிம்பம் செந்நிறமுடையதாதலும் காணப்படுகின்றன. பிரதிவிம்பம் சாயை வடிவமாயின் சகலப் பிரதிவிம்பங்களும் நீலவுருவமுடையதாதல் வேண்டும்; அவ்வாறின்மையின் சாயை வடிவம், பிரதிவிம்பமென்றல் கூடாதென்பர்.

செய்கையுஞ்செய் விக்கையுமற் றிருக்கு மென்முன்
 செடமான வுலகமெலாஞ் சேட்டை செய்யும்.''
என்ற கைவல்யநவநீதம் இங்குணரத் தக்கது. இஃதெடுத்
துக் காட்டுவமையணி. 'பாவை' (பதுமை)என்பது உவம
வாகுபெயர். 'நிமிர்க்கும்' 'முடக்கும்' என்பன வினைமுற்
றுக்கள். 'செய்யும்' என்னும் பெயரெச்சம் தொழிற்பால
என்னும் குறிப்புவினை முற்றிலுள்ள தொழில் எனும் பெய
ரைக் கொண்டு முடிந்தது. 'தொழிலும்' என்பதிலுள்ள
வும்மை இறந்தது தழீஇய எச்சவும்மை. மற்று அசை. ()

(46) அறிகின்ற பொருளென்று மறிவானில் வேறே
 யானலிவ் வூனக நானென்ன லாமோ
செறிகின்ற புள்ளல்ல வேகூடிவ் வகையே
 செடமான வுடனின்னில் வேறென்று தெளியே.

இ-ள்.—அறிகின்றபொருள் = அறியப்படுகின்ற(குட
பட முதலிய) பொருள்கள் (அனைத்தும்), என்றும் = எஞ்
ஞான்றும், அறிவானில் வேறேயானல் = திருஷ்டாவினும்
பின்னமே (யாமென்பது உலகப் பிரசித்த அனுபவமே)
யாமாயின், இவ்வூன் ஆகம் நான் என்னல் ஆமோ = (நம்மா
லறியப்படும்) இந்த மாமிசமயமாகிய உடலை அகம் சப்
தார்த்த மென்பதாகக் கூறலாமா? அன்று; [தேகம்,
ஆத்மா வன்றென்பதைப் பிரகாராந்தரத்தாற் கூறுகின்
றார்.] செறிகின்ற கூடு புள் அல்லவே = நெருங்கி யிருக்
கின்ற கூடு பறவை யல்லவே, இவ்வகையே = இவ்வாறே,
செடமான உடல் = அறிவின்றியதேகமானது, நின்னில் =
(அறிவாகிய) உன்னினும், வேறென்று தெளி = பின்ன
மென்று தெளியக்கடவாய்; (எ-று.)

இவ்வுடல் திருசியமாதலின் ஆன்மாவன்று; திருக்
கே ஆன்மா வென்பதாம். அறிகின்ற பொருள் = அறியப்
படும் பொருள். அஃதாவது ஞாதவஸ்து வென்க.
"குடம்பை தனித்தொழியப் புட்பறந்தற்றே யுடம்போ
டுயிரிடை நட்பு" என்ற திருக்குறளின் பரிமே லழகருரை
யினை யனுசரித்துக், 'கூடு' என்பதற்கு முட்டையென்று
பொருள்கொண்டு கருவுந்தானும் (முட்டையும்) ஒன்றுய்ப்
பிறந்து வேறுந்துணையும் அதற் (கருவிற்) காதாரமாய்
நிற்றலால் அஃது (முட்டை) உடம்பிற் குவமையாயிற்று;
அதனுள் (முட்டையுள்) வேற்றுமையின்றி நின்றே பின்
புகாமற்போகலின் புள் உயிர்க் குவமையாயிற்று என்று
ரைப்பினும் அமையும். 'இல்' என்னும் ஐந்தாம்வேற்றுமை
யுருபுகள் உறழ்வுப் பொருளில் வந்தன. ஓகாரம் எதிர்
மறைப் பொருளது. 'செடம்'-அறியப்படுவது; 'சித்து'-
குன்றுப் பிரகாசம். (சகூ)

(47) நிலமாகும் வற்பென்ற நெகிழ்கின்ற நீரா
 நெருப்பா மிதிற்சுட்ட வெல்லாமு மனிலஞ்
சலமான புரையான வானிந்த வுடலஞ்
 சடமான வைம்பூத வுருவங்க டாமே.

(இ-ள்.) இதில் = இந்தத்தூலவுடலில், வற்புஎன்ற = கடி
னத்தன்மையுடையனவெனச்சொல்லப்படுகின்ற எலும்பு,
மாமிசம், நாடி (நரம்பு), தோல், உரோமம் என்னுமிவை
ஐந்தும், நிலமாகும் = பிருதிவியின்கூறும்; நெகிழ்கின்ற =
நெகிழ்ச்சியுடையனவாகிய சுக்கிலம்(வீரியம்), சோணிதம்
(உதிரம்), உமிழ்நீர்(வாய்நீர்), மூத்திரம், சுவேதம்(வியர்
வை)என்னுமிவை ஐந்தும், நீராம் = அப்புவின்கூறும்; சுட்ட
எல்லாமும் = உஷ்ணத்தன்மை யுடையனவாகிய பசி, தா
கம், சோம்பல், நித்திரை, காந்தி(ஒளி)அல்லது மைதுனம்
என்னுமிவை ஐந்தும், நெருப்பாம் = அக்கினியின்கூறும்;

சலமான = சலனவடிவமாயுள்ள நடத்தல், இருத்தல், ஓடல், விரிதல்(நிமிர்தல்), சுருங்குதல் (வளைதல்) என்னு மிவைஐந்தும், அனிலம் = வாயுவின்கூறும்; புரையான = (சிரம், கண்டம், இதயம், உதரம்(வயிறு), இடை என்பவை களால், அவச்சின்னமாகிய) உட்டுளைகளென்று சொல்லப் படுமிவைஐந்தும், வான் = ஆகாயத்தின்கூறும்; (ஆதலின்), இந்தவுடலம் = இத்தேகங்கள், சடமான = சடசுபாவமு டையனவான, ஐம்பூத உருவங்கள் தாம் = பஞ்சபூத சொரூ பங்களேயாம்; (எ-று.)

எனவே, * தூலதேகம் இருபத்தைந்து தத்துவங்களு டையது என்பது பெற்றும்; இதனை, விரிவாய் உணரவிரும் பின் †விசார சந்திரோதயமுதலிய நூல்களிற்காண்க. இங் குத் தைத்திரிய வுபநிடதத்திற்கூறப்பட்ட ஆகாயமுதலிய பஞ்சபூதங்களின் சிருஷ்டிக்கிரமத்தை அனுசரித்து 'இந்த வுடலம் ஐம்பூதவுருவங்கடாமே' என்றார்; முன்னர் 'ஒருகூ றுடம்பாகு முண்டற்ற வன்னம்' என்றது சாந்தோக்கியத் திற்கூறப்பட்ட தேயுமுதலிய முப்பூதங்களின் சிருஷ்டிக்கிர மத்தை அனுசரித்ததாம். அக்கிரமப்படி உடல் முப்பூத வுருவமாம்; அதில், 'என்பு, மச்சை' என்பவை தேயுவின் வடிவமெனவும், 'உவர்நீர், உதிரம்' என்பவை நீரின்வடிவ மெனவும், 'மாமிசம் மலம்' என்பவை மண்ணின் வடிவ மெனவும் கொள்க.

அன்றியும், 'மனம் அன்னமயம்' என்பதும் 'வாக்கு தேயுமயம்' என்பதும், 'பிராணன் சலமயம்' என்பதும், மூன்றுபூதங்களின்சிருஷ்டிக்கிரமத்தைஅனுசரித்தவையே

* தூலசரீரம் இருபத்தைந்து தத்துவமுடைய தென்ப தைச் சாரீரகோப நிஷதமுதலியவையும் கூறுதல் காண்க.

† விசார சந்திரோதயம் கலை ௩.



யாம். இவற்றையெல்லாம் 43, 49, 50-வது செய்யுட்களிற் காண்க. பிரத்தியக்ஷ அனுபவத்தைக்கொண்டு நிலம், நீர், நெருப்பு, வாயு, ஆகாயம் ஆகிய இவற்றின் கூறுபாடுகளே யுணர்த்தி இவ்வுடலம் ஐம்பூத வுருவமென அறைந்தனர். இதனால், குடமுதலியவை போன்று இவ்வுடல் ஆன்மா வன்று என்று பெறப்பட்டது. யாவருக்கும் இத்தூல வுட லில் ஆன்மபுத்தி உறுதியா யிருத்தலானும், முன்னர்ச் சசிவர்ணன் இதனைவிட ஆன்மா வேறொன்றில்லை என் றதனாலும், 'எனதாடை' என்ற செய்யுள்முதல் 'நில மாகும்' என்றசெய்யுள் ஈறாகவுள்ள எட்டுச் செய்யுட்க ளாற் பன்னிப்பன்னி அனுபவ முதலியவற்றால் இது ஆன் மாவன்று என்றுணர்த்தினர். இதனை யான்மாவென்போர் சார்வாகர் முதலியோர்; இவர்களின் மதமும், கண்டன மும் விரிவாய்க் காணவேண்டின், தத்துவானு சந்தான முதலிய நூல்களிற்காண்க. தூலவுடம்பு மண்வடிவமென வும், நீர் முதலியவை இதற்கு நிமித்தமெனவும் கூறும் தருக்கர் மதம் இங்கு மறுக்கப்பட்ட தறிக. 'வற்பென்ற' 'நெகிழ்கின்ற' 'சுட்ட' 'சலமான' 'புரையான'—வினையா லணையும் பெயர்கள். அவற்றுள், 'நெகிழ்கின்ற' என்பது தவிர மற்றையயாவும் காலவழுவமைதிகள். 'தாம்' என்பது கட்டுரைக்கண்வந்தது. 'உடல்'-பால்பகாவஃறிணைப்பெயர்.

தூல வுடம்பை நிடேதித்து இந்திரியங்கள் ஆத்மாவல்லவென நிடேதிக்கத்தொடங்கி முதலில் ஞானேந்திரியங்கள் ஆத்மாவல்லவெனக் கூறல்.

(48) விழியைப் புமானென்னில் ரவியாதி யாலே
விளங்கின்ற தல்லால் விளங்காமை யாலே
யொழியப் படுங்கன்ன முதனாலு மூன்ற
னுருக்கண்ட கண்டன்னை யொப்பாக வுன்னே.

இ-ள்.—விழியைப் புமான் என்னில்=நேத்திரத்தை யான்மாவென்று கூறலாமே எனின், (அது), * ரவியாதி யால்=சூரியன் முதலிய பிரகாசங்களால், விளங்கின்ற தல்லால்=(உருவ பதார்த்தங்களை விளக்குவதாகத், தான்) விளங்குவதன்றி, விளங்காமையால்=(சுயமே அவற்றை விளக்குவதாகத், தான்) விளங்காமையால், ஒழியப்படும்= ஆன்மாவன்றென்று நீக்கப்படும்; கன்ன முதல்நாலும்= செவி முதலிய நான்கிந்திரியங்களும், உன்றன்=உனது, உருக்கண்ட கண்தன்னை = உருவங்களைப் பார்க்கின்ற கண்ணுக்கு, ஒப்பாக = சமானமாக, உன்=(ஆன்மா வல்லவென்று) நீ கருதுவாய்; (எ-று.)

இந்திரியங்கள் எல்லாவற்றுள்ளும் நேத்திரம் பிரதான மானதால், அதை முன்னர், எடுத்து நிஷேதித்தனர்.

'ரவியாதி' என்பதிலுள்ள 'ஆதி' என்னுஞ் சொல்லால், சந்திரன், அக்கினி, நக்ஷத்திரம், மின்னல் முதலிய பாகியப் பிரகாசமும், மனம், சீவன் முதலிய ஆந்தரப் பிரகாசமும் கொள்க.

செவி முதலிய நான்கிந்திரியங்களும் முற்கூறிய முறைப்படி மனம், சீவன், சாக்ஷி என்னும் ஆந்தரப் பிரகாசத்தால் சப்தமுதலிய பதார்த்தங்களை விளக்குவதாகத் தாம் (செவி முதலியவை) விளங்குவதன்றி, சுயமே அவற்றை (சப்த முதலியவற்றை) விளக்குவதாகத் தாம் விளங்காமையால், அவையும் (செவி முதலியனவும்) ஆன்மா வல்லவென்று நீக்கவேண்டும் என்பான், 'கன்ன முதனாலு முன்ற னுருக்கண்ட கண்டன்னை யொப்பாக வுன்னே' என்றார்.

பொறியை யான்மாவென்னும் வாதமும் கண்டனமும் விரிவாய்க் காணவேண்டின், தத்துவானுசந்தான முதலிய நூல்களிற் காண்க. விளங்குகின்றது எனற்பாலது 'விளங்கின்றது' என்று வந்தது செய்யுள்விகாரம். 'ஒழியப்படும்' என்பது பிறவினைப்பொருளில் வந்தது. (சஅ)

'கர்மேந்திரியங்கள் ஆத்மாவல்லவென நிஷேதிப்பவராய் அக்கர்மேந்திரிய மைந்தனுள் முக்கியமான வாக்கிந்திரியத்தை நிஷேதிப்பதால், ஏனைய பாணி பாத முதலிய இந்திரியங்களும் நிஷேதிக்கப்பட்டனவாமென்னுங் கருத்தால் வாக்கிந்திரியம் ஆத்மாவன்று' என ஆசிரியர் கூறல்.

வேறு.

(49) அழலுண்பொருள்களினுண்பவைமுக்கூறதின்முதற்கூ
றணியென் புருடக் கூறது மச்சைக் கணியாகு
மெழில்கொண்டகடைக்கூறதுவாக்காயெழுமென்றே
யியனன் மறையந் தங்களி சைக்கின் றனவாமே.

இ-ள்.—'அழலுண் பொருள்களின் = அக்கினிபுசிக்கும் பொருள்களுள், உண்பவை =(உயிர்களால்)உண்ணப்படுபவை, முக்கூறு=(ஜாடராக்கினியின் சம்பந்தத்தால்)மூன்று பகுதிகளாம்; அதில்=அவற்றில், முதற்கூறு =முற்பகுதி,

* "சாக்கிராவஸ்தையில், சூர்யாதி சோதிகளின் பிரகாசத்தோடு கூடிய சட்சு முதலிய இந்திரியங்கள் இருக்கின்றன; ஆதலின், அவ்விந்திரியங்களால், உருவமுதலிய பதார்த்தங்களின் ஞானமுண்டாகிறது" என்று தத்துவானு சந்தானங் கூறுவதையும், "ஆலோகத்தோடுங்கூடிய கண்ணிந்திரியம் உருவத்தையும், உருவமுடைய பொருளையும் கவரும்" என்று தருக்கநூல் கூறுவதையும் இங்குணர்க. ஆலோகம் - பிரகாசம்.

அணியென்பு=அடுக்காயுள்ள என்பாகும்; நடுக்கூறது=மத்திமப்பகுதி, மச்சைக்கு அணியாகும்=(எலும்பினுள்ளிருக்கும் கொழுப்புக்குச் சிறப்பை(விருத்தியைத்) தருவதாகும்; எழில்கொண்ட கடைக்கூறது=அழகுவாய்ந்த கடைப்பகுதி, வாக்காய் எழும்=வாக்கு இந்திரியமாய்த் தோன்றும்'; என்று=என்று, இயல்=அனாதியான, நான்மறை அந்தங்கள்=உபநிடதங்கள், இசைக்கின்றன=கோஷிக்கின்றன; (எ-று.)

'அழலுண் பொருள்கள்' - தயிலசத்து(பசையு)டைப் பொருள்கள். 'உண்பவை'-எண்ணெய், நெய்முதலியவை. 43, வது செய்யுளில் 'சாந்தோக்கியத்திலுள்ளபடி' உண்டற்றவன்னம்' எனவும், 50, வது செய்யுளில் 'உண்ணும் புனல்' எனவும் கூறியதுபோல, 'உண்ணுந்தி' என்னாது 'அழலுண் பொருள்களினுண்பவை' என்றது, எப்படித்தீ உண்ணக்கூடும்? என்ற சங்கை வருதலினால் என்க.

இங்கு, சாந்தோக்கியத்திலுள்ள "தேஜோசிதம்" என்ற தொடருக்கு ஸ்ரீசங்கர பகவத் பாதாசாரியர், (உண்ணப்பட்ட) "எண்ணெய், நெய்முதலியவை" என்று பொருள் கூறியிருப்பதையும் அதற்கு ஆனந்தகிரி "எப்படி தேஜஸ் அதாவது அக்கினிமுதலானவை சாப்பிடக்கூடும்? என்கின்ற சங்கையினால் எண்ணெய் நெய்முதலியவை என்று பொருள் செய்யப்பட்டது" என்று விளக்கியிருப்பதையும் உணர்க. இவை(எண்ணெய் முதலியவை),உயிர்கள் உண்டபோது தூலம், மத்திமம், சூட்சுமம் என மூன்று கூறுபடுகின்றன; முதற்கூறு என்பும், மத்திமக் கூறு கொழுப்பும், சூட்சுமக்கூறுவாக்கும் ஆம். இங்கு 'வாக்கு' என்னும் உபலக்கண மொழியால், பாணி, பாதம், பாயுரு, உபஸ்தம் என்னும் கருமேந்திரியங்களையுங் கொள்க. உபலக்கணமாவது - விடாத இலக்கணையால் மிகுதிப் பொருளை யுணர்த்துவது. "ஒருமொழி யொழி தன் னினங்கொளற் குரித்தே" என்ற நன்னூற் சூத்திரம் இங்குணரத்தக்கது. எனவே வாக்கிந்திரியமும், இதனாற் பெறப்பட்ட ஏனைய இந்திரியங்களும் ஆன்மாவல்ல எனப் பெறப்பட்டன. இங்குக் கருமேந்திரிய மைந்தனுள் தலைமைபற்றி வாக்கிந்திரியம் ஆன்மாவன்றெனப்பட்டது. நான்கு கூறுமாய் மறைந்த பொருளும் உடைமையான் 'நான்மறை' யென்றார். நான்கு கூறு:—இருக்கு, எசுர், சாமம், அதர்வணம். அந்தம்=முடிவு; எனவே உபநிடதம். உண்பொருள் வினைத்தொகை. 'நடுக்கூறது','கடைக்கூறது' என்பவற்றில் 'அது' பகுதிப்பொருள் விகுதி. ஆம், ஏ அசைநிலைகள். இந்திரியாத்மவாதியின் மதமும் கண்டனமும் விரிவாய்க் காணவேண்டின் நியாய நூலிற்காண்க. 'அதில்' என்புழி 'அது' தொகுதியொருமை. அன்சாரியை விகாரத்தாற் றொக்கது. (சகூ)

பிராணன் ஆத்மாவன்றென மூன்று செய்யுட்களாற் கூறல்.

(50) உண்ணும் புனன்முக் கூறதின்முதற்கூ றுவர்நீரா
முதிரந் நடுவிற் கூறுக டைக்கூ றுபிராண
னெண்ணும் மிதிலிரு கூறவை நீயா யிடினன்றே
விறுகின் றபிரா ணன்னது நீயா குவையிசையே.

இ-ள—உண்ணும் புனல்=(நாடோறும் உயிர்கள்) உண்ணும்ஜலம், முக்கூறு=(ஜாடராக்கினியின் சம்பந்தத்தால்) முப்பகுதிகளாம்;அதின்=அவற்றுள்,முதற்கூறு=முதற்பகுதி, உவர்நீராம்=மூத்திரமாம்; நடுவிற்கூறு=மத்திமபகுதி, உதிரம்=இரத்தமாம்; கடைக்கூறு=ஈற்றுப்

பகுதி, பிராணன் = பிராணவாயுவாம்; எண்ணும் = (மூன்ருய்க்) கணக்கிடும், இதில் = இவற்றில், இரு கூறவை = இரு கூருயுள்ள மூத்திரமும் இரத்தமுமாய அவை, நீயாயிடி னன்ருே = நீயானு லல்லவா, இறுகின்ற = நாசமாகின்ற, பிராணன் அது = பிராணவாயு வாகிய அதுவும், நீயாகுவை = நீயாவாய்; இசை = நீ கூறுவாய்; (எ-று.)

உயிர்கள் நாடோறும் உண்ணும்நீர் தூலம், மத்திமம், சூட்சுமம்என மூவகைப்பட்டு முறையே மூத்திரமும், உதிரமும், பிராணனும் ஆம். "பிராணன் ஜலமயம்" என்று மறை புகல்வது இங்குணரத்தக்கது. இஃது உபாதி வேறுபாட்டான் ஐவகையாக நூல்களில் விவகரிக்கப்படும். உண்மையான் நோக்கின், அது ஒன்றேயாதலின் ஆசிரியர் பிராணன்ஒன்றையே கூறினர். பிராணனுக்கு உபாதி தொழில் வேறுபாடும், இடவேறுபாடும் ஆம். எப்போதும் மேற்செல்லுதலுடைய வாயு பிராணவாயு; இது நாசி முதல் நாபிவரையிலுள்ள இடங்களிலுள்ளது. கீழ்ச் செல்லுதலுடையவாயு அபானவாயு; இது நாபிமுதல் பாயுருவரையுமுள்ள இடங்களிலுள்ளது. எல்லாப்புறங்களிலுஞ் செல்லுதலுடைய வாயு வியானன்; இஃது உடலெங்கு மிருப்பது. சாங்காலத்தில்மேற் செல்லுதலுடைய வாயு உதானவாயு; இது கண்டத்திலிருப்பது. உண்ணப்பட்ட உணவாதிகளைத் தூலம், மத்திமம், சூக்குமம் என்னும் முக்கூருக்கி அவற்றை அவ்வவ் விடங்களில் அடையச்செய்யும் வாயு சமானவாயு; இஃது உடலெங்குமிருப்பது. சில நூல்களில் இதற்கு நாபி இடமெனப்பட்டுளது; அது முக்கியத் தன்மையாற் கூறப்பட்டது. இவ்வாறு கூறியமுறைப்படி இருவகை யுபாதிகளையுங்காண்க. சிலர்கூறும் நாகன், கூர்மன் முதலியவைகளும், கூறிய பிராணவாயு ஒன்றில் அடங்கும் என்றறிக.



எனவே, நீரின் கூருயுள்ள மூத்திரமும் உதிரமும் ஆன்மா வல்லாதபோது பிராணன் எங்ஙனம் ஆன்மா ஆம்? ஆகாது என்பதாம் 'அது' 'இது' என்பன தொகுதியொருமை; இவற்றில் அன்சாரியை விகாரத்தாற்றொக்கது. 'உதிரங்கடு' 'எண்ணும்மிதி' 'பிராணன்னது' என்பனவற்றில் ஒற்றுக்கள் இசைப் பொருட்டாய் ஒற்றில்வழி வந்த வொற்றுக்கள். (௫௦)

வேறு.

(51) பிராணனுமல்ல துஞ்சி லுணர்வின்மை யாலஃ
துணரும் புலன்க ளொழிவாற்
பிராணன தென்னின் மன்னை யொழியாது சேனை
நகர்சூழ் வலஞ்செய் பொழுதே.

இ-ள்—துஞ்சில் உணர்வு இன்மையாலும் = சுழுத்தியவத்தையில் உணருந்தன்மை யில்லாமையாலும், பிராணன் அல்ல = பிராணவாயு அகம்சப்தார்த்தமன்று; அஃது = (சுழுத்தியில்) அவ் வுணர்வில்லாமை, உணரும் புலன்கள் ஒழிவால் = ஞானேந் திரியங்களின் நீக்கத்தாலாம்; (அவையிருப்பின் பிராணன் உணரும் ஆதலின்), பிராணன் அது என்னின் = பிராணவாயுவே அவ் வாத்மா என்று புகலின், நகர் சூழ்வலஞ் செய்பொழுது = (அரசன்) பவனிவருங் காலத்தில், மன்னைசேனை ஒழியாது = அரசனை நால்வகைச் சேனைகளும் விட்டு நீங்கா; (அதுபோலப் பிராணன் ஆத்மாவாயின் இதனைவிட்டு ஞானேந்திரியங்கள் நீங்கா திருத்தல்வேண்டும், அவ்வாறின்மையின் பிராணன் ஆத்மாவன்று.); (எ-று.)

அறிவுடையோர்க்கு நனவு கனவுகளிலும்பிராணன், வாயுவின் விகாரமாவதால் வாயுவைப் போன்று உணர்

வின்றியதென நன்கு புலப்படுமேனும் ஒளியின்றிய இரும்புருண்டை ஒளியுடைய நெருப்போடு கூடியபோது ஒளியுடையதுபோற்றோன்றி அதனோடுகூடாது தனியேயிருக்கும்போது அஃது ஒளியின்றியதென நன்கு விளங்குவது போன்று அறிவிலார்க்கு நனவுகனவுகளில் ஐம்புலன்களோடு கூடியிலங்குவதால் பிராணன் சித்துப் பொருள் போல் விளங்கும். உறக்கத்தில் அவற்றோடு கூடாது தனியே யிருப்பதால்பிராணனதுஇயற்கையாயுள்ள உணர்விலாத்தன்மை நன்குபுலப்படும் என்பான் 'துஞ்சிலுணர்வின்மையால்' என்றார். இதனால், பிராணன் ஆத்மாவன்று; உணர்விலாமையால், குடம்போலும் என்னும் அநுமானம் பெறப்பட்டமை யுணர்க.

உணரும்புலன்கள் - மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் உணர்கருவிகள். தருக்கர் மனதோடு கூடியபோது ஆன்மா உணர்வுடையதெனவும் கூடாதபோது உணர்வின்றியதெனவும் புகல்வதுபோல் பிராணன் உணர்கருவிகளோடு கூடியபோது உணர்வுடையதும் கூடாதபோது உணர்வின்றியதுமாம். ஆதலின், பிராணன் ஆன்மாவாகும் என்பான் 'அஃதுணரும் புலன்களொழிவாற்பிராணனது' என்று கூறப்பட்டது. இஃது, அரசன் பவனிவருந் திருஷ்டாந்தங்கொண்டு ஆசிரியரான் மறுக்கப்பட்டது என்க. ஆராய்ந்துணரின் உணர்கருவியாகிய ஐம்புலன்களும் ஐம்பூதவடிவாதலின் அவற்றோடுகூடிய பிராணன் எவ்வாறுணர்வுடையதாகும்? உணர்வுடையதாயின் வெளிவாயுவும் அவ்வாறிருத்தலின் உணர்வுடையதாதலும் ஆன்மாவாதலும் வேண்டும். அவ்வாறன்மையின் பிராணன் ஆன்மா என்றல் பொருந்தாமைபெற்றாம். உசுவாசநிசுவாசமே பிராணனது பவனியாம். 'சூழ்' என்பது வினை



யெச்சவிகுதிகெட்டது. 'மன் + ஐ'-இரண்டனுருபு. உம்மை பிரித்துக் கூட்டப்பட்டது. தாஷ்டாந்தம் எஞ்சிநின்றமையின் வருவித்துரைக்கப்பட்டது. அல்ல - ஒருமையிற்பன்மைமயக்கம். 'புலன்' - ஆகுபெயர். (ருக)

(ரு2) கரண மொடுங்க வாயு நிகழ்வென்கொ லென்னி
னுடல்காவ லாகு மலதேன்
மரண மடைந்த தென்று தமர்சுட் டிடாமுன்
வளைவாலின் ஞாளி கொளுமே.

இ-ள். (பிராணன்ஆன்மாவன்றாயின்), கரணம்ஒடுங்க = (உறக்கத்தில்)செவி முதலிய சர்வ கருவிகளும் அடங்க, வாயுநிகழ்வு = (உசுவாச நிசுவாசரூபத்தால்), பிராணவாயுவின்றோற்றம், என்கொல் என்னின் = எதன்பொருட்டெனின், உடல்காவலாகும் = (அது, அவ்வுறக்கத்தில்)உடற்குக்காவலாகும்; [விபக்ஷத்திற் பாதகத்தைக்கூறல்] அலதேல் = மாறாயின், (அவ்வுடலை) மரணமடைந்ததென்று = மரணதசை அடைந்துவிட்டதென்று, தமர் = சுற்றத்தினர், சுட்டிடாமுன் = தகனஞ்செய்வதற்கு முன்னமே, வளைவாலின் = வளைந்தவாலினையுடைய, ஞாளி = நாய், கொளும் = உட்கொள்ளும்; (எ-று.)

கரணமெனப் பொதுப்படக் கூறினமையின், அகக்கரணம், புறக்கரணம் இரண்டையும்கொள்க; அகக்கரணம்- அந்தக்கரணம். புறக்கரணம் - இந்திரியம். ஞாளியென்னுஞ்சொல் நரி முதலியவற்றிற்கு உபலக்கணம். இதன்றன்மை முன்னர்க்கூறப்பட்டது.

உறக்கத்தில்பிராணன் ஒடுங்காமல்மெய்க்குக்காவலாய் இயங்குதல் உயிர்கள்மீது அருளுடைய இறைவன் நியதியென்க. கொல், ஏ அசைநிலை. 'வளைவால்'வினைத்தொகை.

இவ்வாறு சுருதி முதலியவற்றால், பிராணாத்ம வாதத்தை மறுத்தனர். பிராணாத்மவாதியின் மதமும் கண்டனமும் விரிவாயுணர விரும்பின் ஆன்ம புராண முதலிய நூல்களிற் காண்க. (௫௨)

மனம் புத்திகள் ஆன்மாவல்லவெனக் கூறல்.

(53) இனமுற வெண்ண வுள்ள கரணத்தி லொன்றி
தெனலாலி தென்ன தெனலான்
மனமுன மன்ன மென்ற வதனாலு மல்ல
மதியல்ல வந்த வகையே.

இ-ள்.—இனம் உறவு=கூட்டமாகவும் உறவாகவும், எண்ணவுள்ள=(நான்காக)எண்ணுதற்கிருக்கின்ற,கரணத்தில்=அந்தக் கரணங்களுள், இது ஒன்று எனலால்=இம்மனம் ஒன்றென்று கூறப்படுவதனாலும், இது என்னது எனலால் = இம்மனம் என்னுடையதென்று(மமதைக்கு விஷயமாய் விவகரிக்கப்படுவதனாலும். மனம்=இம்மனம். முனம்=முன்னர் (43, வது செய்யுளில்), அன்னம் என்ற அதனாலும்=அன்னத்தின் காரியமென்று கூறப்பட்டிருத்தலாலும், அல்ல=இம்மனது ஆத்மாவன்று; அந்தவகையே=அவ்வாறே,மதியல்ல=புத்தியுமாத்மாவன்று; எ-று.

ஈண்டுக்கரணமென்பது கருவியென்னும் பொருண் மாத்திரையாய் நில்லாது அந்தக்கரணத்தை யுணர்த்தி நின்றது. மனத்தான் சங்கல்பித்தேன் என்றவனுபவத்தான் மனத்தின்கண் சங்கல்பித்தற்றொழிலுக்குக் கரணத்தன்மை பெறப்படுகின்றது; எது ஒரு தொழிலைக் குறித்து கரணமாகிறதோ அது ஆத்மாவன்று; கோடரி வெட்டுதற்றொழிற்குக்கரணமாவதால், ஆத்மாவன்றாதல்போல. மனதும் சங்கல்ப முதலிய தொழில்களைக் குறித்துக் கரணமா



வதால் ஆன்மாவன்று என்பான் 'கரணத்தி லொன்றி தெனலால்மனமல்ல' என்றார். இதனால் இவ்வனுமானம் பெறப்படுகின்றது:—மனம்ஆத்மாவன்று,கரணமாவதால், கோடரிபோலும். நானென்று கூறப்படுவதும், நானென்று உணரப்படுவதும் ஆன்மாவென்பது எல்லா நூலாசிரியர் கட்குமொப்ப முடிந்த கொள்கையாம்; இம்மனம் எனதென்று கூறப்படுவதும்,எனதென்றுஉணரப்படுவதுமாயிருத்தலின் ஆன்மாவன்று என்பான் 'இதென்னதெனலான் மனமல்ல' என்றார். இதனால், இவ்வனுமானம் பெறப்படுகின்றது:—மனது ஆன்மாவன்று, எனதெனப்படுவதால், ஆடைபோலும். அன்னத்தின் காரியமாதலின் மலம் ஆன்மாவாகாமைபோல மனமும் ஆன்மாவன்று என்பான் "முனமன்ன மென்ற வதனா லுமல்ல" என்றார். இதனால் இவ்வனுமானம் பெறப்படுகின்றது :—மனம் ஆன்மாவன்று, அன்னத்தின் காரியமாதலின், மலம்போலும்.

புத்தியும், நிச்சயித்தற்றொழிற்குக்கருவியாதலானும், எனதெனப்படுதலானும், அன்னத்தின் காரியமெனப்படுதலானும் ஆன்மாவன்றென்பான் 'மதியல்லவந்தவகையே' என்றார். புத்தியால் நிச்சயித்தேன் என்ற அனுபவத்தாற் புத்தியும் கரணமாதல் காண்க. இவற்றின் வாதமும், கண்டனமும் விரிவாய்க் காணவேண்டின் தத்துவானுசந்தான முதலிய நூல்களிற்காண்க. 'அல்ல' என்பவை ஒருமையிற் பன்மை மயக்கம். (௫௩)

அகங்காரமாத்மாவன்றெனக் கூறல்.

(54) இடரின் புளதாய் நிலையற் றறிவற்
றெண்ணுங் கரணங் களிலா யெவரு
மடரும் பிறவிக் கடியென் றுணரு
மகங்கா ரமுநீ யலவென் றறியே.

இ-ள்.—'இடர்இன்புஉளதாய்=இன்பத்துன்பங்களுடையதாய், நிலையற்று=அசாஸ்வதமாய், அறிவு அற்று=சடமாய், எண்ணும்=(நான்கென)எண்ணப்படுகின்ற, கரணங்களில் ஆய்=அந்தக்கரணங்களுள்ஒன்றாகி, அடரும்=நெருங்கிய, பிறவிக்கு அடி என்று=ஜனனத்திற்கு மூலமென்று, எவரும்=யாவராலும், உணரும்=அறியப்படும், அகங்காரமும்=அகங்கார தத்துவமும், நீஅல என்று=நீ யன்று' என்று, அறி=உணர்வாய்; (எ-று.)

நனவிலும், கனவிலும் அகங்காரமுண்டு இன்பத்துன்பங்களுமுண்டு; உறக்கத்தில்,அகங்காரமில்லை இன்பத்துன்பங்களுமில்லை என்னும் உடன்பாடெதிர் மறைகளாலும், அந்தக் கரணத்தின் அவஸ்தா விசேடமாதலாலும் அகங்காரம் இன்பத்துன்பங்களுடைய தென்பான் 'இடரின்புளதாய்' என்றும், ஓரவத்தையிலிருந்து மற்றோரவத்தையின்மையின் 'நிலையற்று' என்றும், தன்னையும், பிறவற்றையுமுணரும் ஆற்றலின்மையான் 'அறிவற்று' என்றும், உடல் முதலியவற்றை யானென்று அகங்கரித்தற்குக்கருவியாதலின் 'கரணங்களிலாய்' என்றும், இது பிறவிக்கு முக்கியமான காரணம் ஆனமையானும், நூல்களிற் பிறவிவிருக்ஷமெனவும், அதற்கு அகங்காரம் வேரெனவுங்கூறப்படுதலானும் 'பிறவிக்கடி' என்றும் அகங்காரத்தையிவ்வாறு விசேடித்துக் கூறினர். இவ்வகங்காரம் சாமானியம் விசேடம் என்னும் வேறுபாட்டால் இருவகைப்படும்; நான் நானென்று பொதுவாய்த் தோன்றும் அகங்காரம் சாமானியமெனவும், நான் பண்டிதன், நான்றுறவி என்றல் முதலிய வடிவாய்த் தோன்றுவது விசேடமெனவுங் கொள்க. 'உளதாய்'முதலிய வினையெச்சங்கள் 'உணரும்' என்னும் பெயரெச்சங் கொண்டுமுடிந்தன. 'அல்ல'என்பதுஒருமையிற்பன்மைமயக்கம்.

(௫௪)



சித்தம் ஆத்மா அன்றெனக் கூறல்.

(55) ஐயப் படலோர் பொருணிச் சயமா
யறியப் படல்யா னெனதென் றுமதஞ்
செய்யப் படல்செய் வதுசிந் தனையாஞ்
சித்தம் மதுவன் றெனநீ தெளியே.

(இ-ள்.)ஐயப்படல் ஓர்பொருள்=ஐயப்படற்குவிடயமாகிய ஒரு பொருளையும், நிச்சயமாயறியப்படல் ஓர் பொருள்=உறுதியாய்அறிதற்குவிடயமாகியஒருபொருளையும், யான் எனதென்று மதஞ்செய்யப்படல் ஓர் பொருள்=யான் எனதென்று அபிமானித்தற்கு விடயமாகிய ஒரு பொருளையும், சிந்தனை செய்வது சித்தம் ஆம்=சிந்திப்பது சித்தமாம்;(ஆதலின்), அது=அச்சித்தம், அன்று என=ஆன்மா வன்றென்று, நீதெளி=நீதெளிவாய்; (எ-று.)

ஐயப்படும்பொருளையும், துணியப்படும்பொருளையும், யானெனதென்று அகங்கரிக்கப்படும் பொருளையும் சிந்திப்பதற்குக்கருவியாதலின் சித்தம் கோடரிபோன்று ஆன்மா வன்று என்பதாம். 'ஐயப்படல்', 'நிச்சயமாயறியப்படல்', 'யானெனதென்று மதஞ்செய்யப்படல்' இவை மூன்றும் முறையே மனம், மதி, அகங்காரம் ஆகிய இவற்றின்றொழில்களாகுமென்க. இவ்வாறு தத்துவானுசந்தான நூலாசிரியருங்கூறுதல் காண்க. அந்தக்கரணமொன்றே சங்கற்பம், நிச்சயம், அபிமானம், ஸ்மரணம் என்னும் விருத்தி வேறுபாட்டால் மனம், புத்தி. அகங்காரம், சித்தம் என நான்கு வகைப்படுமெனவும், சங்கற்ப விருத்தியுடைய அந்தக்கரணம் மனமெனவும் நிச்சயவிருத்தியுடைய அந்தக்கரணம் புத்தியெனவும் அபிமான விருத்தியுடைய அந்தக்கரணம் அகங்காரமெனவும் ஸ்மரணவிருத்தியுடைய

அந்தக்கரணம் சித்தமெனவும் உணர்க. சில நூலாசிரியர் சித்தத்தை மனத்திலும் அகங்காரத்தைப் புத்தியிலும் அடக்கி அந்தக்கரணம் இரண்டென்பர். இவ்வந்தக்கரணம் அணுப்பரிமாண முடையதென்று தருக்கரும், விபுப்பரிமாண முடையதென்று மீமாம்சகரும், இடைப்பட்ட பரிமாண முடையதென்று வேதாந்த சித்தாந்திகளும் கூறுவர்; இவற்றுள் மனம் அணுவாயின் நீரில் மூழ்கியவனுக்கு உடலெங்கும் இன்பவுணர்ச்சி யுண்டாகாததாகலானும், விபுவாயின் ஆன்மாவும் அவ்வாறிருத்தலின் ஆன்மமனக்கூட்டம் பொருந்தாமையானும் முதலிருபக்ஷமும் குற்றமுடையனவாம்; கூறியகுற்றங்களுள் ஒன்றுமின்மையான் இறுதியிற் கூறியபக்ஷமே சிறந்ததாம். 'செய்வதுசிந்தனை' என்பதைச் சிந்தனைசெய்வது எனமாற்றிப் பொருள்கூறப்பட்டது. 'ஐயம்'-ஒருபொருண்மேல் இருபொருட்டன்மை கருதிவரும் மனத்தடுமாற்றம். இதனினும் வேறுபட்டவுணர்ச்சி துணிவு. 'ஓர்பொருள்' முதனிலைத்தீவகம்; ஏனை ஈரிடத்துங் கூட்டப்பட்டது. (ருரு)

முன்னர் வெவ்வேறு யுக்திகளால் தனித்தனியே ஆத்மாவன்றென நிஷேதித்துள்ள தூலவுடம்புமுதற் சித்தமீறாகிய பொருள்களனைத்தையும் இப்போது தொகுத்து, அவை அறியப்படு பொருளாதலால் ஆத்மா வல்லவெனக் கூறல்.

(56) முன்னா கவுடம் பதுசித் தமதே
முடிவா கமொழிந் தபொருட் டிரடா
னின்னா கிலநீ யறியும் பொருளாய்
நிகழ்கின் றதனா லெனநின் மலனே.

இ-ள்.—உடம்பு அது முன்னாக=தூலதேகம் முதலாக, சித்தம் அதுமுடிவாக=சித்தமீறாக, மொழிந்தபொருள்திரள்=கூறிய தத்துவக்கூட்டங்கள், நீயறியும்பொருளாய்=உன்னாலறியப்படும் பொருளாய், நிகழ்கின்றதனால்=விளங்குகின்றபடியால், நின் ஆகு இல=உனதுயதார்த்தசொரூபமல்ல, என நின்மலன்=என்று மாநந்தபராயணமுனிவர் கூறியருள, (எ-று.)—'யானாகுவதென்றனன்' என அடுத்தகவியோடு தொடரும்.

எவன் எதையறிவனோ அவன் அதனினும் வேறுவன் என்பது நியமம். உடல், இந்திரியம், பிராணன், மனம், புத்தி, அகங்காரம், சித்தம் என்னுமிவற்றை நீயறிகின்றனையாதலின் இவை நீயல்ல வென்பதாம்.

"நாடக சாலையிலுள்ள தீபமானது இராஜா, மந்திரி, வேலைக்காரன், கூத்தாடுபவள், வாத்தியக்காரர்கள், சபையோர் என்னுமிவர்களுள்ளபோது இவர்களது உண்மையை(இருப்பை)யும், இல்லாதபோது இவர்களது இன்மையையும் விளக்குவதுபோலத் தூலவுடலாகிய நாடகசாலையில் சாட்சியாகியநீ தீபமாயிருக்கிறாய்; இத்தகைய நீ சிதாபாஸனாகிய இராஜா, மனமாகிய மந்திரி, பிராணனாகிய வேலைக்காரன், புத்தியாகிய கூத்தாடுபவள், பத்திந்திரியமாகிய வாத்தியஞ்செய்பவர், சப்தமுதலிய ஐம்புலன்களென்னுஞ் ஜனங்கள் என்னுமிவர்கள் நனவுகனவுகளில் உள்ளபோது இவர்களையறிகிறாய்; உறக்கத்தில் இவர்களில்லாதபோது இவர்களது இல்லாமையை யறிகிறாய்" என்ற உவமான வுபமேயங்களிங்குணர்க. முன்னர்த் தனித்தனியே எடுத்துக்கூறியவற்றைப் புலப்படுத்த வேண்டித் தொகுத்துக்கூறலால் இச்செய்யுள்முடிந்தது முடித்தலென்னும் யுக்தியோடுகூடியதாம். 'உடம்பது', 'சித்தமது' என்பவற்றில் 'அது' பகுதிப்பொருள் விகுதி. 'தான்,' 'ஏ'

அசைநிலைகள். 'நின் ஆகு இல' என்னுஞ் சொற்றொடரில் 'ஆகு' என்பது, ஆகம் என்பதன் திரிபு. 'பேதம்' என்பது பேது என வருதல்போல. ஆகம் = உருவம் (௫௬)

என்னாலறியப்படும் ஞாதவஸ்துக்கள் யானல்லவாயின், என்னாலறியப்படாத அஞ்ஞாதவஸ்துவோ யானாயிருப்பது எனச்சசிவர்ணன் வினவுதல்.

(57) உன்னா லறியப் படும்யா வையுமுன்
னுருவன் றெனவோ தினையொக் குமெனக்
கென்னா லறியா தொழிம் பொருளோ
யானா குவதென் றனனென் றலுமே.

இ-ள்.—உன்னால் அறியப்படும் யாவையும் = உன்னாலறியப்படும் ஞாதவஸ்துக்களனைத்தும், உன் உருவு அன்று என ஓதினை = உனது யதார்த்த சொரூபமல்லவென்று தேவரீர் கூறினீர்; எனக்கு ஒக்கும் = அஃது எனக்குச்சம்மதம்; (ஆனால்), என்னால் அறியாது ஒழியும்பொருளோ = என்னாலறியப்படாமல் நீங்கியிருக்கும் வஸ்துவோ (அஞ்ஞாதவஸ்துவோ) யான் ஆகுவது = அகம் சப்தார்த்தமென்று கூறப்படுவது? என்றனன் = என்று கூறினன்; என்றலும் = என்று கூறியமாத்திரத்தில், (எ-று.) - 'அசிபதப்பொருளாவதே' (யென்றார்), என 61-வது செய்யுளோடு தொடரும்.

அறியப்படும் பொருள்கள் யாவையும் நேதித்தவிடத்து மிஞ்சிநிற்கும் அறியப்படாப்பொருளோ யானாகுவது என்பான் 'என்னா லறியா தொழியும் பொருளோ யானாகுவது' என்றனன். அறியாதொழியும் பொருள் = வியாகிருதரூபமான ஜகத்திற்குப் பீஜரூபமாகிய அவ்வியாகிருதவஸ்து. 'யாவை' என்னும் அஃறிணைப்பன்மைப்பெயர் எல்லாம் என்னும் பொருள்பட நின்றது. (௫௭)



ஞாதாஞ்ஞாத வஸ்துக்களின் சொரூபத்தைக் கூறுதலோடு அவ்விரண்டும் ஆத்மாவல்லவெனச் சுருதிகள் கூறுகின்றன எனல்.

(58) அறியாப் பொருள்கா ரணமா யைகுறித்
தறியும் பொருள்கா ரியமா முலகிந்
நெறியாற் றிகழ்நான் மறையந் தமெலாம்
நீயன் றெனவோ துநிரந் தரமே.

இ-ள்—அறியாப்பொருள் காரணம் மாயை = (இஃதென்று சுட்டி)யறியப்படாதபொருள் (ஜகத்)காரணமான மாயையாகும்; குறித்து அறியும்பொருள் காரியமாம் உலகு = (இஃதென்று)சுட்டி யறியத்தகுந்தவஸ்து (மாயையின்) காரியமாகிய வுலகாகும்; இந்நெறியால் = (காரணமாகிய மாயையும்அதன்காரியமாகியஉலகமும்அஞ்ஞாதமும் ஞாதமுமாயிருக்கும்) இந்த முறையால், திகழ் நான்மறை அந்தம் எலாம் = விளங்குகின்ற நான்கு வேதங்களின் முடிவாகிய உபநிடதங்களனைத்தும், நீயன்று என நிரந்தரம் ஓதும் = (அவைஆத்மாவாகிய) நீயல்லவென்றுஇடைவிடாமல் கூறுநிற்கும். (எ-று.)

இவ்விருவகைப்பொருளும் யானல்லவாயின் பின்னை நான் யார்? எவ்வாறுணர்வது? என்றதற்கு ஆசிரியர் பகரல்.

(59) அறியும் பொருளன் றறியாப் பொருளன்
றறிவா கியநீ யெனுமப் பொருடான்
பொறியின் வழிநின் றறியும் பொருளோ
போதக் கண்விழித் தறியும் பொருளே.

இ-ள்—அறியும்பொருள் அன்று = (ஆதலால்), ஞாதவஸ்துஎப்படிநீயன்றோஅப்படி, அறியாப்பொருள் அன்று

=அஞ்ஞாதவஸ்துவும் நீயன்று; (பின்னையான் எத்தன்மையனாயுள னெனின்), அறிவாகிய=(ஞாதாஞ் ஞாதங்களிரண்டையும் அன்னியப் பிரகாச நிரபேக்ஷமாயறியும் அனுபவரூபமான சொப்பிரகாச) சேதனமாகிய (வஸ்துவே), நீ எனும்=(ஆத்மாவாகிய) நீயென்று சுருதிகள் கூறும்; [இங்ஙனஞ் சொப்பிரகாச சேதனரூபமா யானிருப்பின், அது எனக்கு ஏன் விளங்கவில்லை என்னுஞ் சங்கைக்கு ஆசிரியர் கூறல்.] அப்பொருள்=அவ்வாத்ம வஸ்துவானது, பொறியின்வழி நின்று அறியும்பொருளோ=இந்திரியத்தின் வழியாகநின்று அறியத்தகுந்த பொருளா? (அன்று),[மற்றெப்படியறிவதெனின்]போதக்கண்விழித்து அறியும்பொருள்=ஞானக்கண்ணைத் திறந்து அறியத்தகுந்த பொருளாகும். (எ-று.)

இங்குப் பொறி என்றது உணர்கருவியை. விழி, உருவத்தையும் உருவுடைப் பொருளையும், மெய், பரிசத்தையும் பரிசமுடைப் பொருளையும், நா, மூக்கு, செவி இவை மூன்றும் முறையே சுவை, நாற்றம், ஒலி என்பவற்றையும் அறியவல்லனவாம்; கூறியமுறைப்படி உருவமும் உருவுடைப் பொருளும், பரிசமும் பரிசமுடைப் பொருளும்,சுவை,நாற்றம்,ஒலி என்பனவும் பிரஹ்மம் அல்லாமையின் அதனையறியும்வன்மையற்றனவாம்; ஆதலால், இவற்றைக்கொண்டு அதனை உணருதல் கூடாதாதலின் 'பொறியின் வழிநின் றறியும் பொருளோ' என்றார். இங்குப்'போதக்கண்' என்றது தத்துவமசி யென்னுஞ் சத்தப் பிரமாணத்தாற் றோன்றும் சாப்திப்பிரமை எனப்படு மகண்டாகார விருத்தியாகிய அபரோக்ஷ அனுபவத்தை. விளக்குக் குடமுதலியவற்றை விளக்குவதுபோன்று இதுவும் பிரஹ்மத்தைவிளக்கும் வன்மையுடையதன்று. ஆனால்,



குடத்தினால் மூடப்பட்ட விளக்கானது தண்டத்தினாற் குடமழிந்தவுடன் தானே விளங்குவதுபோல,அஞ்ஞானத் தான்மூடப்பட்டபிரஹ்மம்அகம்பிரஹ்மமெனும்அகண்டாகார விருத்தியினால் அஞ்ஞானமழிந்தவுடன் தானேவிளங்குகின்றது. இவ்விருத்திஅஞ்ஞானத்தையகற்றுவதேபிரஹ்மத்தைவிளக்கு(அறி)கிறது என்பதாம். இஃது உபசாரமேயன்றி வேறன்று என்க. ஐயந்திரிபின்றிய அபரோக்ஷ ஞானமொன்றானேயே பிரஹ்மம் அறியப்படுமென்பான் 'போதக்கண் விழித்தறியும் பொருளே' என்றார். விழித்தறியுந் தன்மை - பிரதிபந்தரகிதத் தன்மை. ஓகாரம் எதிர்மறைப் பொருளது.

“அறிபடும் பொருணீ யல்லை யறிபடாப் பொருணீ யல்லை
அறிபொரு ளாகு முன்னை யனுபவித் தறிவாய் நீயே”

என்பதும்,

“புரிகின்ற விருத்தி யொன்றே போதுமெய்ப்
பொருள்காண் போர்க்கே”

என்பதும் இங்குணரத் தக்கவை. (௫௯)

கூறிவந்த சொப்பிரகாச ரூபமாகிய ஆத்மாவே வேதப் பிரதி பாத்தியமான அர்த்தமாமெனல்.

(60) வேதப் பொருடா னிதுவே றுசொலும்
வினையா வையுமன் றொருவே றுமிலாப்
போதப் பொருளந் தமறைக் கணியாம்
புனிதப் பொருடத் வமசிப் பொருளே.

இ-ள்—இதுதான்=இவ்வியல்பினதாய சுயம்பிரகாச சேதனமாகிய ஆத்மாவே, வேதப்பொருள்=வேதப்பிரதிபாத்தியமாகிய அர்த்தமாம்; [ஆத்மாவேதத்தாற் பிரதிபாதிகப்படுவதுபோலக் கர்மமும் வேதத்தாற் பிரதிபாத்தியமாகலின் ஆத்மாவே, வேதப்பிரதிபாத்தியமான அர்

த்தமாமென்பது எங்ஙனம் என்னுஞ் சங்கைக்கு ஆசிரியர் விடை பகரல்]. வேறு சொனும் =(இவ்வியல்பினதாய ஆத்மாவிற்கு)அன்னியமாக(வேதத்தாற்)கூறப்பட்ட,வினை யாவையும்அன்று = கர்மோபாசனைகள்யாவும்(அவ்வேதத்தின் சித்தாந்தமான அர்த்தம்)அல்ல; [அதையே சிறப்பித்துக்கூறல்] ஒரு வேறுமிலாப்போதப் பொருள் =(இதுவே சுவகதாதி பேதங்களுள்ளே)ஒரு பேதமுமில்லாத போதப் பொருளும், அந்த மறைக்கு அணியாம் புனிதப்பொருள் = அவ்வேதத்திற்கு ஆபரணமாகிய பரிசுத்த வஸ்துவும், தத்வமசிப்பொருள் (ஆம்) = தத்துவமசி வாக்கியத்தின் அர்த்தமுமாம். (எ-று.)

இதுவென்னுஞ் சுட்டு மேற்செய்யுளின் பொருளை யுணர்த்துகிறது.வினையென்றது கர்மோபாசனைகளை. உபாசனையும் மானசக்கிரியையாதலின் வினையுளடங்கும். உயிர்களுடைய மனத்தின்கண் மலம்,விக்ஷேபம், ஆவரணமென்னும்முக்குற்றங்களுண்டு; இவற்றுள்,மலமென்பது பாவம்; இதனை யொழித்தற்கு கர்மத்தைப்போதிக்கிற மறை கர்மகாண்டமெனப்படும்.விக்ஷேபமென்பது சஞ்சலம்; இதனை யொழித்ததற்கு உபாசனையைப் போதிக்கிற மறை உபாசன காண்டமெனப்படும். ஆவரணமென்பது மறைப்பு; இதனை யொழித்தற்கு ஞானத்தைப் போதிக்கிற மறை ஞானகாண்டமெனப்படும். கர்மகாண்டமும் உபாசன காண்டமும் சாதனமென்றும், ஞானகாண்டம் சாத்திய மென்றுங் கூறப்படுகின்றன; கர்மோபாசனைகளின் பயன் முறையேமனத்தூய்மையும் மனவொருமையுமாம்; இவை, ஞானத்திற்குச் சாதனம்; ஞானத்தின் பயன் ஆவரண நிவர்த்தியும், அகண்டசிவமாய் நிற்றலுமாம்; ஆதலின், ஞானகாண்டப் பொருள்போன்று, கர்மகாண்டப் பொரு



ளும் உபாசன காண்டப்பொருளும் முடிவுடையவையல்ல வென்பான் 'வேதப் பொருடா னிதுவே றுசொலும் வினை யா வையுமன்று' என்றார். முன்னர்க்கூறிய பொருள் மூவகைப்பேதம் அல்லது ஐவகைப் பேதமற்றதென்பான் 'ஒருவே றுமிலாப் போதப்பொருள்' என்றார், மூவகைப் பேதமாவன:—ஒரினப்பேதம், வேற்றினப்பேதம், உறுப்புக்களின் பேதம்; இவற்றிற்கு முறையே மாவிற்கும் பலாவிற்குமுள்ளபேதமும், மரத்திற்குங் கல்லிற்குமுள்ள பேதமும், மரத்தின் இலை, காய், கிளை முதலியவற்றின் பேதமும் உதாரணங்களாம். ஐவகைப் பேதங்கள் முன்னர்க் கூறப்பட்டன. ஆங்குணர்க. இஃது அறியாமை முதலிய குற்றங்களற்றதென்பான் 'புனிதப்பொருள்' என்றும், இதுவே சாமவேதத்தின் சாந்தோக்கிய உபநிடதத்தினது ஆறுவது அத்தியாயத்திற் சுவேதகேது வென்னும் மைந்தனுக்கு உத்தாலகமுனிவரால் உபதேசிக்கப்பட்ட பொருளென்பான் 'தத்வமசிப் பொருளே' என்றும் கூறினர். 'அந்தமறைக்கு' என்பதை மறை அந்தக்கு எனமாற்றி 'வேதமுடிபாகிய' உபநிடதங்கட்குளனப் பொருள் உரைப்பினும் அமையும். இங்கு அத்துச்சாரியை குறைந்து நின்றது.

இருக்வேதம்,"பிரஞ்ஞானம் ஆனந்தம்பிரஹ்மம்"என்றும், எசுர்வேதம், "அகம்பிரஹ்மாஸ்மி" என்றும், சாம வேதம், "தத்துவமஸி" என்றும், அதர்வணவேதம் "அயமாத்மா பிரஹ்மம்" என்றும் தத்தம் முடிவில்(ஞானகாண்டத்தில்)கூறுதல் காண்க. இவற்றுள் "தத்துவமசி"யொன்றே உபதேசவாக்கியம்;ஏனையவை,அநுபூதிவாக்கியங்கள். இங்குரிபுகீதை"பிரஞ்ஞானம்ஆனந்தம்பிரஹ்மம் என்பது அப்பியாச வாக்கியமென்றும், அயமாத்மா பிரஹ்மம் என்

பது சம்மதி வாக்கியமென்றும், அகம்பிரஹ்மாஸ்மி என்பது அனுபூதி வாக்கியமென்றும், தத்துவமசி என்பது உபதேச வாக்கியம்" என்றுங் கூறுதலையுங் காண்க. தத்துவமசி = அது நீயாயிருக்கிறாய்; அயமாத்மா பிரஹ்மம் = இந்த ஆத்மா பிரஹ்மம்; பிரஞ்ஞானம் ஆனந்தம் பிரஹ்மம் = அறிவு வடிவாயுள்ள ஆத்மா இன்பவடிவாயுள்ள பிரமம்.

"உரைசெயிற் பரம ஞான மொன்றுமே முத்திக் கேது
சரிதைநற் கிரியை யோகந் தாமொரு மூன்று ஞான
மருவுதற் கேது வென்று மறைபுகன் றுரைக்கு மிந்தக்
கருவியைப் பொருளென் றெண்ணிக் களிப்பவர்
[சுயவ ரன்றே."

"அறிவென்னு முதல்வேத மகமென்னு மிரண்டாமோத்
தறிவதுநீ யானுயென் றறையுமூன் றும்வேதம்
செறியிந்த வான்மாவே சிவமென்னு மதர்வணஞ்
செறியுநால் வாக்கியத்தின் சித்தாந்த மறிந்தேனே,"

என்ற செய்யுட்கள் இங்குணரத்தக்கவை. 'தான்' என்பது கட்டுரைக்கண் வந்தது.

முற்கூறிய தத்துவமசி மகாவாக்கியத்தின் கண்ணுற்ற
முப்பதக்களின் அர்த்தங்களை ஆசிரியர் கூறல்.

வேறு.

(61) நிமல மாம்பர மதுவெ னும்பொரு
ணீயெ னும்பொருள் சீவனே
யமல மான விரண்ட யிக்கிய
மசிப தப்பொரு ளாவதே.

இ-ள்.—அதுவெனும் பொருள் = (அம்மகாவாக்கியத்தின்கண்ணுள்ள) தத் என்னுஞ் சொல்லின்பொருள், நிமலமாம்பரம் = நிர்மலமாக விளங்குகின்ற (முற்றறிவு முதலிய வுயர்குணங்களுடைய) பிரஹ்மமாம் (ஈசனும்); நீஎனும் பொருள் = (அவ்வாக்கியத்தின்கண்ணுள்ள) துவமென்னுஞ்சொல்லின்பொருள், சீவனே = (மலசகிதமாக விளங்குகின்ற சிற்றறிவு முதலிய இழிகுணங்களையுடைய) சீவான்மாவேயாம்; அசிபதப்பொருள் ஆவது = (அவ்வாக்கியத்தின்கண்ணுள்ள) அசிஎன்னுஞ் சொல்லின்பொருளாவது, அமலமான இரண்டு ஐக்கியம் = நிர்மலமாகிய இவ்விரு பொருள்களின் ஏகத்துவமாம் (என்றார்); (எ-று.)

இரஜோ தமோ குணங்களற்ற விசுத்த சத்துவப் பிரதானவுபாதியுடையவரென்பான் 'நிமலமாம் பரம்' என்றார். சீவேஸ்வரர்களதுயதார்த்த சொரூபத்தையுணர்த்துதற்கு 'அமலமான இரண்டு' என்றார். அல்லது 'அமலமான' என்னும் விசேடணம் ஐக்கியமென்பதோடு இயையுமென்றாலும் அமையும். 'அசிபதப்பொருளாவது' என்புழி 'ஆவது' முதல்வேற்றுமையின் சொல்லுருபு. ஏகாரமிரண்டனுள், பின்னது அசைநிலை. முன்னது தேற்றப்பொருளது; இதனைத் தத்பதப்பொருளிலும் அசிபதப் பொருளிலுங் கூட்டுக. 'என்றார்' என்பது சொல்லெச்சம். (௬௧)

பரஸ்பர விருத்த தர்மங்களோடு கூடிய சீவேசுவரர்கட்கு
ஏகத்வம் கூடுமாறெங்ஙனம் எனச்சீடன் வினுதல்.

(62) அருமை யாகிய பிரம முன்னிலை
யாகு மாருயிர் பின்னிலை
இருமை யான விரண்ட யிக்கிய
மெய்து மாறெவ னென்னவே.

இ-ள்.—அருமையாகிய = (அறிதற்கு) அருமையாகிய, பிரமம் = பிரஹ்மம், முன்னிலை ஆகும் = பரோக்ஷமாம்; ஆர்

உயிர் =(தேகமுதலியவற்றில் தாதான்மியமாய்ப்) பொருந் திய ஜீவன், பின்னிலை(ஆகும்)=அபரோக்ஷமாம்; இருமை யான =(இவ்வாறு) முரண்பட்ட தன்மையுடைய, இரண்டு அயிக்கியம் = (பிரஹ்மம் சீவனென்னும்) இரண்டற்கும் ஏகத்துவம், எய்துமாறு=பொருந்தும் விதம், எவன் என்ன=எங்ஙனம்? என்று கேட்க; (எ-று.) - 'கருணைநிதி கூறவே' என, 84-வது கவியோடு தொடரும்.

முன்+இலை=எதிரில் இல்லாதது; இது பரோக்ஷ மென்னும் பொருள் தரும் தமிழ்ச் சொல். பின்+இலை= எதிரில் உள்ளது. இது அபரோக்ஷமென்னும் பொருள் தரும் தமிழ்ச்சொல். முன்னிலையென்னுஞ் சொல் சர்வ சக்தித்துவம் (முடிவிலாற்றலுடைமை), சர்வஞ்ஞத்துவம் (முற்றுமுணர்தல்), விபுத்துவம்(எங்கும் நிறைந்திருத்தல்), ஈசத்துவம்(எவற்றையும் நடத்துதல்),சுதந்திரத்துவம்(தன் வயத்தனாதல்),மாயித்துவம்(மாயையைத் தன்வயமாயுடை யதாதல்), பந்தமோக்ஷ அபாவத்துவம் (கட்டுப்படுதலும் விடுபடுதலும் இலதாதல்)என்பவற்றிற்கு உபலக்கணமென வும்; பின்னிலையென்னுஞ் சொல் முற்கூறியவற்றிற்கு எதிர் மறையாகிய அற்பசக்தித்துவம்(அற்ப ஆற்றலுடைமை), அற்பஞ்ஞத்துவம்(அற்பவுணர்வுடைமை), பரிச்சின்னத்து வம்(வரம்புபட்டதாதல்), அநீசத்துவம்(எவற்றையு நடத்த முடியாமை), கர்மாதீனத்துவம் (கர்மத்தின் வயமாதல்), அவித்தியாமோகத்துவம்(அவிச்சையாலாய மயக்கமுடை மை),பந்தமோக்ஷத்துவம்(கட்டுப்படுதலும் விடுபடுதலும்) என்பவற்றிற்கு உபலக்கணமெனவும் கொள்க. ஈண்டு 'இருமை'யென்னுஞ்சொல் இரண்டினது தன்மையென்னும் பொருளுணர்த்தாது முரண்பட்ட தன்மையை யுணர்த் திற்று. குளிர்ந்த பரிசமுடைய பனிக்கட்டிக்கும், வெம்



மைப் பரிசமுடைய அக்கினிக்கும் ஐக்கியம் (ஏகத்துவம்) அமையாததுபோன்று முரண்பட்ட இயல்புடைய இவர்கட் கும் ஐக்கியம் அமையாதென்பான் 'இருமையான விரண்ட யிக்கிய மெய்து மாறெவன்' என்றான் சசிவர்ணன்.

'தத்துவமசி' என்னும் மாவாக்கியம் பாகத்தியாக (விட்டுவிடாத) இலக்கணையால், 'அது நீயாயிருக்கிறாய்' என்றுணர்த்துவதை யுணராது இவ்வாறு வினவினான் என்க. 'ஆருயிர்' என்பதை, அருமை+உயிர் எனப்பிரித் துப் பொருள்கூறினும் அமையும். 'இரண்டயிக்கியம்' என் பது நான்கனுருபுத்தொகை.'எவன்' என்பது வினப்பொரு ளைத் தருகின்ற குறிப்பு வினைமுற்று: இது இங்கு ஆண்பால் முற்றன்று; அஃறிணைப்பொதுக்குறிப்பு வினைமுற்று. (௬௨)

'சீவேஸ்வரர்களுக்குண்டாம்பேதம் ஔபாதிகம் (உபாதியா லாகியது); உண்மையன்று' என்று ஆசிரியர் கூறல்.

(63) உபாதி யால்வரு பேத மேயிவர்
பேத மன்றுரு வுயிரினின்
கபாதி யாமுடல் போலி றைக்குள
கார ணாதிகள் காயமே.

இ-ள்.—இவர் பேதம் = (பிரஹ்மம் எனப்படும் ஈசன், சீவன் என்னும்) இவர்களது பேதம், உபாதியால் வரு பேதமே = உபாதியாலாய பேதமேயாகும்; உருஅன்று = (அன்றிச்) சொரூபத்தாலாயதன்று. [சீவேஸ்வரர்களது பேதம் உபாதியாலாயது என்றமையால் ஈஸ்வரனுக்கும் உபாதிகளுண்டு எனப் பெறப்படுகின்றது; ஆனால், அவர்க் கும் உபாதிகளுளவோ என்னுஞ் சீடன் சங்கைக்கு ஆசிரி யர் ஜீவோபாதியை ஸ்மரிப்பித்தலோடு ஈஸ்வர வுபாதி யைத் கூறல்.] உயிரினின் கபாதியாம் உடல்போல்=ஜீவ

னுக்குக் கப முதலிய குற்றங்களுடைய உடன் முதலிய உபாதிகளிருப்பனபோல், இறைக்குக் காரணாதிகள் காயம் உள = ஈஸ்வரனுக்குச் (சர்வ) காரணத்வ முதலிய சப்தோ பாதிகளுண்டு; (எ-று.)

'உபாதி யால்வரு பேத மேயிவர் பேதம்' எனக் கூறியதால், இப்பொருள் துணியப்பெற்றது:—தன்றன்மையை வேறோர் பொருளின்கண் ணுளதாமாறு தோற்றுவிப்பது உபாதி; செம்பூவானது, தன்றன்மையாகிய செந்நிறத்தை யண்மையிலுள்ள பளிங்குமணியிலுளதாமாறு தோற்றுவித்தலின் உபாதியாதல்போலச், சிவனது உடன் முதலியவையும், ஈஸ்வரனது காரணத்தன்மை முதலியவையும் தந்தன்மையாகிய பேதத்தைச் சிவேஸ்வரர்களிடத்துத் தோற்றுவித்தலின் உபாதியாம். செம்பூவாகிய உபாதியாலாக்கப் பெற்ற பளிங்குமணியின்கண் ணிருக்குஞ் செந்நிறமானது மித்தையாதல் போன்று, உபாதிகளாலாக்கப் பெற்ற சிவேஸ்வரர்களது பேதமும் மித்தையே யாம்.

'அன்றரு' எனக் கூறியதால் இப்பொருள் துணியப் பெற்றது:—ஒருகால் இச்சிவ ஈஸ்வரர்களிடத்துளதாய பேதம் உபாதியானுயதன்றி இயல்பாயுளதாயின், தழல்வடிவ தன்மியின் நீக்கமின்றி அதன்வெம்மை முதலிய இயற்கைத் தன்மங்களின் நீக்கங்கூடாததுபோலச் சிவ ஈஸ்வரர்களின் நீக்கமின்றி இவர்களுடைய பேதவடிவ தன்மத்தின் நீக்கம் ஒருகாலும் உளதாகாதென்பது ஒருதலையாம். எனவே இவ்வனுமானம் பெறப்பட்டது:-சிவேஸ்வரர்களதுபேதம் மித்தை; உபாதியானுயதா யிருத்தலின்; எவ்வெப்பேதம் உபாதியானுயதோ அவ்வப்பேதம் மித்தையாம்; குடாகாய மகா காயங்களின் பேதம்போலும்; எவ்வெப்பேதம் மித்தையன்றோ அவ்வப்பேதம் உபாதியானுயதன்று, குடத்



திற்கும் ஆடைக்கும் இருக்கும் உருவத்தானுய பேதம் போலும்; சிவ ஈஸ்வரர்களது பேதம் இவ்வாறன்று; ஆதலின், மித்தையன்றென்பதில்லை; ஆனால், மித்தையேயாம்.

சிவவுபாதி காரியமெனவும், ஈஸ்வரவுபாதி காரணமெனவுமுணர்த்த முறையே 'கபாதியா முடல்' என்றும், 'கார ணாதிகள் காயமே' யென்றும் கூறினர். இவ்வாறு பின்னும் 'செறிந்த காரண காரி யங்கள்' என்றும், 'பிரியா வுயிர்கா ரியமா முடலும் பிரமத் துறுகா ரணமா முடலும்' என்றும் கூறுவது காண்க.

சிலர் அந்தக்கரணத்தைக் காரியோ பாதியெனவும் அஞ்ஞானத்தைக் காரணோபாதியெனவும் கூறுவர். சிலர் வியட்டியுடலைக் காரியோபாதியெனவும் சமட்டியுடலைக் காரணோபாதி எனவுங் கூறுவர். இந்நூலாசிரியர் உடன் முதலியவற்றைக் காரிய உபாதி எனவும், காரணத்வ முதலியவற்றைக் காரணவுபாதியெனவுங் கூறுகிற்பர். இங்குக், "காரிய உபாதியையுடையோன் சிவன்; காரணவுபாதியையுடையோன் ஈசன்" என்னும் மறையும்,

"சீரிய வீசனுர்க்குஞ் சீவர்க்கு முபாதி யொன்றேல்
ஆரிய குருவே பேத மறிவதெப் படியென் றக்கால்
காரிய வுபாதி சீவன் காரண வுபாதி யீசன்
வீரிய மிகுச மட்டி வியட்டியாற் பேத மாமே."

என்னும் கைவல்யமும் உணரத்தக்கவை. 'காரணாதிகள்' என்னுஞ் சொல்லிலுள்ள ஆதியென்பதால், கொள்ளத்தக்கனவற்றை 64-வது செய்யுளிற் காண்க. 'காயம்' என்னுஞ்சொல் உபாதியென்னும் பொருளது. உடல், இந்திரிய முதலியவற்றிற்கு உபலக்கணம். 'கபாதி' என்பதிலுள்ள ஆதியென்னுஞ் சொல்லால் வாதம், பித்தம் என்ப

வற்றைக் கொள்க. இவை உடலின் இழிவை விளக்கவந்த
அடைகள். "ஈனமெல்லா முடையவுடம்பு" என்றார் பிற
ரும். ஏகாரமிரண்டனுள் முன்னது பிரிநிலை; பின்னது
அசைநிலை. 'உரு அன்று' எனமாற்றிப் பொருளுரைக்கப்
பட்டது; மூன்றும் வேற்றுமைத்தொகை. (௬௩)

தொகுத்துக் கூறிய ஈஸ்வர சப்தோபாதிகளை
ஆசிரியர் வகுத்துக் கூறல்.

(64) ஈசன் முற்றறி வான்வி யாபி
யெவைக்கு மேது வியம்புமா
காச கன்னிரு பாதி பாவனை
கார ணாதிக ளாவதே.

இ-ள்.—ஈசன் = சர்வேஸ்வரத்வம், முற்றறிவான் =
சர்வஞ்ஞத்வம், வியாபி = சர்வவியாபகத்வம், எவைக்கும்
ஏது = சர்வகாரணத்வம், ஆகாசகன் = சர்வ சிருஷ்டித்வம்,
பாவனை = சர்வஸ்தித்வம், நிருபாதி = சர்வசம்மாரத்துவம்
(ஆகிய இவை), காரணாதிகள் ஆவது = சர்வ காரணத்வ
முதலிய சப்தோபாதிகளாவனவாம்; (எ-று.)

ஆதித்தன் முதலிய அனைத்துலகிற்கும் நியந்தாவா
யிருப்பவன் ஈசனென்றும், ஒரு ஆடவன், மனைவி மைந்தர்
முதலிய குடும்பத்தைத் தன் ஆணைக்குள் நடத்துவிப்பது
போல எல்லா வுலகையுந்தன் ஆணைப்படி நடத்துபவன்
ஈசனென்றும், தனது சத்தை(இருப்பு)யால் காரணமாய
மாயையுங் காரியமாய விவ்வுலகும் நியமமாய்ப் பிரவிருத்
திக்கும்படி செய்பவன் ஈசனென்றும் பிறநூல்கள் கூறு
வது இங்குக் காண்க.

முற்றறிவான் - காரணமாய மாயையையுங் காரிய
மாய வுலகையும் இயல்பா யுணர்பவன். வியாபி - தேச



பரிச்சேதமற்றவன். பரிச்சேதம் = முடிபு. முற்றுமின்மை
யின் பிரதியோகித் தன்மையைத் தேசபரிச் சேதமென்
பர். இதன்றன்மையை இரண்டாவது செய்யுளுரையிற்
காண்க.

'எவைக்குமேது' என்பதனால், உபாதானகாரணத்வ
மும் ஆகாசகன், நிருபாதி, பாவனை என்பவைகளால்,
நிமித்தகாரணத்வமும் கொள்ளத்தக்கவை. உபாதானம்-
எதன்கண் ஒற்றித்துக் காரியம் பிறக்குமோ அது. நிமித்
தம் - இதனினும் வேறான காரணம். மண்குடத்திற்கு
உபாதானமும், தண்டுமுதலியன நிமித்தமுமாதல்காண்க.
இங்கு இறைவனொருவனே உலகத்திற்குச் சிலந்தியைப்
போன்று உபாதானமும்,நிமித்தமும் ஆவன். காலம், சுபா
வம், நியதி(அறம்மறம்), யதிரிச்சை, பூதம், பிரகிருதி, புரு
ஷன் முதலியவையல்ல. இவற்றின் கண்டனம் ஆன்ம
புராண முதலிய நூல்களிற் காண்க. யதிருச்சை - காரிய
ஆக்கத்தில் கருத்தா முதலியவற்றின் அபேக்ஷை யுண்டா
காமை.

'ஈசன்' 'முற்றறிவான்', 'வியாபி', 'ஆகாசகன்' இக்
குணிகள் ஈசத்வம் முதலிய குணங்களை லட்சணையா
லுணர்த்துகின்றன. 'நிருபாதி,' 'பாவனை' என்பவற்றிற்கு
இனமாக இணைக்கப்பட்டிருத்தலி னிவ்வாறு பொருள்
கொள்ளப்பட்டது. 'ஆகாசகன்' ஆகாசத்தை யாக்குப
வன். ஆன்மாவினின்றும் ஆகாய முதலிய ஐம்பூதங்களும்
முறையே உண்டாயின என்று கூறும் தைத்திரீய உபநிட
தங்கொண்டு இவர் இங்ஙனங் கூறினர். இங்கு 'ஆகாசகன்'
என்பதிலுள்ள 'ஆகாசம்' என்னுஞ்சொல் வாயு முதலிய
வற்றிற்கு உபலக்கணம். எனவே 'ஆகாசகன்' என்னுஞ்
சொல்லால் சிருட்டித்வம் பெறப்பட்டமை காண்க.

பாவனே = இரக்ஷித்தல். எனவே 'பாவனே' என்னுஞ் சொல்லால் ஸ்திதித்துவம் பெறப்பட்டமை காண்க. நிருபாதி - காரியப் பிரபஞ்சரூப உபாதிகள் நீங்கிய தன்மை; உபாதிகள் நீங்கிய காலம்(ஒடுங்கிய காலம்) சர்வ சங்கார காலமாயிருத்தலின், நிருபாதி என்னுஞ் சொல்லால் சம்மாரத்துவம் பெறப்பட்டமை காண்க. (௬௪)

மகாவாக்கியத்தாற் கூறப்படும் சீவேஸ்வரர்களின் ஏகத்துவத்தின் விரோதிகளாகிய உபாதிகளை நீக்குதற்பொருட்டுத் தத்துவமென்னுமிரண்டு சொற்கட்கும் ஆசிரியர் சுத்தம், அசுத்தமென்னும் இருவகைப் பொருள்களையுங் கூறல்.

(65) நீதி யாலிரு பாதி நீக்கிட
நீயெ னச்சொல் பதத்தினு
மாதி யாகிய தற்ப தத்து
மசுத்த சுத்த முரைத்துமே.

இ-ள்.—நீதியால் = நூன்முறைமையாக,இர் உபாதி = அவ்விருவகை உபாதிகளையும், நீக்கிட = நீக்கும்பொருட்டு, நீ எனச் சொல் பதத்தினும் = துவமென்னும் பதத்திற்கும், ஆதியாகிய தற்பதத்தும் =(அவ்வாக்கியத்தில்) முதலாவதாகிய தத்தென்னும் பதத்திற்கும், அசுத்தம் சுத்தம் உரைத்தும் = அசுத்தம் சுத்தமென்னு மிருவகையர்த்தங்களையும் கூறுவோம்; (எ-று.)

இங்கு, உபாதி என்றது, சீவவுபாதியையும், ஈஸ்வரவுபாதியையும் சுத்தம் = தூய்மை,அசுத்தம் = தூய்மையில்லாமை; இவையிரண்டும் குணவாகுபெயராய்க் குணியையுணர்த்தின. 'நீக்கிட' என்னும் வினையெச்சம் உரைத்தும் என்னுந்தன்மை வினைகொண்டு முடிந்தது. 'இரண்டு' என்னும் எண்ணுப்பெயர் 'உபாதி' என்னும் உயிர்முதன்மொழியோடு புணரும்போது 'ஏற்புழி' என்றதால், 'இர்' என நின்று புணர்ந்து 'இருபாதி' என, ஆயிற்று. (௬௫)



துவமென்னுஞ் சொல்லிற்குச் சுத்தம், அசுத்தமென்னு மிருவகையர்த்தங்களை ஆசிரியர் கூறல்.

(66) ஆக முன்றிக ழேழு நானென
றொம்ப தத்தி லசுத்தமே
சோக மின்றிய சான்று நானென
றொம்ப தப்பொருள் சுத்தமே

இ-ள்.—நான் எனல் = நானெனற்கு விடயமாகிய, ஆகமுன் திகழ் ஏழும் = உடன்முதல் சித்தமீறாய் விளங்கும் ஏழுபாதிகளும்,(அவற்றினதிஷ்டான சேதனமும்சேர்ந்து) தொம்பதத்தில் அசுத்தம் = துவம்பதத்திலுள்ள அசுத்தார்த்தமாம்; நான் எனல் = நானெனற்கு விடயமாகிய, சோகம்இன்றிய = துன்பமில்லாத,சான்று = சாக்ஷி,தொம்பதப் பொருள் சுத்தம் = துவமென்னும் பதத்திலுள்ள சுத்தார்த்தமாம்; (எ-று.)

நானென விருத்தி யுண்டாங்காலத்து உடன் முதலிய ஏழுபாதிகளும், இவற்றிற்குச் சத்தாஸ்பூர்த்தியை(இருப்புவிளக்கத்தை)க் கொடுக்கும் சாக்ஷியும் ஒரே காலத்து விளங்குகின்றன; ஆனால், உடன் முதலியன அசித்துப் பொருளாதலின்சாக்ஷியால்விளங்குகின்றன;சாக்ஷிசித்துப் பொருளாதலின் சுயம்பிரகாசம் (தானே தானாய் விளங்குகின்றது). உடல்முதலிய வுபாதிகளைக் கழித்து நானென விருத்தியுண்டாங் காலத்துச்சான்று மாத்திரம் விளங்கும். எனவே,உபாதியோடுகூடிய சேதனம் தொம்பதத்திலுள்ள அசுத்தார்த்தமென்பதும், கேவலம் சான்று மாத்திரம்

தொம்பதத்திலுள்ள சுத்தார்த்த மென்பதும் பெற்றும். உடன் முதலியவை திருசியம், சாக்ஷியம், காரியம், அத்தியஸ்தமெனவும்சேதனமென்பது திருக்கு,சாக்ஷி,காரணம், அதிஷ்டானமெனவும் கொள்க. சான்று - நடுநிலையுடையதாய் எல்லாவற்றையு முணர்ந்துகொண்டிருப்பது. பிறவித் துன்பங்கள் உபாதியென்று கூறப்பட்ட மனமுதலியவற்றிற்கேயன்றி உபாதியுடைய சான்றிற்கு இல்லாமையின் சோகமின்றிய சான்று எனப்பட்டது. உபாதியின் இலக்கணம் முன்னர்க்கூறப்பட்டது. உடன்முதலிய வுபாதியை மாத்திரம் அசுத்தார்த்தமெனக் கொள்ளின் பாகத்தியாக இலக்கணை வியர்த்தமாதலும், 77-வது செய்யுளோடு முரணுதலுமுண்டாம். (௬௬)

தத்தென்னுஞ் சொல்லிற்குச் சுத்தம் அசுத்தமென்னும் இருவகைப் பொருள்களையுங் கூறல்.

(67) அகில காரண மாதி நானென
றப்ப தத்தில சுத்தமே
சகல காரண சான்று நானென
றப்ப தப்பொருள் சுத்தமே.

இ-ள்.—நான் எனல் = நானெனற்கு விடயமாகிய, அகிலகாரணம் ஆதி = சர்வ காரணத்வமுதலான எழுபாதிகளும் (அவற்றின் அதிஷ்டான சேதனமும் சேர்ந்து), தத்பதத்தில் அசுத்தம் = தத்பதத்திலுள்ள அசுத்தார்த்தமாம்; நானெனல் = நானெனற்கு விடயமாகிய, சகல காரண சான்று = சகல காரணத்வ முதலியவற்றுச் சாக்ஷியாகிய பிரஹ்மம், தற்பதம் சுத்தம் பொருள் = தற்பதத்திலுள்ள சுத்தார்த்தமாம்; (எ-று)

இறைவனுக்கு நானென்னும் விருத்தி யுண்டாங் காலத்து விளங்கும் தத்பதத்திலுள்ள அசுத்தார்த்தம் சுத்தார்த்தம் ஆகிய இவையெல்லாம் முன்னர் உரைத்தாங்குணர்க.



ஜீவன் தனதுண்மை வடிவத்தை யறியவொட்டாது உடன்முதலிய உபாதிகள் மறைத்தலைச் செய்கின்றன; ஆதலின், இவன் தன துண்மைவடிவத்தை உடன்முதலிய உபாதிகளினின்றும் வேறு பிரித்தறிதல் வேண்டும். அவ்வாறு இறைவன் தனது வடிவத்தைச் சர்வேஸ்வரத்வ முதலிய வுபாதிகளினின்றும் வேறு பிரித்தறிய வேண்டுவதில்லை; ஆவரணமின்மையின். பக்ஷிக்குப் பறத்தலும் மீன் குட்டிக்கு நீந்தலும் இயல்பாதல்போல இறைவனுக்கு, நான் பிரஹ்மமென்னுஞ் ஞானமியல்பாம் என்க. சீவன் சர்வேஸ்வரத்வ முதலிய உபாதிகளினின்றும் தத்பதலட்சியார்த்தத்தை வேறு பிரித்தறியவேண்டி தத்பதத்திலும் அசுத்தம் சுத்தம் ஆகிய இரண்டையுங் கூறினர். வாச்சியார்த்தம், இலட்சியார்த்தம் என்பவற்றின் விளக்கத்தை 69, 70-வது செய்யுட்களிலும் அவற்றினுரையிலுங் காண்க.

கூறிவந்த தத்துவமென்னுஞ் சொற்களின் சுத்தம் அசுத்தம் ஆகிய இருவகைப் பொருள்களுள்ளே சுத்தப்பொருள்களாய கூடத்தப் பிரஹ்மங்களின் ஏகத்துவமே அசிபதப் பொருளாமென ஆசிரியர் கூறல்.

(68) செறிந்த காரண காரி யங்கள்
சிதைந்து மேலுறு சித்ததா
யறிந்த வாதனை தானு மற்றதவ்
வசிப தப்பொரு ளாவதே.

இ-ள்.—செறிந்த = நெருங்கியுள்ள, காரண காரியங்கள் = காரணம்காரியம்என்னும் இருவகைப்பட்ட சப்தோபாதிகளும், சிதைந்து = (விசாரத்தால்) நீங்க, மேலுறு = (அவ்வுபாதிகளுக்கு) அதீதமாகப்பொருந்திய, சித்ததாய் =

சைதன்னிய வடிவ கூடஸ்தப் பிரஹ்மங்களாய், அறிந்த = (சிவேஸ்வரர்களை) யறிந்ததனாலாகிய, வாதனை தானும் = அந்தப்பேத வாசனையும், அற்றது = நசித்தது, அவ்வசி பதப்பொருள் ஆவது = அவ்வசியென்னும் பதத்தினர்த்த மாவதாம்; (எ-று.)

சிதைதல் = பாதிக்க(பொய்யென்று துணிய)ப்படுதல். ஒரு ஆகாயத்திற் குடம், மடம் என்னுமுபாதிகளின் திருஷ்டியால் முறையே குடாகாயமென்னும் பெயரும், நீர் கொணர்தலாகிய காரியமும் மடாகாயமென்னும் பெயரும், இடங்கொடுத்தலாகிய காரியமும் தோன்றுகின்றன; உபாதிகளின் திருஷ்டியை விட்டவுடனே இவைகள் நீங்க ஒரு ஆகாயமே தோன்றுகின்றது அதுபோல ஒரு பிரஹ்மத்தின்கண் காரிய காரணவுபாதிகளின் திருஷ்டியால் முறையே சீவசாக்ஷி யென்னும் பெயரும், காரியத்தை (மனமுதலியவற்றை) விளக்குதலாகிய காரியமும் ஈசுவர சாக்ஷி என்னும் பெயரும் காரணத்தை (சர்வேஸ்வரத்துவ முதலியவற்றை) விளக்குதலாகிய காரியமும் தோன்றுகின்றன. இவ்வுபாதிகளின் திருஷ்டியை விட்டவுடனே இவைகணீங்குவதால் ஒரு பிரஹ்மமே தோன்றுகின்றது. தோன்றியவுடனே சிவேஸ்வரர்களைக்கூடஸ்தப்பிரஹ்மங்களாய் அறிந்த பேதவறிவும் அதனாலாகிய பேதசம்ஸ்காரமும் நீங்கும்; அவ்வாறு நீங்குவதே அசிபதப் பொருளென்க. 'திவிதத் தவத்தைகளை யறிவுற்ற' என்னும் 82-வது செய்யுளைக்கொண்டு 'சித்ததா யறிந்தவாதனை' என்பதற்கு இவ்வாறு வருவித்துப் பொருள்கூறப்பட்டது. இங்கு 78-வது செய்யுள் ஆராயத்தக்கது. தம் அனுபூதி வலியால், ஆசிரியர் அசிபதப்பொருளை இவ்வாறு விளக்கினர் என்க. 'சிதைந்து' என்பது செயவெனெச்சத்திரிபு.



பிறநூல்களில் ஆசிரியர்கள் தத்துவமென்னுஞ் சொற்களுக்கு
முக்கியமெனவும், லக்ஷியமெனவும் இருவகைப்பொருள்
கூறியிருக்க இங்குத் தாங்கள் அவற்றிற்குச்
சுத்தம், அசுத்தம் என்னும் இருவகைப்
பொருள்கூறுவது முரணுறாதோ
என்னுஞ் சங்கைக்கு
ஆசிரியர் அருளல்.

(69) அசுத்த மாகிய திருப தத்தினு
முக்கி யப்பொரு ளாகுமே
விசுத்த மானதி லக்கி யப்பொரு
ளென்று சொல்லுவர் விமலரே.

இ-ள். இருபதத்தினும் = (துவம் தத் என்னும்)இரண்டு பதத்தினுக்கும், அசுத்தமாகியது = (நம்மாற் கூறப்பட்ட) அசுத்தார்த்தமாகிய விதுவே, முக்கியப் பொருளாகும் = (ஏனைய நூல்களிற் பெரியோர்களால்) முக்கியார்த்தம் (என்று உரைக்கப்படுவது)ஆகும்; விசுத்தமானது = (அவ்விரு பதத்தினுக்கும் நம்மாற் கூறப்பட்ட) சுத்தார்த்தமாகிய விதனையே, இலக்கியப்பொருள் என்று = இலக்கியார்த்தமென்று, விமலர் சொல்லுவர் = குற்றமற்ற பெரியோர்கள் கூறுவார்கள்; (எ-று.)

காரியோபாதியோடு கூடிய சைதன்னியம், 'துவம் பதவாச்சியம்' எனவும், உபாதியற்ற சுத்த சைதன்னியம் 'துவம்பத லக்ஷியம்' எனவும், காரணோபாதியோடு கூடிய சைதன்னியம் 'தத்பதவாச்சியம்' எனவும், உபாதியற்ற சுத்த சைதன்னியம் 'தத்பதலக்ஷியம்' எனவும் பொருள் கொள்க.

'முக்கியப் பொருள்' என்றும், 'இலக்கியப் பொருள்' என்றும் உரைத்தமையால் இது பெறப்பட்டது:— சொற்கும்பொருட்கும் உளதாம் நினைப்பூட்டுவது நினைக்

கப்படுவது என்னுந் தன்மையாய இயைபுவிருத்தியெனப் படும். எங்ஙனம் கேட்கப்பட்ட குடமென்னுஞ் சொல் குடமாகிய பொருளின் நினைவை யுண்டுபண்ணலின், நினைப் பூட்டுவதும் நினைக்கப்படலின் குடமாகிய பொருள் நினைக் கப்படுவதும் ஆய இயல்பு விருத்தியென்க. இது சக்தி யெனவும், இலக்கணையெனவும் இருவகைப்படும். நெருப் பின்கண் கொளுத்து மாற்றலும், நீரின்கண் நனைக்கு மாற் றலும் இருத்தல்போலச் சொல்லின்கண் கேட்பவனுக்குப் பொருளின் உணர்வை யுண்டுபண்ணு மாற்றலுண்டு; இத னைச் சக்தி விருத்தியென்றும், முக்கிய விருத்தியென்றும், அபிதா விருத்தியென்றும் இவற்றுள் முறையே சக்தி விருத்தியா லறியப்படுவதை சக்கியார்த்தமென்றும், முக் கியவிருத்தியா லறியப்படுவதை முக்கியார்த்தமென்றும், அபிதாவிருத்தியா லறியப்படுவதை அபிதேயார்த்தமென் றும் ஆன்றோர் அறைவர். இவ்வாறுணரப்படும் பொரு ளைத் தமிழ்மக்கள் இயற்பெயர்ப் பொருளென்பர். இவ்வா றாய சக்கியத்தின் சம்பந்தம் இலக்கணையெனவும், இதனால் உணரப்படும் பொருள் இலக்கியார்த்த மெனவும் கூறப் படும்; இதனைத் தமிழ் மக்கள் ஆகுபெயர்ப் பொருளென் பர். நீலோற்பல புஷ்பஞ்சூடினாள் என்ற கருத்தோடு நீலஞ் சூடினாள் என்றான் ஒருவன்; இங்கு நீலமென்னுஞ் சொல்லிற்குச்சக்தி (ஆற்றல்) நீலநிறத்திலுள தாதலின், நீலமென்னுஞ் சொல்லிற்குச் சக்கியார்த்தம் நீல நிறமென வும், இதன் சம்பந்தம் (சமவாயம்) உற்பலமென்னும் புஷ் பத்திலுளது; இது இலக்கணையெனவும், இதனால், உணரப் படும்பொருள் உற்பலமென்னும் புஷ்பமாம்; இது இலக்கி யார்த்தமெனவும் அமைத்துக் காண்க.

அவ்விலக்கணை கேவலம், இலட்சிதம் என்னும் வேறு பாட்டால் இருவகைப்படும்; கேவல இலக்கணை சக்கியத்



தின் சாக்ஷாத் (நேர்) சம்பந்தம்; இதனை 'நீலஞ் சூடினாள்' என்புழிக்காண்க. இலட்சித இலக்கணை-சக்தியத்தின் (சக் கியப் பொருளின்) பரம்பரைச் சம்பந்தம்; எங்ஙனம்: வண்டு ஒலிக்கின்றது என்னும் பொருளையுணர்த்தத், துவி ரேபம் (இருரகரம்) ஒலிக்கின்றது என்றான் ஒருவன்; ஈண் டுத் துவிரேபமென்னுஞ் சொல்லிற்குச் சக்கியார்த்தம் இரு ரகரம்; இவ்விருரகரம் அமைந்து விளங்குவது பிரமரமென் னுஞ்சொல்; ஆதலின், இரு ரகரத்திற்குப் பிரமரமென்னுஞ் சொல்லோடும், பிரமரமென்னுஞ் சொல்லிற்கு வண்டோ டும் சம்பந்தமுண்டு. இதனைச்சுவகடித (நிகழ்வது) பத வாச்சியத் தன்மையாகிய பரம்பரைச் சம்பந்தமென்பர்; ஈண்டுச்சுவ (தான்) என்னுஞ் சொல்லால், துவிரேப மென்னுஞ் சொல்லிற்குச் சக்கியார்த்தமாகிய இருரகரங் கோடல் வேண்டும்; இவ்விருரகரம் அமைந்து விளங்கு வது பிரமரமென்னுஞ் சொல்; இதற்கு வாச்சியத்தன்மை வண்டோடுண்டு. எனவே, துவிரேபமென்னுஞ் சொல் லின் சக்கியார்த்தமாகிய இருரகரத்திற்குப் பிரமரமென் னுஞ் சொல்வாயிலாய் வண்டாகிய இலக்கியார்த்தத்தோடு சம்பந்தமுண்டு என்னும்பொருள் இலட்சித இலக்கணை என்னு மிலக்கணத்திற்குப் பெறப்பட்டது.

கேவல இலக்கணை விட்டது, விடாதது, விட்டுவிடா தது என மூவகைப்படும்; இவற்றின் இலக்கணம் அவ் வச்செய்யுளின் உரையிற் கூறப்படும். (௬௯)

பிறநூல்களிற் கூறியபடி முக்கியம், இலக்ஷியம் என்னும் இருவகைப் பொருள்களைக் கூறல்.

(70) முரண்ட சீவப ரங்க டம்முடன்
முக்கி யப்பொரு ளாவதே
யிரண்டில் வேறறு சிற்சொரூப
மிலக்கி யப்பொரு ளாவதே.

இ-ள்.—தம்உடல் முரண்ட=தம் உபாதிகளால் முரண்பாடுடைய, சீவபரங்கள்=சீவப்பிரஹ்மங்கள், முக்கியப் பொருள் ஆவது=முக்கியார்த்தங்களாகும்; இரண்டில்=சீவப்பிரஹ்மங்களிடத்து, வேறறு=அபேதமாகிய, சிற்சொரூபம்=சின்மாத்திர சொரூபமே, இலக்கியப்பொருள் ஆவது=இலக்கியார்த்தமாம்; (எ-று.)

சத்து, சித்து, ஆனந்தம் என்னும் ஆன்ம இலக்கணம் மூன்றனுள் சித்திலக்கணங் கொண்டே ஆன்மாவை அனுபவத்தான் அகத்திலுணர்வது ஆன்றோர் மரபாதலின் 'சிற்சொரூப மிலக்கி யப்பொருள்' என்றார். ஈண்டுச் சித்திலக்கணம் சொரூப இலக்கணமென்க ; இதற்கு ஆன்மா இலக்கியம். சொரூப இலக்கணம்-இலக்கியத்தின் சொரூபமா யிருந்துகொண்டு பிறவற்றினின்றும் வேறுபிரிப்பது. 'முக்கியப்பொருள்''இலக்கியப்பொருள்' என்பனஇருபெயரொட்டுப் பண்புத்தொகை. 'இரண்டில்' என்பதனிறுதியிலுள்ள முற்றுமைதொக்கது. ஏகாரமிரண்டும் அசைநிலை. ()

'சுருதியாற்போதியா நிற்கும் சீவேஸ்வரர்களின் ஏகத்துவம்
பொருந்தும்விதம் எப்படி' என்னுஞ் சங்கைக்கு
ஆசிரியர் அருளல்.

(71) ஊக்கி யப்பர சீவர் தங்க
ளுடம்பி ரண்டுமி லக்கண
வாக்கி யப்படி நீக்கி னலொரு
வத்து வேபர வத்துவே.

இ-ள்.—ஊக்கிய=உயர்வு (தாழ்வாகப்)பொருந்திய, பரசீவர் தங்கள் உடம்பு இரண்டும்=பர (ஈச) சீவர்களது உபாதிகளிரண்டையும், இலக்கண வாக்கியப்படி=இலக்ஷண வாக்கியப்பிரகாரம், நீக்கினல் = நீக்கிடில், பர



வத்து=(எஞ்சிநின்ற சேதனரூபமாகிய) மேலானவஸ்து, ஒருவத்து=ஏகரூபமாம்; (எ-று.)

'ஒருவத்துவே பரவத்துவே' என்றமையின் இது பெறப்பட்டது:—குடத்தைக் கொண்டுவாநீ என்றற்றொடக்கத்து வாக்கியங்கள் சம்சர்க் கார்த்தத்தை(சம்பந்தமாகிய பொருளை)யும், நீலோற்பலம் என்றற் றொடக்கத்து வாக்கியங்கள் விசிட்டார்த்தத்தையு முணர்த்துவது போன்று தத்துவமசி முதலிய வாக்கியங்கள் சம்சர்க் கார்த்தத்தையும், விசிட்டார்த்தத்தையு முணர்த்தா; ஆனால், அகண்டார்த்தத்தை யுணர்த்தும்.

சம்சர்க்கார்த்தம் - பதார்த்தங்களின் சம்பந்தம் அல்லது சம்பந்தத்தோடு கூடியபதார்த்தம். குடத்தைக் கொண்டுவா நீ யென்னும் வாக்கியத்தில் குடமென்னும் சொற்பொருட்கு இரண்டனுருபின் பொருளாய செயப்படு பொருண்மை (பொருளின்றன்மை)யில் ஆதேயத் தன்மைச் சம்பந்தமுண்டு ; இங்குக் குடம் ஆதாரம் (இடம்); இதன் கண்ணுள்ள செயப்படு பொருண்மை ஆதேயம் (இடத்தில் நிகழ்வது). கொண்டுவா என்னுஞ் சொற்பொருளாகிய கொணர்தலிற் செயப்படு பொருண்மையை நிரூபிக்குந்தன்மைச் சம்பந்தமுண்டு. வாவென்னுஞ் சொற்கு வினை, ஏவல்என இரு பொருளுண்டு ; வினையிற் கொணர்தலின் அனுகூலத்தன்மைச் சம்பந்தமுண்டு ; வினைக்கு நீ யென்னுஞ் சொற்பொருளில் ஆசிரயத்தன்மைச் சம்பந்தமுண்டு; ஆசிரயம் - இடம். ஏவற்கு நீ யென்னுஞ் சொற்பொருளில் விடயத்தன்மைச் சம்பந்தமுண்டு. எனவே குடத்தின்கண் ணிருக்குஞ் செயப்படு பொருண்மையை நிரூபிக்குங் கொணர்தலான அனுகூலவினையின் ஆசிரயமாகிய பிரேரணை (ஏவல்) விஷயம் நீ என்னும் சம்சர்க்

கார்த்தத்தை யுணர்த்துகின்றது இவ்வாக்கியம் என்பது
போதரும். விசிட்டார்த்தம் - விசிட்டமாகிய அர்த்தம்.
விசிட்டம்—விசேடணத்தை யுடையது; இதனைத் தமிழர்
அடைகொளியென்பர். நீலோற்பலம் பூத்தது என்னும்
வாக்கியத்தில் நீலமென்னுஞ் சொற்பொருள் விசேடணம்
(அடை); உற்பலமென்னுஞ் சொற்பொருள் அவ்விசேட
ணத்தையுடையது; ஆதலின், விசிட்ட (அடைகொளி)
மெனப்படும். எனவே நீலத்தை விசேடண மாகவுடைய
உற்பலமென்னும் விசேடியம் பூத்தது என்னும் விசிட்
டார்த்தத்தை யுணர்த்துகின்றது இவ்வாக்கியம் என்பது
போதரும்.

அகண்டார்த்தம்—கண்டிக்கப்படாத பொருள். இப்
புருடன் அசங்கனே என்றற்றொடக்கத்துபநிடத வாக்கி
யங்களால், எச்சம்பந்தமுமில்லாது நித்தியமாயிருக்குந்
தன்மை; அல்லது சாதி, பண்புமுதலிய வேறு பொருள்கள்
சம்பந்தமில்லாமை யென்பது அகண்டார்த்தத்தன்மை
யாம். எது சம்பந்தத்தை விஷயமாக்காத யதார்த்த
ஞானத்தை யுண்டுபண்ணுந் தன்மையோ அது மகாவாக்
கியங்கட்கு அகண்டார்த்தத்தன்மை (அகண்டார்த்தத்தை
யுணர்த்துந்தன்மை) என்றார் தர்மராஜதீட்சதர். 'இலக்கணு
வாக்கியம்'--இலக்கணையாற் பொருளுணர்த்தும்வாக்கியம்.
மூன்றனுருபும் பயனும் உடன்றொக்க தொகை. அவை,
மஞ்சம் கூப்பிடுகிறது என்றல் முதலிய வாக்கியங்களாம்,
ஏகார மிரண்டனுள் முன்னது தேற்றம்; பின்னது அசை.
'ஊக்கிய' என்னும் பெயரெச்சத்திற்கு முன்மிக்கது செய்
யுள் விகாரம். 'ஊக்கி + அப்பரசிவர்' என்று பிரித்துப்
பொருள் கூறினும் அமையும்.

(எக)



இலக்கணை எத்தனை வகைப்படுமென்று சீடன் கேட்க
ஆசிரியர் கூறுதல்.

(72) ஓரில் விட்டதும் விட்டி டாதது
முபய மும்மென வுணர்வுளோர்
தேரி லக்கணை திரிவி தத்தி
லிசைப்பர் மற்றதி யம்புவாம்.

இ-ள்.—உணர்வுளோர் =(வடகலையில் நிபுணர்களான) பண்டிதர்கள், ஓரில் =(சுருதி, ஸ்மிருதி வாக்கியங்களை) ஆராயுங்கால் (அவை அருத்தமாகாமல் பரஸ்பரம் விரோதமாமேல் விரோத பரிகாரமாய் அருத்தமாகுமாறு), தேர் இலக்கணை = தெளிவான இலக்கணையை, விட்டதும் = ஜகல்லக்ஷணையும், விட்டிடாததும் = அஜகல்லக்ஷணையும், உபயமும் = ஜகதஜகல்லக்ஷணையும், என = என்று, திரிவிதத்தில் இசைப்பர் = மூவகையாகக் கூறுவார்கள், அது இயம்புவாம் = அம்மூவகை இலக்கணைகளுக்குரிய உதாரணங்களைக் கூறுவாம்; (எ-று.)

இலக்கணையைச், சிலர் கேவல இலக்கணை, இலட்சித இலக்கணை என இருவகையென்றும், அவற்றுள் கேவல இலக்கணை விட்டலக்கணைமுதலிய மூவகையென்றும், சிலர் விட்டலக்கணை, விடாதலக்கணை, விட்டுவிடாதலக்கணை, இலட்சிதலக்கணை என நால்வகையென்றும், சிலர் விட்டலக்கணை, விடாதலக்கணை, விட்டுவிடாதலக்கணை எனமூவகையென்றும் பகுப்பர்; இவற்றுள் இறுதியிற் கூறப்பட்ட பக்ஷத்தைக் கைக்கொண்டனர் இவ்வாசிரியர் என்பது 'தேரிலக்கணை திரிவிதத்திலிசைப்பர்' என்றதனால் நன்கு விளங்கும். இவ்வாறு பகுத்தற்கேதுவாயிருந்தபொதுஇலக்கணையின் இலக்கணம் முன்னர்க் கூறப்பட்டமை காண்க.

அவ்விலக்கணைக்குப் பீஜம்(காரணம்)தாற்பரியம் பொருந்
தாமையேயாம்; அன்னுவயம் (கொண்டு கூட்டு) பொருந்
தாமையன்று, யாகதண்டத்தைப் புகுவிக்க என்பது முத
லியவற்றுள் பிறழ்தலின். 'அது'தொகுதியொருமை.(எஉ)

ஆசிரியர் விட்டலக்கணையை உதாரணத்தால், விளக்குகின்றார்.

(73) மஞ்சு கூப்பிடு தென்றல் போலவும்
வடப கீரதி யுள்ளதே
விஞ்சு கோஷம தென்றல் போலவும்
விட்ட லக்கணை யாவதே.

இ-ள்.—மஞ்சு கூப்பிடுது என்றல் போலவும் = மஞ்
சம் சப்திக்கிறதென்றல் போலவும், வடபகீரதி = வடக்கே
பகீரதியெனப் பெயரிய கங்கையினிடத்து, விஞ்சுகோஷ
மது = பெரிய இடைச்சேரி யானது, உள்ளது என்றல்
போலவும் = இருக்கின்ற தென்றல்போலவும் (இருப்பது),
விட்டலக்கணையாவது = ஜகல் லக்ஷணையின் உதாரண
மெனப் படுவதாம். (எ-று.)

சொல்லின் முக்கியப்பொருள் (வாச்சியம்) விடப்படு
தலின் அதன் (முக்கியப்பொருளின்) சம்பந்தமுடைய
வேறுபொருளோடு (இலக்கி யார்த்தத்தினோடு) அச்சொல்
லிற் குண்டாம் இலக்கணாவிருத்தி (பரம்பரைச் சம்பந்தம்)
விட்டலக்கணையாம்; மஞ்சங் கூப்பிடுகிறதென்னும் வாக்கி
யத்தில் மஞ்சமென்னுஞ் சொல்லின் முக்கியப் பொருளா
கிய கட்டில் விடப்படுவதால் அதன் (கட்டில்) சம்பந்த
முடைய புருடனிடத்து மஞ்சமென்னுஞ் சொல்லிற்கு
இலக்கணாவிருத்தி யிருத்தல்காண்க; இங்கு மஞ்சமென்
னுஞ் சொல்லிற்கு வாச்சியம் கட்டிலும், இலக்கியம் புரு
டனுமாம். இவ்வாறு 'வடபகீரதி விஞ்சுகோஷமது உள்



ளது' என்பதிலும் அமைத்துணர்க. மஞ்சம், பகீரதி என்
னுஞ் சொற்கள் தம்மாற்றலால் உணர்த்தும் பொருள்கள்
கட்டிலும், நீர்ப்பெருக்குமாம்; அவற்றின்கண் முறையே
கூப்பிடுதற்கு வினைமுதலாந் தன்மையும், இடைச்சேரி
யிருத்தற்கு ஆதாரமாந் தன்மையும் பொருந்தாமை யா
னும் சொல்வோன்கருத்து அஃதன்மை யானும் அச்
சொற்கள் அப்பொருள்களைவிட்டு இலக்கணையால் முறை
யே புருடனையும் கரையையும் உணர்த்தினமை காண்க.
மஞ்சத்திற்குப் புருடனோடு ஆதேயத்தன்மைச் சம்பந்த
மும், பகீரதிக்குக் கரையோடு சையோக சம்பந்தமுமுள
வென்க.

தருக்கர் சொல்லில் மாத்திரம் இலக்கணை யுண்டென்
பர்; இதனைமறுத்து வாக்கியத்திலும் அது வுண்டென்
பாரைத் தழுவி 'வடபகீரதி' என்றார் ஆசிரியர். பதக்
கூட்டம் வாக்கியமெனப்படும்; எழுவாய், பயனிலையோடு
கூடியிருத்தல் வேண்டுமென்பதில்லை; ஆதலினாற்றான் 'வட
பகீரதி' என்பது வாக்கியமெனக் கொள்ளப்பட்டது; அது
சில ஆசிரியர்கொள்கை. இவற்றையெல்லாம் விரிவாய்க்
காணவேண்டின் விருத்திப் பிரபாகரம், தத்துவானு சந்
தான முதலிய நூல்களிற் காண்க.

விட்டலக்கணை = விட்ட சக்கியத்தின் சம்பந்தம். வட
க்கு + பகீரதி = வடபகீரதி. திசைப்பெயரோடு பிறபெயர்
புணருங்கால் நிலைமொழியீற்றுயிர்மெய்யும் ககரவொற்
றும் கெட்டது. 'கூப்பிடுது' என்பது கூப்பிடுகிற தென்
பதன் மரூஉ. 'பகீரதியுள்ளது' என்பதில் ஏழாம்வேற்றுமை
விகாரத்தாற் றொக்கது. உம்மைகளிரண்டும் எண்ணுப்
பொருளன. போலவென்னும் உவமவுரு பிரண்டும்,
"மங்கலமென்பதோ ரூருண்டுபோலும்" நெருப்பழற் சேர்

ந்தக்கா னெய்போல்வதூஉமென்றற்றொடக்கத்தனபோல ஒப்பில்போலி (ஒன்றற்கொன்று ஒக்குமென்னும் பொருள் தன்கணின்றிவரும்போலியென்னுஞ்சொல்) என்றுங் கூறுவர். பகீரதி - கங்கை; பகீரதன்பொருட்டுப் பூமியில் வந்ததனுற் பாகீரதிஎன்றுனது பகீரதிஎனக் குறுகிவந்தது. ()

ஆசிரியர் விடாதலக்கணையை உதாரணத்தால் விளக்குகின்றுர்.

(74) சிவலை நின்றது வெள்ளை போயின
தென்று செப்புதல் போலவே
கவலை யின்றி விடாத லக்கணை
யென்று நீகொள் கருத்திலே.

இ-ள்.—சிவலை நின்றது=சிவப்பு நின்றது, வெள்ளை போயினது=வெண்மைபோயிற்று, என்று செப்புதல் போல=என்று கூறுதல் போலவும் (இருப்பது), கவலையின்றி = யாதொரு துன்பமுமின்றி, விடாதலக்கணை என்று=அஜகல்லக்ஷணையின் உதாரணமென்று, கருத்தில் நீகொள்=உனது மனத்தின்கண் நீதாரணஞ் செய்துகொள்வாய்; (எ-று.)

சொல்லின் முக்கியப்பொருள் விடப்படாமையின் அதன் (முக்கியப்பொருள்) சம்பந்தமுடைய வேறுபொருளோடு (இலக்கியப் பொருளோடு) அச்சொல்லிற் குண்டாம் இலக்கணுவிருத்தி விடாதலக்கணையாம்.

'சிவலைநின்றது வெள்ளைபோயினது' என்பதிலுள்ள சிவலை, வெள்ளை என்னுஞ் சொற்களின் முக்கியப்பொருளாகிய சிவப்புநிறமும், வெண்மைநிறமும் விடப்படாமையின், அவற்றின் (சிவப்புநிற வெண்மை நிறங்களின்) சம்பந்தமுடைய ஆக்களிடத்துச், 'சிவலை' 'வெள்ளை' என்ற சொற்களுக்கு இலக்கணுவிருத்தி யிருத்தலையுணர்க. சிவலை



வெள்ளை என்னுஞ்சொற்கள் தம்மாற்றலா லுணர்த்தும் பொருள்கள் முறையே சிவப்பும், வெண்மையுமாம். அவை தனியே நிற்றலும், போதலுங் கூடாமையானும், சொல்வோன்கருத்து அஃதன்மையானும் அச்சொற்கள் இலக்கணையால் முறையே சிவப்புநிறமுடைய ஆவையும், வெண்மை நிறமுடைய ஆவையும் உணர்த்தல் காண்க.

இங்குச்'சிவலை','வெள்ளை' என்பவற்றிற்கு வாச்சியம் முறையே சிவப்பும், வெண்மையும் இலக்கியம் அவற்றையுடைய ஆக்களும் ஆம்.

சிவப்பு, வெண்மைஎன்ற பண்புகட்குப் பண்பியாகிய ஆக்களோடு உளதாய சம்பந்தம் சமவாயம் அல்லது தாதான்மியமாம். 'விடாதலக்கணை'-விடாத சக்கியத்தின் சம்பந்தம்.

'போயினது' - போ+ய்+இன்+அ+து. (இன், அ சாரியை). 'போல'என்னும்உவமவுருபு ஒப்பில்போலி என்றுங் கூறுவர். 'இன்றி' என்னும் வினை எச்சம் ஆய் விகுதி குன்றிய'கொள்' என்னும் முன்னிலை ஏவலொருமை வினை கொண்டு முடிந்தது. ஏகாரமிரண்டும் அசை நிலைகள். (எச)

ஆசிரியர் விட்டுவிடாத இலக்கணையை உதாரணத்தால் விளக்குகின்றுர்.

(75) மேவும் விட்டு விடாத லக்கணை
மெய்ம்மை யாதெனி னந்தவித்
தேவ தத்த னெனும்பொ ருட்படி
சிந்தை செய்திடு தீரவே.

இ-ள். மேவும்=(மூன்றுவதாய்ப்)பொருந்திய, விட்டு விடாதலக்கணை=ஜகதஜகல்லக்ஷணையின், மெய்ம்மை யாதெனின்=சொரூபம் யாதென்றுல், (அது), அந்தஇத்தேவ

தத்தன்எனும் பொருள்படி=சோயந்தேவதத்த: என்னும் வாக்கியத்திற்போலாம்; தீர=உறுதியாக(இதனை), சிந்தை செய்திடு=மனனஞ் செய்வாய்; (எ-று.)

சொல்லின் சக்கியப்பொருள் ஏகதேசம் விடுபட ஏக தேசத்தின்கண் ணுண்டாம் அச்சொல்லின் இலக்ஷணா விருத்தி விட்டுவிடாத இலக்கணையாம்; இது பாகத்தியாக இலக்கணையெனவும் கூறப்படும். அவனே இவன் என்னுந் தொடர்மொழியில் அவனென்னுஞ் சொற்குச் சேய்மைத் தேயமும், சென்ற காலமுமாகிய இவைகளோடு கூடிய புருடன் பொருளாவன்; இவனென்னுஞ் சொற்கு அண்மைத்தேயமும், நிகழ்காலமுமாகிய இவைகளோடு கூடிய புருடன் பொருளாவன்; அவ்விருபொருட்கும் ஒன்றுந் தன்மை அமையாமையானும் சொல்பவன் கருத்து அஃ தன்மையானும் அவனென்னுஞ் சொற்பொருட்(வாச்சியத்தின்)கண் விசேடண(அடை)பாகத்தைவிட்டு விசேடிய (அடைகொளி) பாகமாகிய புருடனிடத்து அவனென்னுஞ் சொற்கு இலக்கணையும், இவனென்னுஞ் சொற்பொருட் கண் விசேடண பாகத்தைவிட்டு விசேடிய பாகமாகிய புருடனிடத்து இவனென்னுஞ் சொற்கு இலக்கணையும் இருத்தல் காண்க. 'விட்டுவிடாதலக்கணை'-விட்டசக்கியப்பொருளும், விடாதசக்கியப் பொருளுமாகிய இவற்றின் சம்பந்தம். சக்கியத்தின் சம்பந்தம் இலக்கணையென்னும் பொதுவியல்பு (இலக்கணம்), ஈங்கும் (விட்டுவிடாத இலக்கணையினும்) உளதாதலும் அதனால், இங்கு அகண்டார்த்தம் பெறப்படுதலும்ஆராய்ந்துணர்க. அதனைப்பின்னர்க்காட்டுவாம். பொருளையுணர்த்தும் வாக்கியத்தைப் பொருளென்றார்; அஃது உபசாரம். ஏகாரம் அசை. 'செய்திடு'-ஏவல். 'மெய்ம்மை' என்பதில், 'மை' பகுதிப்பொருள் விகுதி.



மகாவாக்கியத்தில்'விட்டுவிடாத இலக்கணையே உபயோகமாமென ஆசிரியர் அருளிச் செய்தல்.

(76) விட்ட லக்கணை தனையும் விட்டு
விடாத லக்கணை தனையுநீ
விட்டு விட்டு விடாத லக்கணை
யால்வி ளங்கு விளங்கவே.

இ-ள்.—விட்டலக்கணை தனையும் விட்டு=(மகாவாக்கியத்தில்உபயோகமின்மையால்)ஜகல்லக்ஷணையையும்விட்டு, விடாதலக்கணை தனையும் விட்டு=(அவ்வாறே) அஜகல்லக்ஷணையையும் விட்டு, விட்டுவிடாதலக்கணையால்=(மகாவாக்கியத்திற்கு உபயோகமாகிய) ஜகதஜகல்லக்ஷணையால், நீ விளங்கவேவிளங்கு=(உன் சொரூபம் அபரோக்ஷமாக) விளங்குபடி நீ விசாரஞ் செய்குதி; (எ-று.)

வேதாந்த நூல்கள் எல்லாவற்றாலும் உணரத்தக்கவை காரியோபாதியின்றிருஷ்டா (பார்ப்பவன்) வாகிய சாக்ஷியும், காரணோபாதியின் றிருஷ்டாவாகிய பிரஹ்மமும் ஆம்; இவையிரண்டும் மகாவாக்கியத்தில் உள்ள தத்பத துவம்பதவாச்சியங்களிற் கலந்துள்ளன. ஈங்கு(மகாவாக்கியத்தில்)விட்ட இலக்கணை கொள்ளின் வாச்சிய முழுமையும் விட்டு வேறு பொருள் கவரல்வேண்டும். அவ்வேறு பொருள் சூனியம் (பாழ்) ஆம்; இதனையறிவதனால் வீடுபேற்றை முத்தி விருப்புடையோன் அடையான். விடாத இலக்கணை கொள்ளின் இலக்கணையின் பயனாகிய முரண் நீங்குதலேயின்றாம் வாச்சிய முழுமையு மிருத்தலின். ஆதலின், 'விட்ட லக்கணை தனையும் விட்டு, விடாத லக்கணை தனையும் விட்டு' என்றார் ஆசிரியர்.

ஆயின் விட்ட இலக்கணையும், விடாத இலக்கணையும், அவற்றின் உதாரணங்களும் ஈங்கு(சசிவன்ன போத முத

லிய நூல்களில்) கூறவேண்டுவதென்னையெனின் தனித் தனியே விட்ட இலக்கணையினியல்பும், விடாத இலக்கணையினியல்பும் நன்ருயோர்ந் துணராவிடத்து அவ்விரண்டு மொருங்கே கலந்துள்ள விட்டுவிடாத இலக்கணையின்றன்மை சிறிதும் புலப்படாதெனக் கருதியென்க. அன்றியும், இவ்விலக்கணைகளுக்கு மனேபிரஹ்மம் சத்தியஞானனந்தம் பிரஹ்மம் என்றல் முதலிய வாக்கியங்களில் உபயோகமிருத்தல் காண்க. தான் என்பதின் விகாரமாகிய தன்னிரண்டும் சாரியைகள்.

(௭௬)

முற்கூறிய விட்டுவிடாத விலக்கணையினது உதாரண வாக்கியத்தின் பொருளை விளக்குவதோடு தாஷ்டாந்தத்தில், பாகத்தியாக விலக்கணையின் பயனுகிய சீவப்பிரஹ்மங்களின் ஏகத்வரூபமான அகண்டார்த்தத்தைச் சீடன் அறியுமாறு ஆசிரியர், அவனுக்கு விசாரத்தை விதித்தல்.

(77) போது மேவிய தேசம் விட்டொரு
புருடனைக்கொளு மாறுபோ
லோது மீருடல் கண்டு விட்டத
னுண்மை காண வுணர்ந்திடே.

இ-ள்.—மேவியபோது தேசம்விட்டு=(அவனே இத் தேவதத்தன் என்னும் வாக்கியத்திலுள்ள அவன் இவன் என்னும் இருபதங்களின் வாச்சியார்த்தங்களுள்ளே ஐக்கியவிரோதியாகப்) பொருந்திய இறந்தகாலம் நிகழ்காலம் தூரதேசம் சமீபதேசம் ஆகிய இவ்விசேடணங்களை விடுத்து, ஒருபுருடனைக் கொளுமாறுபோல்=(அவிரோத தேவதத்தனுகிய) ஒரு புருடனை (அவ்வாக்கியத்தின் அர்த்தமாகக்) கொள்வதுபோல, ஓதும் ஈர் உடல்கண்டுவிட்டு=(தத்துவமசி மகாவாக்கியத்திலுள்ள தத்துவம் என்னும் இருபதங்களின் வாச்சியார்த்தங்களில்ஐக்கியவிரோதிகளாகக்)



கூறப்படுகின்ற (காரணம், காரியம் என்னும்) இருவகைப் பட்டவுபாதிகளையும் அறிந்து நீக்கி, அதன் உண்மைகாண உணர்ந்திடு = அவ்வுபாதிகளிரண்டிலும் (அனுகதமாய் அவற்றிற்கு அதிஷ்டானமாய் அவிரோத சேதனமாய்) உள்ள சொரூபத்தை (ஏகரூபமாயும் அவ்வாக்கியத்தின் அருத்தமாயும்) காணும்படி விசாரஞ்செய்குதி; (எ-று.)

சீவப்பிரஹ்மங்களின் ஒருமையை யுணர்த்துங் கருத்தோடு ஆசிரியராற் கூறப்பட்ட தத்துவமசி என்னும் தொடர்மொழிக்கண்ணுள்ள தத், துவம் என்னும் இருபதங்கட்கும் அகண்ட பிரஹ்மத்தின்கண் இலக்கணையுண்டு; ஈங்குக் காரணத்தன்மை முதலிய ஏழு பாதிகளையுடைய சைதன்னியம் தத்பத முக்கியார்த்தமும், காரியமெனப்படும் உடன் முதலிய ஏழுபாதிகளையுடைய சைதன்னியம் துவம்பத முக்கியார்த்தமும் ஆம்; இவ்விருபொருட்கும் குளிர்ந்த பண்புடைய பனிக்கட்டிக்கும், வெம்மைப் பண்புடைய நெருப்புக்கும் உள்ள வேறுபாடுபோன்று வேறுபாடே தோன்றுகின்றமையானும், சொல்வோன் கருத்து அஃதன்மையானும் தத்தென்னுஞ்சொல்லினது முக்கியப் பொருளின்கண் ஏகதேசமாகிய காரணத்தன்மை முதலிய உபாதிகளேழையும்விடலால் சேதனமாகிய ஏகதேசத்தின்கண் தத்தென்னுஞ்சொல்லினிலக்கணையும், துவமென்னுஞ் சொல்லினது முக்கியப் பொருளிண்கண் ஏகதேசமாகிய காரியமெனப்படும் உடல்முதலிய உபாதிகளேழையும் விடலால் ஏகதேசமாகிய சேதனத்தின்கண் துவமென்னுஞ் சொல்லினிலக்கணையும்உண்டு;இதுவிட்டுவிடாதஇலக்கணையெனவும், பாகத்தியாக இலக்கணையெனவும் கூறப்படும்.

“மகாவாக்கியத்தில்விட்டஇலக்கணையும் விடாதஇலக்கணையும்பொருந்தா;ஆனல்பாகத்தியாக இலக்கணையுண்டு;

அதன்றன்மை விசாரசாகரத்திலெழுதப்பட்டுளது. அப்பாகத்தியாக இலக்கணை மகாவாக்கியத்தில் இலட்சிதலட்சணையன்று; ஆனால் கேவல இலக்கணை ஏனெனின் இலக்கிய சேதனத்தோடு வாச்சியத்திற்குச் சாக்ஷாத்சம்பந்தமுண்டு பரம்பரைச் சம்பந்தமில்லை; யாண்டு, பாகத்தியாகஇலக்கணையுண்டோ ஆண்டுவாச்சியத்தின் ஏகதேசம் இலக்கியமாகும்; அவ்வேகதேசத்தோடு வாச்சியத்திற்குச் சாக்ஷாத் சம்பந்தமுளது; ஆதலின், கேவலஇலக்கணையாம். மகாவாக்கியத்தால் (பெருமொழியால்) ஞானவிருப் புடையாருக்கு அகண்டபிரஹ்மத்தின் அறிவுண்டாகுகவென்பது இறைவனது அனாதிகருத்து; ஆதலின், அது நிரூட இலக்கணையாம்; பிரயோஜனவதி இலக்கணையன்று.

ஈண்டிதுசங்கை:—வாச்சியார்த்தத்திற்கு இலக்கிய சேதனத்தோடு சம்பந்த மங்கீகரிக்கின் அசங்கத்தன்மைக்குக்கேடுண்டாம். சம்பந்த மங்கீகரியாவிடின், இலக்கணை பொருந்தாது. ஏனெனின், சக்கியசம்பந்தம் அல்லது போத்திய சம்பந்தத்தை இலக்கணையென்பர். அது அசங்கத்திற் பொருந்தாது.

சமாதானம்:—வாச்சியார்த்தத்தில் சேதனம், சடமென விரண்டுபொருளுண்டு. அதன்(வாச்சியார்த்தத்தினது)சேதனபாகத்திற்கு இலக்கியார்த்தத்தில் தாதாத்மிய (அபேத)சம்பந்தமுண்டு. வாச்சியபாகமான சேதனத்தின் சொரூபமே இலக்கியசேதனமாம்; ஆதலால், வாச்சியத்தின் சேதனபாகத்திற்கு இலக்கியசேதனத்தோடு தாதாத்மிய சம்பந்தமுண்டு வாச்சியத்தின் ஜடபாகத்திற்கு இலக்கியசேதனத்தோடு அதிட்டானத் தன்மைச் சம்பந்தமுண்டு. கற்பிதத்தின் சம்பந்தத்தால் அதிட்டானத்தின் சுபாவம்(இயற்கை)கெடாது. தனது தாதாத்மிய சம்பந்தத்தாலும் சுபாவத்திற்குக் கேடுண்டாகாது; அதனால்



இலக்கியார்த்தத்தின் அசங்கத்தன்மை கெடாது" என்று விருத்திப்பிரபாகரங் கூறுவதையாராய்ந்துணர்க. நிரூட இலக்கணை-நெடுநாளைய கருத்தின் விடயமாகிய பொருளிலிருக்குமிலக்கணை. பிரயோஜனவதிஇலக்கணை-பிரயோஜனமுடைய இலக்கணை. இவற்றிற்குமுறையே உதாரணம் நீலக்குடம், கங்கையிற் கிராமமென்பனவாம். இவற்றை விரிவாய்க்காணவேண்டின் நியாயநூல் முதலியவற்றிற்காண்க.

'விட்டு' என்னும் வினையெச்சம் 'கொளும்' என்னும் பெயரெச்சத்தோடும், 'கண்டு' என்னும் வினையெச்சம் 'விட்டு' என்னும் வினையெச்சத்தோடும், 'அவ்விட்டு' என்னும் வினையெச்சம் 'உணர்ந்திடு' என்னும் வினைமுற்றோடும் சென்றியைந்தன. (௭௭)

முற்கூறிய மகாவாக்கியத்தின் அருத்தத்தை மீண்டுந் தெளிவுபெறக் கூறத் தொடங்கல்.

வேறு.

(78) பிரியா வுயிர்கா ரியமா முடலும்
பிரமத் துறுகா ரணமா முடலும்
கரியா கியவா தனையுங் கழியக்
காட்டும் படிகண் டுகொள்கண் ணுறவே.

இ-ள்.—உயிர் = சீவனை(விட்டு), பிரியா = நீங்காதிருக்கின்ற, காரியம் ஆம் உடலும் = காரிய சப்தவுபாதியும், பிரமத்துறு = பிரஹ்மத்தின்கண் பொருந்திய, காரணம் ஆம் உடலும் = காரணசப்தவுபாதியும், கரியாகிய = (அவ்வுபாதிகளிரண்டிற்குஞ்) சாக்ஷியாகிய கூடஸ்தப் பிரஹ்மங்களை(முறையே சீவேஸ்வரர்களது யதார்த்த சொரூபமாக) உணர்ந்ததனாலாகிய, வாதனையும் = அந்தப் பேதவாசனையும், கழிய = நீங்க, காட்டும்படி = (நாம்) உணர்த்தும் விதமே, கண் உற = அபரோக்ஷமாக, கண்டுகொள் = தெரிந்துகொள்வாய்; (எ-று.)

'பிரியா வுயிர்கா ரியமா முடல்கழிய' எனவும், 'பிரமத்துறு காரணமாமுடல் கழிய' எனவும், 'கரியா கியவாதனை கழிய' எனவும் இயைத்துப் பொருள் காண்க. முன்னர்த்துவம்பதார்த்த விசாரமும், பின்னர்த் தத்பதார்த்த விசாரமும், இறுதியில் அசிபதார்த்த விசாரமும் செய்தல் ஆன்றோர்மரபாதலின் இவ்வாறு முறைப்படுத்திக்கூறினார் ஆசிரியர். இங்கு உயிரென்பது ஆகுபெயராய்ச் சீவனையுணர்த்திற்று. இதுபிராணவாயுவுக்கு இயற்பெயர். இதனை,

"உயிரெ னும்பெய ரியங்குகாற் கியற்பெய ருரைப்பி
னயலு றுந்தனக் கப்பெய ராகுபே ராமென்
றியலு ணர்ந்தவ ரியம்புவ ரென்றெமக் கிறைவன்
மயல றும்படி யுணர்ந்திஃ துரைத்தனன் மன்னோ."

என்ற செய்யுள்கொண் டுணர்க.

உம்மைகள் யாவும் எண்ணுப்பொருள. 'பிரியா'-ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். காரியப் பொருளில் வந்த 'கழிய' என்னும் வினையெச்சம் 'காட்டும்' என்னும் பெயரெச்சங் கொண்டு முடிந்தது. கரியை உணர்ந்ததனாலாகிய வாசனையை 'கரியாகியவாதனை' என்றது உபசாரம்.

'கண்ணுறக்கண்டுகொள்' என்று அருளிச் செய்ததுபற்றிச் சசிவர்ணனுக்கு 'கரணவியாபாரங்களோடு கூடியதும், கரணங்களொடுங்கினதும் எனப் பிரசித்தமாகக் காணப்படும் இவ்விரு அவத்தைகளுள்ளே எவ்வவத்தையில் முற்கூறிய பிரத்தியகபின்ன பிரஹ்மவஸ்துவைக் காணலாம்' என்னுஞ் சங்கையுண்டாக ஆசிரியர் அருளல்.

(79) கரணத் திரணிற் பினுமப் பொருளைக்
காணக் கிடையா தவைகை யறவே
மரணப் படினும் மதுகண் டுகொளும்
வழியில் லையெனும் படிநீ மதியே.



இ-ள்.—கரணத்திரள் நிற்பினும் = (அகக்கரணமும் புறக்கரணமுமாகிய)தத்துவக்கூட்டங்கள்(தத்தம் செயல்களோடுகூடி) நின்றாலும், அப்பொருளை = அவ்வகண்டார்த்தத்தை, காணக் கிடையாது = சாக்ஷாத்கரிக்கமுடியாது; அவை = அத்தத்துவக்கூட்டங்கள், கைஅறவேமரணப்படினும் = யாதொரு செயலுமின்றி யொடுங்கி நின்றாலும், அது = அவ்வகண்டார்த்தத்தை, கண்டுகொளும் வழி = காணும் மார்க்கம், இல்லை எனும்படி = இல்லையென்னும் விதத்தை, நீமதி = நீ தெரிந்துகொள்வாய்; (எ-று.)

'கரணத்திரணிற்பினும்' என்றமையானும், 'அவை கையறவேமரணப்படினும்' என்றமையானும் முறையே சகலாவத்தையினையும், கேவலாவத்தையினையும் தெரித்துணர்த்தினர். சகலாவத்தை - சிவன் தனது அருட்சத்தியால் மாயா காரியமாகிய மன முதலிய கருவிகளைத் தோற்றுவித்துக் கருவிகளை சீவஆன்மாக்கட்குக் கூட்டிக் காரியப்படுத்திப் போகங்களைப் புசிப்பிக்கையாகிய அவத்தை. இதில் நனவும், கனவுமடங்கும். கேவலாவத்தை-சீவஆன்மாத்தன்னிச்சா ஞானக்கிரியைகளி னிகழ்ச்சி சிறிதுமின்றித் தான் மாத்திரையே யுளனாகிய நிலை. இது உறக்கம்(சுழுப்தி). இவ்விரண்டவத்தைகளும்,முறையே மித்தையாகிய உலகப்பொருளை உணர்தற்கும், உணராமைக்குங் கருவியாகலின், உண்மைப் பொருளை(சிவத்தை)யுணர்தற்குக் கருவியாகமாட்டா வென்றுண்மை யுணர்கவென்பான் 'அப்பொருளைக் காணக் கிடையாது' என்றும், 'கண்டுகொளும் வழியில்லை' என்றும் கூறினார். 'கையறல்' செயலறல். ஏகாரமிரண்டும் அசைகள். (௭௯)

முற்கூறிய சகல கேவல அவத்தைகளிலடங்கிய சாக்கிர
முதலிய அவத்தைகளின் இலக்கணங்களை
ஆசிரியர் கூறல்.

(80) எந்தக் கரணங் களுமே வனனு
விதில்வா தனையால் விடயங் களொடே
யந்தக் கரணங் கள்பொருந் தல்கனு
வவைமாய் தல்சுழுத் தியவத் தையதே.

இ-ள்.—எந்தக் கரணங்களும்=(பாகியத்திலும் ஆந்தரத்திலுமுள்ள) சகல கரணங்களும், மேவல்=பொருந்தி விவகரித்தற்கிடனாகிய அவத்தை, நனு=சாக்கிராவத்தையாம்; இதில்=இச்சாக்கிராவத்தையில் (உள்ள அனுபவத்தானுண்டாகிய), வாதனையால்=சம்ஸ்காரத்தால் (பரிகல்பித), விடயங்களொடு=(ஞானசமகாலத்துத் தோன்றிய மனைவி மக்கள் முதலிய) விஷயங்களொடு, அந்தக் கரணங்கள்=மன முதலிய அகக்கருவிகள் (மாத்திரம்), பொருந்தல்=கூடி விவகரித்தற்கிடனாகிய அவத்தை, கனு=சொப்பனுவத்தையாம்; அவை மாய்தல்=அவ்வகக்கரணங்களும் (அவித்தையில்) ஒடுங்கியிருத்தற்கிடனாகிய அவத்தை, சுழுத்தி அவத்தையது=சுழுத்தி யவத்தையாம்; (எ-று.)

சாக்கிரம் - திக்குமுதலிய தேவதைகளாற் றாண்டப்பட்ட செவி முதலிய பொறிகளால் ஓசை முதலியவற்றின் அனுபவம் சீவ ஆன்மாக்கட்கு நிகழும் அவத்தை. இதற்குத் தானம் புருவநடு. நேத்திரமென்றுங் கூறுவர்; அது புருவநடுவுக்கு ஆகுபெயர்.

சொப்பனம் - நனுவில் இன்பத்துன்ப நுகர்ச்சியைப் பயக்கும் இருவினைகளும், செவிமுதலிய பொறிகளும் ஒடுங்கிநிற்க நனவின் அனுபவத்தானுயவாசனையால் ஓசை



முதலியவையும், அவற்றின் அனுபவமும் சீவ ஆன்மாக்கட்குண்டாமவத்தை. இதற்குத் தானங்கண்டம்.

சுழுத்தி - நனவிலுங் கனவிலும் போகநுகர்ச்சியைத் தரும் வினைகட்குண்டாம் ஒய்வால் தூலசூக்குமவுடல்களிலுண்டாம் பற்று நீங்குதல் வாயிலாய் விசேடித்துணருஞ் ஞானங்களனைத்தும்ஒடுங்கும் புத்தியின்காரண அஞ்ஞான மாத்ரையாய்ச் சீவ ஆன்மாக்கள் நிலைக்குமவத்தை. இதற்குத் தானம் இருதயம். இங்குச் சில நூலாசிரியர்கள் மரணம்,மூர்ச்சை என்னும் இரண்டவத்தைகளையுஞ் சுழுத்தியிலொடுக்கிக் கூறுவதைத் தழுவி இவரும் அவத்தை மூன்றையே கூறினரென்க. அவ்வவத்தைகளில் ஆன்மா நின்றுள்ளபோது முறையே விசுவன், தைசதன், பிராஞ்ஞன் எனப் பெயர்பெறும். ‘அவத்தை’ என்றது கடைநிலைத் தீவகமாய் நனவிலும் கனவிலும் சென்றியையும். ‘அது’ பகுதிப்பொருள் விகுதி. ‘எந்தக்கரணங்களும்’ என்பதில் எகரவினு எஞ்சாமைப்பொருளது. ஏகாரம்அசை. வாதனையால் என்பதுடன் பகரிகல்பித எனும் பயன் தொக்குநிற்கிறது.

ஆயின் எவ்வவத்தையிற் பிரஹ்மம் விளங்குமெனச் சீடன் வினவ
ஆசிரியர் கூறல்.

வேறு

(81) வினவிற் பரத்தையறி வுறுதற்
கவத்தைபுலன் வினைமாறியே
நனவிற் சுழுத்திநிலை வரினப்
பொருட்டிகழு நலமாகவே.

இ-ள். பரத்தை அறிவுறுதற்கு அவத்தை வினவில்=(முற்கூறியசாக்கிரமுதலியமூன்றவத்தைகளும் பிரஹ்மதரிசனத்திற்குரியவல்லவா:யின்) அப்பிரத்யகபின்ன பிரஹ்ம

தரிசனத்திற்குரிய அவத்தையாதாம் என்று நீ கேட்கில்,
புலன்வினைமாறியே=கரணவியாபாரங்களொழிய,நனவிற்
சுழுத்திநிலைவரின்=சாக்கிரத்தில் சுழுத்திநிலைவருமாயின்,
அப்பொருள்நலமாகத்திகழும்=அப்பிரத்யகபின்னபிரஹ்
மம் அபரோக்ஷமாக விளங்கும்; (ஆதலால் இந்நனவிற்
சுழுத்தியே பிரஹ்மதரிசனத்திற்குரிய அவத்தையாம்).

சமாதியிற் செவிமுதலிய பொறிகள் தமது காரண
மாகிய அவித்தையில் சுழுத்தியவத்தையிற்போல இலீன
மாகா (ஒடுங்கா)மல் தத்தங் கோளகைகளி லிருத்தலா
னும், அங்ஙனமிருப்பினும், விஷயானுபவ ரூபமான பகிர்
முக விருத்தி அவைகட் கின்மையானும் சமாதியை 'நன
விற் சுழுத்தி' என்றார் ஆசிரியர். நனவிற் சுழுத்தியில்
அங்கை நெல்லிக்கனிபோல் ஐயந்திரிபின்றி அகண்ட ஏக
ரச ஆனந்த சிவானுபவம் உண்டாகுமென்பான் 'அப்
பொருட்டிகழு நலமாகவே' என்றார். எனவே, நனவிற்
சுழுத்தி (சமாதி) பிரஹ்மானுபவத்திற்குச் சாதனமெனப்
பெறப்பட்டது; ஆயின் அச்சமாதி யில்லாதார்க்குப் பிரஹ்
மானுபவம் உண்டாகலாகாது; வாசிட்டமுதலிய அனுபூதி
நூல்களில் ஜனகர் முதலியோர் அச் சமாதியைக் கைக்
கொள்ளாது சித்தகீதையின் சிரவணமாத்திரத்தால் பிரஹ்
மானுபவம் பெற்றதாகக் கூறப்பட்டிருப்பது பொருத்த
மின்மையாமேஎனின் அற்றன்று, சமாதி யொன்றானேயே
பிரஹ்மானுபவ முண்டாமென்னும் நியமமில்லை; ஆனால்
விவேகத்தி (விசாரத்தி)னாலும் பிரஹ்மானுபவ முண்டாம்.
அந்தக்கரணத்தையும், அதன் விருத்திகளையும் ஒளிர்விக்
கின்ற துவம்பத இலக்கியார்த்த பிரத்யக்சாக்ஷி வடிவஆன்
மாவை அந்நமயமுதலிய ஐங்கோசங்களினும் வேறு படுத்
தித் துணிதல் விவேகமெனப்படும்; இதனால், பக்குவர்கட்



குத் தத்துவமசி முதலிய மகாவாக்கியங்களினின்றும் அகம்
பிரஹ்மமென்னும் பிரஹ்மானுபவமுண்டாமென்பது திண்
ணம்; ஆதலின், சமாதியைப்போன்று ஆராய்ச்சியெனப்
படும் விவேகமும் பிரஹ்மானுபவத்திற்குக் காரணமென்
பதில் ஐயமில்லை.

இங்கு இது கருத்து:—பிரஹ்மானுபவத்திற்குரிய அதி
காரிகள் இரு திறப்படுவர் ; ஒருவர்மிக்க வியாகூல சித்த
முடையார் ; மற்றொருவர் வியாகூலமில்லாச் சித்தமுடை
யார். இவர்களுள் முதல் அதிகாரிக்கு அச் சமாதியிற்றான்
பிரஹ்மானுபவமுண்டாம்; இரண்டாவததிகாரிக்கு விசார
மாத்திரத்தாற் பிரஹமானுப முண்டாமென்க. 'நனவிற்
சுழுத்திநிலை வரினப் பொருட்டிகழு நலமாகவே' என்
றது முதலதிகாரியைக் குறித்ததென்றுணர்க. இவ்வாறு
பிரமசூத்திரம், வாசிட்டம், பகவற்கீதை முதலிய நூல்க
ளுங் கூறுகின்றன. இங்குப் 'புலன்' என்றது ஞானேந்
திரியம், கர்மேந்திரியம், மனம் என்பவற்றை.

இங்குப் 'புலன்வினை மாறி' என்றமையான், இயமம்,
நியமம், ஆசனம், (இருப்பு), பிராணாயாமம் (வளிநிலை),
பிரத்யாகாரம்(தொகைநிலை), தாரணை (பொறைநிலை), தியா
னம்(நினைதல்),சமாதியென்னும் எண்வகை யோகவுறுப்புக்
களுள் பிரத்யாகாரம், தாரணை என்ற இரண்டையுமே
யுணர்த்தினர்; இவை நனவிற் சுழுத்திக்கு முக்கியசாதன
மாதலின். எண்வகையோக வுறுப்பை,

"பொய்கொலை களவே காமம் பொருளாசை
யிவ்வகை யைந்து மடக்கிய தியமம்"

"பெற்றதற் குவத்தல் பிழைப்புநனி யுலர்த்தல்
கற்பன கற்றல் கழிகடுந் தூய்மை
பூசனைப் பெரும்பய மாசாற் களித்தலொடு
நயனுடை மரபி னியம மைந்தே."

"நிற்ற லிருத்தல் கிடத்தல் நடந்தலென்
றுரைத்த நான்கி னெல்கா நிலைமையோ
டின்பம் பயக்குஞ் சமய முதலிய
வந்தமில் சிறப்பி னாசன மாகும்."

"உந்தியொடு புணர்ந்த விருவகை வளியுந்
தந்த மியக்கந் தடுப்பது வளிநிலை."

"பொறியுணர் வெல்லாம் புலத்தின் வழாம
லொருவழிப் படுப்பது தொகைநிலைப் புறனே."

"மனத்தினை யொருவழி நிறுப்பது பொறையே."

"நிறுத்திய வம்மன நிலைதிரி யாமற்
குறித்த பொருளொடு கொளுத்த னினைவே."

"ஆங்ஙனம் குறித்த வம்முதற் பொருளொடு
தான்பிற னாகாத் தகையது சமாதி."

என்று தொல்காப்பியத்தின் "அறுவகைப்பட்ட" என்னுஞ் சூத்திரவுரையில் உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்க்கினியார் காட்டிய உரைச் சூத்திரங்களானு முணர்க.

"நனவிற் சுழுத்தி நிலைமேவி நன்று
யெல்லா முள்ளகற்றித்
தனதிச் சையில்வந் ததுபுறத்தே சமைப்பாய்
சித்த முண்டாகை
கனதுக் கமதாஞ் சித்தமறிற் கனத்த
சுகமாஞ் சித்தத்தை
யுனதுட் படுத்தி யுணர்வின்மை யாலே
யொழிப்பா யுணர்வுரு வாய்."

என்ற வாசிட்டச் செய்யுள் இங்குணரத் தக்கது. ஏகார மிரண்டும் அசைநிலைகள்.

(அக)



'பிரியாவுயிர்' என்னும் 78-வது செய்யுளில் நுதலிப்
புகுந்த விஷயத்தை ஆசிரியர் இப்போது
இரண்டு செய்யுட்களால்அருளல்.

(82) திவிதத் தவத்தைகளை யறிவுற்ற
வத்துரிய நிலைசீவனே
யிவிதத்தி லப்புருட னனவுற்ற
வத்துரிய நிலையீசனே.

இ-ள்.—திவிதத்தவத்தைகளை =(சீவனது சாக்கிரமுதலிய) அவத்தாத்திரயங்களை, அறிவு உற்ற =(உதாசீனமாய்) அறிதலைப் பொருந்திநின்ற, அத்துரியநிலை = அத்துரியமென்னும் பிரத்யக் ஆத்மவடிவமே, சீவன் = சீவனது யதார்த்த சொரூபமாம்; இவிதத்தில் = இவ்வண்ணம், அப்புருடன் = அவ்வீஸ்வரனது, நனவு உற்ற =(சிருட்டி முதலிய அவத்தாத்திரயங்களைஉதாசீனமாய்)அறிதலைப்பொருந்திநின்ற, அத்துரிய நிலை = அத்துரியமென்னும் பிரஹ்மஸ்வரூபமே, ஈசன் = ஈஸ்வரனது யதார்த்த சொரூபமாம்;

'திவிதத் தவத்தைகளை யறிவுற்ற வத்துரிய நிலைசீவனே' என்றதனால் 'பிரியாவுயிர் காரியமா முடல் கழியக்' காட்டினார். இது துவம்பதார்த்த சோதனம்.

'இவிதத்தி லப்புருட னனவுற்ற வத்துரிய நிலையீசனே' என்றதனால் 'பிரமத்துறு காரணமாமுடல் கழியக்' காட்டினார். இது தத்பதார்த்த சோதனம். பதார்த்த சோதனம்-மண்ணையும், கிணற்றுகாயத்தையும் பிரிப்பதுபோலும், அல்லது வெண்ணெயையும் மோரையும் பிரிப்பதுபோலும், அல்லது அன்னம் பாலையும், நீரையும் பிரிப்பதுபோலும் துரியவஸ்துவிற்கும் அவத்தைக்கும் முறையேயுள்ள காரண காரியத்தன்மை, அதிஷ்டான அத்தி

யஸ்தத்தன்மை (கற்பனை), திருஷ்டா (காண்பவன்) திரு
சியத் (காணப்படுந்) தன்மை. சாக்ஷி சாக்ஷ்யத்(சாக்ஷி
யினா லறியப்படுந்) தன்மைமுதலியவற்றை நூல்கள் கூறிய
படி வேறுபிரித் துணர்தல். இதனைத் தத்பதார்த்த சோத
னத்தின்கண்ணும் துவம் பதார்த்த சோதனத்தின்கண்
ணும் உய்த்துணர்க. எல்லா நூல்கட்கும் இப்பொருளை
யறிவித்தலிலேயே கருத்தாம். இச்சோதனையின்றி மகா
வாக்கியார்த்த ஞானமுண்டாகாதாதலின் இது அவசியஞ்
செய்யத்தக்க தென்க. புருடன் - சர்வ சரீர வடிவபுரங்
களிலு மிருப்பவன்; அல்லது எவனாற் காரியம் யாவும்
பூரணிக்கப்படுகின்றனவோ அவன் புருடன். 'திரிவிதம்'
என்பது 'திவிதம்' என்றாயிற்று. நனவு-அறிதல். (அஉ)

(83) அகிலக் கரிப்பரம துரியப்பொருட் டுரிய
மதுவாகையே
புகலுற்ற தத்வமசி யெனுமுப் பதத்தின்முடி
பொருளாவதே.

இ-ள்.—துரியமது = (அவத்தாத்திரய) சாக்ஷிரூபப்
பிரத்யக் ஆத்மாவானது,அகிலக்கரிப்பரமதுரியப்பொருள்
ஆகையே = சர்வசாக்ஷியாகிய ஈஸ்வர துரியரூபப் பிரஹ்ம
மாக இருத்தலே, புகலுற்ற = (சாமவேதத்திலுள்ள சாந்
தோக்கிய வுபநிடதத்தின் ஆறுவதத்தியாயத்தில் சுவேத
கேதுவிற்கு உத்தாலகமுனிவர்) கூறியருளிய, தத்துவம்
அசி எனும் = தத் துவம் அசிஎன்கின்ற, முப்பதத்தின் =
மூன்று சொற்களின், முடிபொருளாவது = முடிந்த
பொருளாவதாம் (என்று); (எ-று.)

முற்செய்யுளினால் சீவனது யதார்த்த சொரூபமும்,
ஈசுவரனது யதார்த்தசொரூபமும் உணர்த்தி இச்செய்யு



ளில் அவற்றின் அபேதத்தையுணர்த்தினார்; இது 'கரியா
கிய வாதனைகழிய'க் காட்டியவிதமாம்.

அகிலக்கரி = (சரீரத்திரயம்,அபிமானித்திரயம்,அவத்
தாத்திரயம் ஆகிய)அனைத்தையு முணர்ந்துநிற்குஞ் சீவ
சாக்ஷியானது, பரமதுரியப்பொருள் = ஈஸ்வர துரியமாகிய
பிரஹ்மமாகவும், துரியம் = ஈஸ்வரதுரியமாகிய பிரஹ்மமா
னது, அது = சீவசாக்ஷியாகவும், ஆகையே = இருத்தலே,
புகலுற்ற தத்வமசியெனுமுப்பதத்தின்முடிபொருளாவதே
என்றும் உரைப்பர்.

இவ்வாறு உரைப்பின் ஈண்டு 'அகிலக்கரிப்பரம துரி
யப்பொருள்' என்றது சிவசாக்ஷியாய ஆத்மாவினிடத்
துப் பிரஹ்மத்தின் அபேதத்தை (ஒருமையை)யுணர்த்
துவதாய்ப் பிரஹ்மத்தின் கண்ணுண்டாம் பரோக்ஷத்வப்
பிராந்தியையும்,அநாத்துமத்வ(ஆத்மாவல்லாத தன்மை)ப்
பிராந்தியையும் ஒழிப்பதெனவும், 'துரிய மதுவாகையே'
என்றது பிரஹ்மத்தினிடத்துச் சாக்ஷியான்மாவின் அபே
தத்தையுணர்த்துவதாய்ச் சாக்ஷியின்கண்ணுண்டாம் பரிச்
சின்னத்வ(வரம்புபட்டதன்மை)ப் பிராந்தியையும்,பிரஹ்ம
மல்லாத் தன்மைப் பிராந்தியையும் ஒழிப்பதெனவுங்
கொள்க. இதனை, ஓதப்புரோதமென்று கூறுவர். போக்கு
வரவுப் பழக்கமில்லாமார்க்கம் செவ்வையாய் விளங்கா
ததுபோல, ஓதப்புரோத பாவனையின்றிச் செவ்வையான
அபேதஞானமுண்டாகாது; ஆதலால், மகாவாக்கிய உப
தேசத்தின்பின் ஞானவிருப்புடையோன் ஓதப்புரோத
பாவஞ் செய்வது நலம். நான் பிரஹ்மம் பிரஹ்மம் நான்
என மாறிச் சிந்தித்தல் ஓதப்புரோத பாவமெனப்படும்.
வதுமென்னுஞ் சொற்பொருளைப் பரிச்சின்னமெனவும்,

பிரஹ்மமல்லாததெனவும் தத் என்னுஞ் சொற்பொருளை அநான்மாவெனவும், பரோக்ஷமெனவும் யாவரும் மயங்கிக் கூறுப. இங்குத் தத், துவம், அசி என்பவைகளுள் தத்துவம் என்னுமிருசொற்களுக்குஞ் சாமானாதிகரணியத் தன்மைச் சம்பந்தமும், அவற்றின் பொருள்கட்கு விசேடண விசேடியத்தன்மைச் சம்பந்தமும், அச்சொற்களுக்கும் பொருள்கட்கும் அகண்டார்த்தத்தோடு இலக்கண இலக்கியத்தன்மைச் சம்பந்தமும் இயைந்திருத்தலை உய்த்துணர்க.

பரியாயமல்லா இருபதங்களுக்கு ஒரு வேற்றுமையுளதாக ஒரு பொருளினுண்டாம் பிரவிருத்தி (தாற்பரியவடிவ சம்பந்தம்) சாமானாதிகரணிய மெனப்படும்; சமான அதிகரணமுடைய இரண்டுபதம் சமானாதிகரணமாம். அவற்றின் சம்பந்தம் சாமானாதிகரணிய மெனப்படும். இங்கு விதேயம் (விதிக்கப்படுவது) விசேடணமும், உத்தேசியம் (உத்தேசிக்கப்படுவது) விசேடியமும் ஆம். அறிவிப்பது இலக்கணமும், அறியத்தக்கது இலக்கியமுமாம். இவற்றை, விரிவாயுணரவேண்டின் தத்துவானுசந்தான முதலிய நூல்களிற் காண்க.

ஏனையோர் கூறும் பொருள் யாவும் பூர்வ பக்ஷம்; இப்பொருளே சித்தாந்தமான அர்த்தமென்பான் 'முடிபொருளாவதே' என்றார்.

முன்னுரைத்த பொருளுக்கு 'அது' என்பது பகுதிப்பொருள் விகுதி. 'ஆகை' என்னுந் தொழிற்பெயர் இங்கு இருத்தலென்னும் பொருளது. ஏகாரமிரண்டனுள் முன்னது பிரிநிலை; பின்னது அசை. 'முடிபொருள்' வினைத்தொகை. மூன்று+பதம்=முப்பதம். அ+கிலம்=அகிலம் (எல்லாம்). 'அ' எதிர்மறை. 'கிலம்' குறைவு. பின்



னுரைத்த பொருளுக்குக் 'கரி' என்பது முதல்வேற்றுமை; புணர்ச்சியில் மிகாதாயினும் ஓசை நயம்பற்றிக் 'கரிப்பரம்' என மிக்கது. என்றென்பது சொல்லெச்சம். (அங)

இவ்வாறு 'நிமலமாம்பரம்' என்னும் 61-ஆவது செய்யுண் முதல் இதுகாறும் ஆசிரியர் 'சசிவர்ணனுக்கு மகாவாக்கியத்தையுபதேசித்துச் சுருதிவாக்கிய விசார வாயிலாகவே அவ்வகண்டார்த்தத்தைப் பெறுவாயாக' என்று ஆஞ்ஞாபித்தலைக் கேட்ட சசிவர்ணன், தன் பாலுற்ற அவ்வகண்டார்த்தப் பேற்றின் அசாமர்த்தியத் தன்மையைக் குரு சந்நிதானத்தில் விண்ணப்பித்தல்.

(84) நிமலப் பொருட்சுருதி நெறியிற் பெறக்கருணை
நிதிகூறவே
யமலப் பொருட்பெறுத லருமைத் தெனக்கழறி
யடிவீழவே.

இ-ள்.—கருணைநிதி=கருணாநிதியாகிய ஆசிரியர், சுருதி நெறியில்=சுருதிவாக்கிய விசார வாயிலாக, நிமலப்பொருள்பெற=நின்மலமாகிய பிரஹ்மதத்துவத்தையடையும்படி, கூற=உபதேசிக்க, (சசிவர்ணன்), அமலப்பொருள்=பிரத்யகபின்ன பரப்பிரஹ்மத்தை, பெறுதல் அருமைத்து எனக்கழறி=(எம்போன்றவர்களால்) அடைதல் மிகவும் அருமையானதாமென்று விண்ணப்பித்து, அடிவீழ=திருவடியின்கண் வீழ்ந்து நமஸ்கரிக்க, (எ-று.)

இச்செய்யுளினுள்ள 'அடிவீழ' என்பது 'மொழியென' என்று அஅ-வது கவியோடு தொடரும். அரு, அசு, அஎ-கவிகளினுள்ள 'செய்து' (அரு), 'கவசமெனவிட்டு, மிச்சிலிட்டு' (அசு), 'கைக்கொடு, மேவி' (அஎ), என்ற வினை

பிரஹ்மமல்லாததெனவும் தத் என்னுஞ் சொற்பொருளை அநான்மாவெனவும்,பரோக்ஷமெனவும் யாவரும் மயங்கிக் கூறுப. இங்குத் தத்,துவம், அசி என்பவைகளுள் தத்துவம் என்னுமிருசொற்களுக்குஞ் சாமானாதிகரணியத் தன்மைச் சம்பந்தமும், அவற்றின் பொருள்கட்கு விசேடண விசேடியத்தன்மைச் சம்பந்தமும், அச்சொற்களுக்கும் பொருள்கட்கும் அகண்டார்த்தத்தோடு இலக்கண இலக்கியத்தன்மைச் சம்பந்தமும் இயைந்திருத்தலை உய்த்துணர்க.

பரியாயமல்லா இருபதங்களுக்கு ஒரு வேற்றுமையுளதாக ஒரு பொருளினுண்டாம் பிரவிருத்தி (தாற்பரியவடிவ சம்பந்தம்) சாமானாதிகரணிய மெனப்படும்; சமான அதிகரணமுடைய இரண்டுபதம் சமானாதிகரணமாம். அவற்றின் சம்பந்தம் சாமானாதிகரணிய மெனப்படும். இங்கு விதேயம் (விதிக்கப்படுவது) விசேடணமும், உத்தேசியம் (உத்தேசிக்கப்படுவது) விசேடியமும் ஆம். அறிவிப்பது இலக்கணமும், அறியத்தக்கது இலக்கியமுமாம். இவற்றை, விரிவாயுணரவேண்டின் தத்துவானுசந்தான முதலிய நூல்களிற் காண்க.

ஏனையோர் கூறும் பொருள் யாவும் பூர்வ பக்ஷம்; இப்பொருளே சித்தாந்தமான அர்த்தமென்பான் 'முடி பொருளாவதே' என்றார்.

முன்னுரைத்த பொருளுக்கு 'அது' என்பது பகுதிப் பொருள் விகுதி. 'ஆகை' என்னுந் தொழிற்பெயர் இங்கு இருத்தலென்னும் பொருளது. ஏகாரமிரண்டனுள் முன்னது பிரிநிலை; பின்னது அசை. 'முடிபொருள்' வினைத்தொகை. மூன்று + பதம் = முப்பதம். அ + கிலம் = அகிலம் (எல்லாம்). 'அ' எதிர்மறை. 'கிலம்' குறைவு. பின்



னுரைத்த பொருளுக்குக் 'கரி' என்பது முதல்வேற்றுமை; புணர்ச்சியில் மிகாதாயினும் ஓசை நயம்பற்றிக் 'கரிப்பரம' என மிக்கது. என்றென்பது சொல்லெச்சம். (௮௩)

இவ்வாறு 'நிமலமாம்பரம்' என்னும் 61-ஆவது செய்யுண் முதல்
இதுகாறும் ஆசிரியர் 'சசிவர்ணனுக்கு மகாவாக்கியத்தை
யுபதேசித்துச் சுருதிவாக்கிய விசார வாயிலாகவே
அவ்வகண்டார்த்தத்தைப் பெறுவாயாக' என்று
ஆஞ்ஞாபித்தலைக் கேட்ட சசிவர்ணன், தன்
பாலுற்ற அவ்வகண்டார்த்தப் பேற்றின்
அசாமர்த்தியத் தன்மையைக் குரு
சந்நிதானத்தில் விண்ணப்பித்தல்.

(84) நிமலப் பொருட்சுருதி நெறியிற் பெறக்கருணை
நிதிகூறவே
யமலப் பொருட்பெறுத லருமைத் தெனக்கழறி
யடிவீழவே.

இ-ள்.—கருணைநிதி = கருணாநிதியாகிய ஆசிரியர், சுருதி நெறியில் = சுருதிவாக்கிய விசார வாயிலாக, நிமலப் பொருள்பெற = நின்மலமாகிய பிரஹ்மதத்துவத்தையடையும்படி, கூற = உபதேசிக்க, (சசிவர்ணன்), அமலப்பொருள் = பிரத்யகபின்ன பரப்பிரஹ்மத்தை, பெறுதல் அருமைத்து எனக்கழறி = (எம்போன்றவர்களால்) அடைதல் மிகவும் அருமையானதாமென்று விண்ணப்பித்து, அடி வீழ = திருவடியின்கண் வீழ்ந்து நமஸ்கரிக்க, (எ-று.)

இச்செய்யுளிலுள்ள 'அடிவீழ' என்பது 'மொழியென' என்று ௮௮-வது கவியோடு தொடரும். ௮௫, ௮௬, ௮௭-கவிகளிலுள்ள 'செய்து' (௮௫), 'கவசமெனவிட்டு, மிச்சி விட்டு' (௮௬), 'கைக்கொடு, மேவி' (௮௭), என்ற வினை

யெச்சங்கள் அஅ-வது கவியிலுள்ள 'விழியைக்கொடுத்து' என்பதனோடு தொடரும்; 'கொடுத்து' என்னும் இவ்வினையெச்சமும் 'மொழியென' என்பதனையே தொடரும்.

அனுமான முதலிய யுத்திகள் சுருதிக்குத் துணையாயிருத்தலைக் கொண்டு பிரமாண மெனப்படுகின்றன; சுதந்தரப்பிரமாணமாகா. சுருதியானது அவ்வாறு ஒன்றற்குத் துணையாயிருத்தலைக் கொண்டு பிரமாண மெனப்படுவதில்லை. ஆத்திகரனைவருஞ் சுருதியைச் சுதந்தரப்பிரமாணமென்றும், சுயம்புவென்று மறைவர். சுருதி கூறுகின்ற பொருளையே துணியும் அனுமான முதலியவைகள் சுருதிக்குத் துணையெனப்படும்; சுருதியின் மாறுபட்ட பொருளைத் துணியின் துணையெனவும் பிரமாணமெனவும் படா. ஆதலின், சுருதியிற் கூறப்பட்ட நெறியே மிகச்சிறந்ததென்பான் 'சுருதி நெறியிற்பெற' என்றார்.

சுரு + தி; சுரு - கேட்டல்; தி - கருவிப் பொருளையும், செயப்படுபொருளையும் உணர்த்தும் விகுதி. அதிசூட்சுமமாதலின 'அமலப்பொருட் பெறுதல் அருமைத்து' எனப்பட்டது. ஏகாரமிரண்டும் அசைகள். 'கருணைநிதி' அன்மொழித் தொகை. (அச)

இவ்வாறு விண்ணப்பித்துத் தமது திருவடிகளிற் பணிந்த சீடனை, ஆசிரியர் கண்ணுற்று, மகாவாக்கியத்தை உபதேசித்தும், பிரதிபந்த வயத்தால் சீடன் கிருதார்த்தனாகாமையின் அந்தப் பிரதிபந்த நிவர்த்திக்கு ஏதுவாகிய தீக்ஷையைச் செய்து அதுவாயிலாகப் பிரதிபந்தமிகந்த ஞானத்தையளித்து அதன்பின் அனுபவம் வினவத் தொடங்கல்.

(85) தமரக் கலைக்களவு தெரிவற்ற தற்பொருள
தனையீகுவா
னமரர்க் களப்பரிய பதநற்பு னற்கொடுசெய்
தபிடேகமே.



இ-ள்.—தமரக்கலைக்கு = சப்தரூபமாகிய வேதசாஸ்திரங்களுக்கும், அளவு தெரிவற்ற = அளவிட்டறிதற்கரிய, தற்பொருள் அதனை = தத்பதார்த்தமாகிய பிரஹ்மத்தை (துவம்பதார்த்த ரூபப்பிரத்யகாத்மாவாக), ஈகுவான் = (அங்கை நெல்லிக்கனிபோல் அபரோக்ஷமாய்) அளித்தற்பொருட்டு, அமரர்க்கு = தேவர்களுக்கும், அளப்பரிய = அளவிட்டுக்கூறுதற்கரிய, நல் பத புனல் கொடு = (தனது) நல்ல பாதோதகமாகிய தீர்த்தத்தைக் கொண்டு, அபிடேகஞ்செய்து = சீடனுக்கு அபிஷேகஞ் செய்தருளி, (எ-று.)

சுருதியின்கண்ணுள்ள 'தத்' என்பது முதலிய சொற்களின் சக்தி விருத்திக்குப் பிரஹ்மம் விடயமன்று; ஆனால் அவற்றின் இலக்ஷணாவிருத்திக்கு விடயமாமென்பது மரபாதலின் 'தமரக் கலைக்களவு தெரிவற்ற தற்பொருள்' என்றார். இங்கு,

"வாக்கியந் தனக்கெட்டாது வத்துவென் றுரைத்த வேதம்
வாக்கிய விருத்தி யாலவ் வத்துவைக் காட்டிற் றன்றோ."
என்ற கைவல்யக் கருத்துணர்க.

'அமரர்க் களப்பரிய பதநற்புனல்' என்று இவர் புகழ்ந்து கூறியதுபோலவே கைவல்ய ஆசிரியரும்,

"குலவுசற் குருவின் பாதக் குளிர்புனற் றலைமேற் கொண்டால்
உலகினிற் றீர்த்த மெல்லா முற்றபே றடைவார் போல"

என்று கூறியிருத்தலைக் காண்க. வேதம் எழுதாக்கிளவி எனப்படுதலின் 'தமரக்கலை' என்றார். இங்குத் 'தமரம்' என்பது இனம் விலக்கவந்த அடை. 'தமரக்கலை அளவுக்கு' என்று உருபு பிரித்துக்கூட்டி நாதவடிவமான சுருதிப்

பிரமாணத்திற்கும் என்று பொருளுரைப்பினும் அமையும். இதற்கேற்பத் 'தெரிவற்ற' என்பதற்கு அகோசரமான வென்று பொருள்கூறுக. கலைக்கு, அமரர்க்கு என்பவற்றில் உயர்வு சிறப்பும்மைகள் விகாரத்தாற் றொக்கன. ஈகுவானென்றது வானீற்று வினையெச்சம்.

அளவு=பிரமாணம். உலகத்துப் பதார்த்தங்களை எண்ணல், எடுத்தல், முகத்தல், நீட்டல், என்னும் நால்வகை அளவினால் அளந்தறியுமாறு போலப் பதி முதலிய பொருள்களைப் பிரமாணத்தினால் அளந்தறிதலினாற் பிரமாணம் 'அளவு' எனப்பட்டது. (அரு)

(86) பவளத்தில் வைத்தவமிர் தினின்மிச்சி லிட்டினிய
பரிவோடுமா
தவளப்பொ டிக்கவச மெனவிட் டுடற்பகைக
டலைசாயவே.

இ-ள்.—உடற்பகைகள் = உடன் முதலிய காரியசப்தவுபாதிகளென்னுஞ் சத்துருக்கள், தலைசாய = தலைசாய்ந்தோடும்படி, மாதவளப்பொடி = பெருமைமிக்க வெண்மையானவிபூதியை, கவசம் என இட்டு = வஜ்ர கவசம்போலத் தரித்து, இனிய பரிவோடும் = இனிமையான அன்பினால்' பவளத்தில் வைத்த = பவளம்போன்ற அதரத்தில் வைத்துத் திருவமுது செய்தருளிய, அமிர்தினின் = அமிர்தத்தினை ஒத்த, மிச்சில் இட்டு = தனது பரிகல சேடத்தைக் கொடுத்தருளி, (எ-று.)

ஜாபாலவுபநிடதத்திற் கூறப்பட்ட விபூதி தாரணாதிகளும் சிவப்பிரீதிகரங் (செய்பவை)களாகலின் பிரஹ்மவித்தைக்கு அந்தரங்க சாதனங்களாமெனப் படுதலின் 'மாதவளப்பொ டிக்கவச மெனவிட் டுடற்பகைக டலைசாயவே, என்றார். இங்கு,



"வேளுடல் பொடிபட விழித்த விண்ணவற்
காளனு மன்பின லணியு நீற்றையுத்
தூளனம் பண்ணலாற் றொழுது போற்றலான்
மாளுதல் பிறத்தலாம் வழியை மாற்றலாம்."

என்று பிரமகீதை கூறுவதுகாண்க. விபூதியின் மான்மிய முதலியவற்றை விரிவாயறியவேண்டின் நிஜகுணயோகியினாற் கூறப்பட்ட விவேகசிந்தாமணி முதலிய நூல்களிற் காண்க. 'பவளம்' என்பது உவமவாகுபெயர். 'இன்' என்னும் ஐந்தனுருபு ஒப்புப்பொருளது. 'வைத்த' என்னும் பெயரெச்சம் மிச்சிலென்னும் பெயரோடியையும். 'சாய' என்னும் வினையெச்சங் காரியப்பொருளில் வந்தது. தலைசாய்தல் = நாணுதல். 'உடற்பகைகள்' என்றதற்குச் சுரநரதிரியக்காதி சரீர ரூப சத்துருக்கள் என்றும் பொருள் உரைப்பர். (அசு)

(87) உதகத் துடற்பொருளொ டுயிர்கைக்கொ டுச்சிமிசை
யொருபோதொடே
பதகத் தலத்தைவிட விருகைத் தலத்தொடிரு
பதமேவியே.

இ-ள்.—உதகத்து = ஜலபூர்வகமாய், உடல் பொருளொடு உயிர் = உடல், பொருள், ஆவி என்னுமூன்றையும், கைக்கொடு = வாங்கிக்கொண்டு, ஒருபோதொடு = ஒரு க்ஷணத்திலேயே, பதகத் தலத்தை விட = அஞ்ஞான சப்த பூமிகளினின்று நீங்கி ஞானபூமியின் முடிவாகிய அநுபவத்தைப் பெறுமாறு, உச்சிமிசை = சிரசின்மீது, இருகைத் தலத்தொடு = இருகரங்களோடு, இருபதம் = இரண்டு திருவடிகளையும், மேவி = மேவுவித்து, (எ-று.)

இவ்வாறு, திருவடிதீர்த்தங்கொண்டு சீடனுக்கு அபிடேகஞ்செயலும், பஸ்மகவசமிடலும், திருவடிசூட்டலும், அஸ்தமஸ்தக சையோகஞ்செயலும் ஆகிய இவை தீக்ஷை முறையாம். தீக்ஷை நிராதாரை, சாதாரை என இருவகைப் படும். அவற்றுள், நிராதாரை இறைவனே நேரில்தம்மைத் தியானிக்கும் அடியார்மாட்டுப்புரிவதாம். சாதாரை குருமூர்த்தியை அதிஷ்டித்துச் (இடமாகக்கொண்டு) செய்வதாம். இங்குச்சசிவர்ணனுக்குச்செய்த தீக்ஷைசாதாரையில் அடங்கும். தீ+க்ஷை; 'தீ' என்பது கொடுத்தல்; 'க்ஷை' என்பது அழிவு. எனவே மெய்யுணர்வு முதலியவற்றைத் தந்து அவிச்சையையழித்தல் என்பது திரண்டபொருள்.

அஞ்ஞானபூமிகள் ஏழாவன:—பீஜசாக்கிரம், சாக்கிரம், மகாசாக்கிரம், சாக்கிரசொப்பனம், சொப்பனம், சொப்பனசாக்கிரம், சுழுத்தியென்பனவாம். இவற்றை,

"முந்தவகண் டத்தெழுமோ ரறிவுமாத் திரமதுதான்
முதல்வித் தாகும்
இந்தவறி விற்பண்டில் லாவகந்தை முளைபோலா
மிதுநனவாம்
வந்துவந்து பிறவிதொறு மகமமதை வளருமது
மகாநனவாம்
நந்துமகங் கொடுநனவின் மனோராச்சி யஞ்செயலே
நனுக்கனவே."

"உண்டுறங்கி மனோராச்சி யஞ்செயல்சொப் பனமெனும்
பேருடைய தாகும்
பண்டுகனக் கண்டுமறந் ததைமீண்டு நினைப்பதுசொப்
பனநனவாம்



மண்டுமிருண் மூடுவது சுழுத்தியா மஞ்ஞான
வகைகள் சொன்னேம்
விண்டுநிறை முத்திதரு ஞானபூ மிகளேழும்
விளம்பக் கேளாய்"

என்ற கைவல்யச் செய்யுட்களிற் காண்க. உடல், பொருள், உயிர் எனும் இவற்றைத் தத்தம்பண்ணல் அவற்றின்கணுள்ள அபிமானத்தை விடுதல். உயிர் - சீவன். 'குடிபொன்றிக் குற்றமுமாங்கேதரும்' என்புழிப்போல 'மேவுவித்து' என்பது 'மேவி' என விவ்விகுதி தொக்குநின்றது. ஏகாரமிரண்டும் அசைகள். பதகம் - பாதகமென்பதன் குறுக்கம். பதகத்திற்கேதுவாகிய அஞ்ஞானத்தைப் 'பதகம்' என்றது உபசாரம்; (அள)

(88) ஒழியப் புலக்கணுப நிடதப் பொருட்டெரிய
வுளஞானமாம்
விழியைக் கொடுத்துமொழியெனமுப்ப தப்பொருளும்
வெளியாகவே.

இ-ள்.—புலக்கண் ஒழிய=விஷய திருஷ்டி நீங்குதற்கும், உபநிடதப் பொருள் தெரிய = உபநிடதங்களின் அருத்தரூபமானபிரஹ்மாபின்ன பிரத்யக ஆத்மாவானது விளங்குதற்கும், உள=ஏதுவாகவுள்ள, ஞானமாம் விழியைக் கொடுத்து=ஞானமாகிய திருஷ்டியைக் கொடுத்து, முப்பதப் பொருளும்=(ஏ சசிவர்ண! தத்வமசி மகாவாக்கியத்தின்கணுள்ள) தத்துவம் அசி என்னும் மூன்று பதங்களினர்த்தங்களையும், விளக்கமாக=(யாமுபதேசித்த வண்ணமே நீஅநுபவித்தபடி) விளக்கமாக, மொழிஎன=கூறுவாயென்று ஆஞ்ஞாபிக்க, (எ-று.) 'ஓதும்' என 89-வது கவியோடு தொடரும்.

புலக்கண் ணொழிதலும் உபநிடதப்பொருள் தோன்றலும் தத்துவஞானத்தின் பயனென்க. இங்கு 'ஞானமாம் விழி' என்பதன் விளக்கத்தை 59-வது செய்யுளுரையிற் காண்க.

“நீண்ட காலங்கூட விருத்தலினாலும், உரையாடல் முதலிய குறிகளாலும் அறியப்பட்ட குணாதீதத்தன்மை, அண்மையிற்றோன்றும் மரணவுணர்ச்சியினால் அஞ்சுதலின்மை, விரும்பத்தக்கவைகளிலும், வெறுக்கத்தக்கவைகளிலும் முறையே மோகமும் சோகமும் இல்லாமை முதலிய ஞானியின் ஸ்வசம்வேத்திய (தன்னால் அறியப்படும்) இலக்கணங்களினால், வேறு அறிஞனால், அனுமானத்தால் அறியத்தக்கது ஞானியின்கதி (அனுபூதி)” என்று அனுபூதிமான்களாற் கூறப்படுதலின், சிடனது அனுபவமுணர்தற்பொருட்டு 'மொழியென முப்பதப்பொருளும் வெளியாகவே' என்றார். எந்த இலக்கணம் பாகவதத்தின் ஏகாதச ஸ்கந்தத்திற் கூறிய மேலான கிருபையுடைமை முதலிய பரசம்வேத்திய (பிறராலறியப்படும்) இலக்கணங்களைப் போன்று பிறரால் அறியப்படுவதில்லையோ, ஆனால் ஞானியாகிய தன்னாலேயே யறியப்படுகிறதோ அது ஞானியின் ஸ்வசம்வேத்திய இலக்கண மென்க. புலக்கண் = புலத்தை விடயஞ்செய்யுங்கண் என விரியும். 'ஞானமாம் விழி' என்பது உருவகம். ஒழிய, தெரிய என்னும் வினையெச்சங்கள் உளவென்னும் பெயரெச்சங்கொண்டு முடிந்தன. 'வெளியாக' என்னும் குறிப்பு வினை எச்சம் 'மொழி' என்னும் முன்னிலை ஏவல் கொண்டது.

(அஅ)



ஆசிரியர் ஆஞ்ஞாபித்தவண்ணம் சிடன் தன்னனுபவத்தைச் சொல்லத் தொடங்கல்.

(89) நனவைத் துவக்கிமுடி துரியத்தை முற்றவிறை
நவினீதியே
மனவர்க்க மற்றவது பவமுற்ற சிற்ககன
வலியோதுமே.

இ-ள்.—நனவைத்துவக்கி = (சீவ)சாக்கிரத்தைத் தொடங்கி, முடி துரியத்தை = சிவதுரியத்தை, முற்ற = ஈறாக, இறை = ஆசிரியர், நவில் நீதியே = திருவாய் மலர்ந் தருளியவண்ணமே, உற்ற = தானடைந்த, மனவர்க்கம் அற்ற = மன முதலிய கரணக்கூட்டங்க ளற்றதனாலாகிய, சிற்ககன அனுபவ வலி = பிரஹ்மானுபவத் திறத்தை, ஓதும் = சசிவர்ணன் கூறுவான்; (எ-று.)

'சிற்ககன அனுபவம்' சகலாவத்தை கேவலாவத்தை யிரண்டுமற்ற சுத்தாவத்தை (நனவிற் சுழுத்தி)யின்கண் நிகழ்தலை விளக்க அதற்கு 'மனவர்க்கமற்ற' என்னும் அடை கொடுத்தார். பன்னிரண் டவத்தைகளுள் முடிவானதாதலின் சிவதுரியத்தை 'முடிதுரியம்' என்றார். ஏகாரம் இரண்டனுள் முன்னது தேற்றம் பின்னது அசை. இறை துவக்கி முற்ற நவில்நீதி எனக் கூட்டி முடிக்க. சிற்ககனம் = சிதாகாசம்.

(அகூ)

சீவ சாக்கிரம்.

வேறு.

(90) புரண மாகவே புறம்புள புலன்களு மந்தக்
கரண மியாவையும், வழங்கிடம் நனவெனக் கண்டேன்

இ-ள்.—புறம்பு = பாகியத்தில், புரணமாக = சம்பூர்ணமாக, உள = உள்ள, புலன்களும் = கரணங்களும், அந்

தக்கரணம்=(மனமுதலிய) அந்தக் கரணமும், (ஆகிய),
யாவையும்=அனைத்தும், வழங்கிடம்=(ஸ்திர விஷயங்க
ளோடு பொருந்தி தத்தம்) விவகாரங்களைச் செய்யும் அவஸ்
தையை, நனவென=(சீவ) சாக்கிரமென, கண்டேன்=
(யான்) அறிந்தேன்; (எ-று.)

இங்கு, 'புரணம்' என்பது "எஞ்சு ருதகல் புரண
பாவனை" என்பதிற்போலப் பூரணமென்பதின் குறுக்கம்.
'புரணம்' என்பது புலன்கள் நிறைவிற்கெனவும், 'யாவை
யும்' என்பது இருகரணங்களையும் ஒன்று படுத்தற்கென
வும் கொள்க. 'ஸ்புரணம்' என்ற மொழியின் சிதை
வெனக்கொண்டு 'புரணமாக' என்பதற்குச் 'சப்தாதி விஷ
யங்கள் விளங்குவதற்காக' என்றுபொருள்கூறினும் அமை
யும். இவ்வுரைப்படி 'ஆக' என்னும் செயவென்னெச்சம்
'வழங்கு' என்னும் வினைத் தொகையைக்கொண்டு முடிந்
தது. 'புலன்' - ஆகுபெயர். இங்கு 'இடம்' என்பது
அவஸ்தை என்னும் பொருளது. (கூ0)

சீவ சொப்பனம்.

(91) புரண மாகிய புறம்புள புலன்கெட வந்தக்
கரண மியாவையும் வழங்கிடங் கனவெனக் கண்டேன்.

இ-ள்.—புறம்பு=பாகியத்தில், உள=உள்ள, புரண
மாகிய=சம்பூர்ணமாகிய, புலன்=கரணங்கள், கெட=
(அவித்தையில்) இலீனமாக, அந்தக்கரணம் யாவையும்=
(மனமுதலிய) அந்தக்கரண மனைத்தும், வழங்கிடம்=(சாக்
கிரவாசனையினாற் கற்பிக்கப்பட்ட அஸ்திரவிஷயங்களோடு
பொருந்தித் தத்தம்) விவகாரங்களைச் செய்யும் அவஸ்தை
யை, கனவென=(சீவ) சொப்பனமென, கண்டேன்=
(யான்) அறிந்தேன்; (எ-று.)



'புரணமாகிய' என்பதற்குச் 'சப்தாதி விஷயங்களை
விளக்கிய கரணங்களுள் என்று பொரு ளுரைப்பினும்
அமையும். இவ்வுரைப்படி 'புரணமாகிய' என்பது வினை
யாலணையும் பெயர்; பிறவினைப் பொருளில் வந்தது. மற்
றவை முன்னுரைத்தபடி கொள்க. (கூக)

சீவ சுழுத்தி.

(92) மரண மாகிய தசையிது வெனும்படி மனுதி
கரண மியாவையு மிறந்துள சுழுத்தியுங் கண்டேன்.

இ-ள்—மரணமாகிய=மரணம்போன்ற, தசை-காலம்
இது எனும்படி=இவ்வவஸ்தை என்று யாவருங் கூறும்
படி, மனுதிகரணம் யாவையும்=மனமுதலிய சர்வகரணங்
களும், இறந்துள=(அவித்தையின்கண்) இலீனபாவத்தை
அடைந்துள்ள, சுழுத்தியும்=(சீவ) சுழுத்தியையும், கண்
டேன்=(யான்) அறிந்தேன்; (எ-று.)

நனவில் பதினுன்கு திரிபுடிகளால், விவகாரம் நிகழ்வ
தையும், உறக்கத்தில் இவற்றின் விவகார மில்லாமையை
யும் உய்த்துணர்க. பதினுன்கு திரிபுடிகளின் விளக்கத்தை
விசாரசாகர முதலியநூல்களிற் காண்க. மூன்றவத்தை
களின் இலக்கணம் 80-வது செய்யுளி னுரையிற் பார்க்க.

மரணவத்தை-இவ்வுடற்குப் போகத்தைப் பயக்கும்
வினைகளி னொழிவாற் சாமானியம், விசேடம் எனப்படும்
உடற்பற்றிரண்டும் நீங்க, இனிவரும் அமரர் முதலியோர்
உடல்களைப் பெறும்வரையிலுமுள்ள பத்தொன்பது தத்து
வங்களின் பிண்ட பாவ அவத்தை. நான்மனுடன், நான்
அந்தணன் எனப்படும் உடற்பற்றை விசேடவுடற்பற்றென்
பர்; இது நனவு கனவுகளில் உண்டு; சுழுத்தியில் இல்லை;
ஆனுல், நான் நானெனப்படும் உடற்பற்றைச் சாமானிய

வுடற்பற் றென்பர் ; இது சுழுத்தியிலுண்டு. இதுவு மில்லை யாயின், மரணவத்தை யுண்டாம்; சுழுத்தியினின்றும் புருடன் எழான். எழுதலாற் சாமானிய வுடற்பற்று அதில் அனுமிக்கப்படுகிறது. எனவே, விசேட வுடற்பற்று மரணவத்தையிலும், சுழுத்திய வத்தையிலும் இல்லாமையைக் கொண்டு இங்கு, 'மரணமாகிய தசையிது வெனும்படி' என்று உறக்கத்திற் குவமானங் கூறப்பட்டது. "உறங்குவது போலுஞ் சாக்கா டுறங்கி,விழிப்பது போலும் பிறப்பு" என்று தெய்வப்புலவர் கூறுவதிங் குணரத்தக்கது. தசை- நிலைமை. 'மரணமாகிய' என்பதில் ஆக்கச்சொல் உவமப் பொருள் குறித்துநின்றது. 'சுழுத்தியும்' என்பதில் உம்மை இறந்தது தழீஇயது. (கூஉ)

சீவ துரியம்.

(93) எஞ்ச லின்றியெக் கரணமு மிறந்திருண் டிருந்த
துஞ்ச லங்குணர் போதமாந் துரியமுங் கண்டேன்.

இ-ள்.—எஞ்சல் இன்றி=குறைவின்றி, எக்கரணமும்=(அகக்கரணம்,புறக்கரணம் ஆகிய)எக்கரணங்களும் இறந்து=(அவித்தையின்கண்) ஒடுங்கி, இருண்டு இருந்த =அந்தகாரமயமாயிருந்த, துஞ்சல்=அச்சுழுத்தி யவஸ்தையை, அங்கு=அவ் வவஸ்தையில், உணர்=அறிந்து கொண்டிருக்கின்ற, போதம் ஆம்=சேதனரூபப் பிரத்ய காத்மாவை உணர்வதாகிய, துரியமும்=(சீவ) துரியத்தையும், கண்டேன்=(யான்) அறிந்தேன்; (எ-று.)

சீவசுழுத்தியை அறிந்துகொண் டிருக்கும் பிரத்ய காத்மாவின் அசங்கத்வாதி இலக்கணங்களைச் சிந்திப்பதாகிய விருத்தியோடு கூடிய அவஸ்தை சீவதுரியம் என்பதாம்.



நனவு கனவுகளில் மனமுதலிய பிரகாசங்கள் இருத்தலின் சேதன சொரூபம் அதிகாரிக்கு நன்ருய் விளங்காதெனக்கருதி அதனைச் சுழுத்தியில்வைத்து விளக்கினர் ஆசிரியர். 'உணர்போதம்' என்பது ஆன்மாவின் வடிவமாம்; குணமன்று. இங்கு "வெம்மையைவிட்டுத் தீயொருபோது மிருப்பதில்லை ; அதனால், வெம்மைதீயின் வடிவமாம். அதுபோல, உணர்வைவிட்டு ஆன்மா வொருபோது மிருப்பதில்லை; அதனல், உணர்வு ஆன்மாவின் வடிவாம். போக்கு வரவுடையது குணம் ; வெம்மையும், உணர்வும் போக்கு வரவுடையவையல்ல; ஆதலால், அவைமுறையே தீயின் வடிவமும், ஆன்மாவின் வடிவமுமாம்'' என்று விசாரசாகரங் கூறுவதுணர்க. இங்குத் 'துரியம்' என்பது அவஸ்தையை. (கூங)

ஈஸ்வர சாக்கிரம்.

(94) துரிய மாகிய போதமோர் துளக்கமற் றனைத்தின்
கரிய தாயிருந் திடம்பர னனவெனக் கண்டேன்.

இ-ள்.—துரியமாகிய போதம்=(சீவ) துரியத்தில் விளங்குவதாகிய சேதனரூபப் பிரத்ய காத்மாவானது, ஓர் துளக்கம் அற்று=யாதொரு சலனமுமின்றி, அனைத்தின் கரியதாய் இருந்த இடம்=சர்வப் பிரபஞ்சத்திற்கும் சாக்ஷி ரூபமாக உள்ளதை உணர்ந்த அவஸ்தையை, பரன் நனவு என=ஈஸ்வர சாக்கிரமென்று, கண்டேன்=(யான்) அறிந்தேன்;

வியஷ்டி சங்காதங்களுக்குச் சாக்ஷிரூப பிரத்ய காத்மாவாகிய நான், சமஷ்டி சங்காதங்களுக்கும் சாக்ஷிரூபப் பிரஹ்மமாக இருக்கின்றேன் என்னும் விருத்தியோடு

கூடிய அவஸ்தை. ஈஸ்வர சாக்கிரம் என்பதாம். சமஷ்டி
சங்காதம்-சர்வப் பிரபஞ்சம்.

(கூச)

ஈஸ்வர சொப்பனம்.

(95) புணர்ந்த விச்சகத் தொழித்துணர்போதமாந்தனையே
யுணர்ந்த மற்றது பரன்கன வெனும்படியுணர்ந்தேன்.

இ-ள்.—புணர்ந்த=பொருந்தியுள்ள, இச்சகத்தொழி
த்து = இந்தச் சர்வப் பிரபஞ்சத்திற்கும் சாக்ஷிரூபப்
பிரஹ்மமாக நானிருக்கின்றேன் என்னும் பாவனையை
விடுத்து, உணர்போதம் ஆம் தனையே=சாக்ஷிரூப சேதன
மாகிய தன்னையே, உணர்ந்த அது=அறிந்துநின்ற அவ்
வவஸ்தையை, பரன் கனவு எனும்படி=ஈஸ்வர சொப்பன
மென்று சொல்லும்படி, உணர்ந்தேன்=(யான்) உணர்ந்
தேன்; (எ-று.)

யான் சர்வசாக்ஷி என்னும் பாவனையைவிட்டு யான்
சாக்ஷி என்னும் பாவனையை யுடையநிலை (அவஸ்தை)
ஈசுவர சொப்பன மென்பதாம். இதில் சர்வசாக்ஷி என்
னும் ஒரு பாவனையில் சர்வம் என்னும் அம்ஸம் நீங்கிற்று.
சர்வசாக்ஷிநிலை ஈஸ்வரசாக்கிரம்; சர்வம் என்பதை விட்டு
சாக்ஷியாய் நிற்குந்நிலை ஈஸ்வர சொப்பனம் என்க. புணர்
ந்த-(வியஷ்டி சங்காதங்களுக்குச் சாக்ஷியாகிய யான் சம
ஷ்டி சங்காதங்களுக்கும் சாக்ஷிரூபப் பிரஹ்மமா இருக்கின்
றேன் என்னும் பாவனையாகிய ஈஸ்வரசாக்கிரத்தில்) பொரு
ந்தியுள்ள, இச்சகத்து ஒழித்து=இந்தச் சமஷ்டி சங்காத
ரூபமான பிரபஞ்சத்தை நீக்கி, என்று பொருள்பண்ணு
வதுநேர். மற்று அசை. ஏகாரம் பிரிநிலைப் பொருளது.



ஈஸ்வர சுழுத்தி.

(96) சான்று சாக்கிய மிறந்திடத் தானிருந் தமையும்
தோன்றுருவிடம்பரன்சுழுத்தியதெனத்துணிந்தேன்

இ-ள்.—சாக்கியம் சான்று இறந்திட=சாக்ஷியரூப
சர்வப்பிரபஞ்சத்திற்கும் சாக்ஷிரூபப் பிரஹ்மம் நான் என்
னும் ஈஸ்வரசாக்கிரம் நசிக்க, தான் இருந்தமையும்=
(சாக்ஷி ரூபப்பிரஹ்மமாக நான் இருக்கிறேன் என்று)
தான் இருந்த ஈஸ்வர சொப்பனமும், தோன்றுருவிடம்=
தோன்றுததாகிய அவஸ்தையை, பரன்சுழுத்தியதென=
ஈஸ்வர சுழுத்தி என்று, துணிந்தேன்=(நான்) நிச்சயித்
தேன்; (எ-று.)

யான் சாக்ஷி என்னும் பாவனையும் விளங்காத அவஸ்
தை ஈஸ்வர சுழுத்தி என்பதாம். இஃது * அத்துவித
பாவனுரூப நிர்விகற்பசமாதி; இதில், பாவனுரூபவிருத்தி
அஞ்ஞாதமா யிருக்கிறது. ஈஸ்வரசாக்கிர முதலிய மூன்ற
வத்தைகளிலும் பாவனுரூப விருத்திகள் † பாவனுரூபப்
பிரஹ்மத்தை விஷயஞ் செய்யுமென்க.

சாக்ஷி(சான்று) - விகாரமற்று உதாசீனமாயிருந்து
புத்தி முதலியவற்றை விளக்குஞ்சைதன்னியம்; அஃதா
வது, பிரமாதா (அந்தக்கரண விசிட்டசைதன்னியம்), பிர
மாணம்(பிரமாஞானத்திற்குக் கருவியாயுள்ளது), பிரமே
யம்(பிரமாஞானத்திற்குவிஷயம்)முதலிய யாவையும் விளக்

---

* அத்துவிதப் பிரஹ்மத்தின் ஆகாரமான அந்தக்கரணத்தி
னது அஞ்ஞாத விருத்தியோடு கூடிய நிர்விகற்ப சமாதியினை
அத்துவித பாவனுரூப நிர்விகற்ப சமாதி என்பர்.

† மனோமயப் பிரஹ்மம்.

11

குவதென்பதாம். உலகின்கண் வாதிப் பிரதிவாதிகட்கு வேறானவனும், அவ்விருவரது கக்ஷிகளை நன்கு அறிபவனும், பக்ஷபாதமற்றவனுமாகிய புருஷன் சாக்ஷியெனப்படுவன். அதுபோற் பக்ஷபாதமின்றிப் புத்தி முதலியவனைத்தையும் விளக்குஞ் சைதன்னியம் சாக்ஷியெனப்படும். இதற்கு விடயமாகும் உலகனைத்தும் சாக்ஷிய (சாக்கிய) மென்பர்.

"அஞ்ஞானியின் உள்ளத்திற் சாக்ஷ்யமுண்டு. விவகாரத்தில் மூழ்கிய ஞானியின் உள்ளத்திற் சாக்ஷியுண்டு; சமாதியுடையோன் உள்ளத்தில் அவ்விரண்டுமில்லை. சாக்ஷ்யத்திற் பற்றுள்ளோன் அவாவுடையவனாய்ப் பிறவித்துன்பங்களைப் பெறுவன்; சாக்ஷியிற்பற்றுள்ளோன் அவாவற்றவனாய் வீடுபேற்றை யுறுவன்; இவ்விரண்டிலும் பற்றற்றவன் வீடுபேற்றை யுறுவதோடு சீவன்முத்திவிலக்ஷணானந்தத்தையும் அடைவன்" என்று ஆன்றோர் கூறுவதிங்குக்காண்க. 'இறந்திட' என்னும் வினைஎச்சம் 'இருந்தமை' என்னும் இறந்தகாலத்தொழிற்பெயர் கொண்டுமுடிந்தது. உம்மை உயர்வு சிறப்பு. 'தோன்றா' என்பது ஈறுகெட்ட எதிர்மறைப்பெயரெச்சம். 'அது' பகுதிப்பொருள் விகுதி.

ஈஸ்வர துரியம்.

(97) மரித்ததென்றுணர்ந்துரைத்ததும்மரித்திடந்தனிலே
தெரித்தபோதமேதது பரன்றுரியமாய்த்தெளிந்தேன்

இ-ள்.—மரித்தது என்று = ஈஸ்வரசாக்கிரம் இறந்ததென்று, உணர்ந்து = அறிந்து, உரைத்ததும் = கூறத்தக்கதாகிய ஈஸ்வர சொப்பனமும், மரித்திடந்தனில் = இறந்த ஈஸ்வர சுழுத்தியவத்தையில், தெரித்த போதம் ஏது



அது = (அச்சுழுத்தியை) விளக்குவதாகிய சேதனத்தை உணரும் அவஸ்தை எதுவோ அதனை, பரன் துரியமாய்த் தெளிந்தேன் = ஈஸ்வர துரியமாய்த்தெளிவுற்றேன்; (எ-று.)

94,95,96, வது செய்யுட்களிற் பெறப்பட்ட பொருள் முற்றும் இச்செய்யுளில் அடங்கியிருத்தலின் இவ்வாறு பொருள் கூறப்பட்டது. 'தெரித்த' என்பது தெரிந்த என்பதின் பிறவினை. மரித்த+இடம்; மரித்திடம். அகரம் தொகுத்தல். "புகழ்புரிந்து" என்புழிப்போல். ஏகாரம் அசை. பரசுழுத்தியை விளக்குஞ் சேதனாகார விருத்தியோடு கூடிய அவஸ்தை பரதுரியமென்பதாம். இவ்வவஸ்தையிற் பாவனாரூப விருத்தியில்லை; ஆனால், கூடஸ்தப்பிரஹ்மங்களின் அபேதசாக்ஷாத்காரமுண்டு; அது அடுத்த செய்யுளிற் றெளிவாம். ஈஸ்வர சாக்கிர முதலிய மூன்றவத்தைகளிலும் சீவதுரியமாகியசாக்ஷியைப்பிரஹ்மரூபமாய்க் கருதியபோது சீவதுரியமே பிரஹ்மரூபம் என ஏகத்துவம் பானமாகவில்லை; ஆனால், ஆங்குள்ள பிரஹ்மாகார விருத்தி பரோக்ஷமாம். ஈஸ்வர துரியமாகிய நான்காமவத்தையில் ஏகத்துவம் பானமாயினும் ஐயந்திரிபறப் பான மாயிற்றில்லை. அதனால், இவ்வவத்தைகள் பரோக்ஷமாயுள்ள பர (ஈஸ்வர) சப்தத்தாற் கூறப்பட்டன. (கஎ)

சிவ சாக்கிரம்.

(98) இறையெனும்பொருட்டுரியமேயென்னையாண்டவனே
மறையினந்தநற்பதப்பொருணானவெனமதித்தேன்.

இ-ள்.—என்னை ஆண்டவனே = (நாயினுங்கடையேனாகிய) அடியேனை தடுத்தாட்கொண்டருளிய குருமூர்த்

தியே!, இறை எனும் பொருள்துரியமே = ஈஸ்வர துரியத்தையே, மறையின் அந்தம் = வேதத்தின் முடிவாகிய, நற்பதப்பொருள் நனவு என = நல்லஅசிபதத்தின் அருத்தமான சிவத்தினது சாக்கிரமென்று, மதித்தேன் = நிச்சயித்தேன்; (எ-று.)

இங்குப் பரதுரியத்தையே சிவசாக்கிரமென்றூர் பரதுரியத்தில் ஏகத்வ வடிவசிவம் விளங்கலின். பரதுரியத்தில் ஏகத்வ வடிவ சிவத்தின் ஞானமிருப்பினும் அது திடமற்றதாம். சிவசாக்கிரத்தில் அந்த ஞானம் திடமுற்றதாம். இத்துணேயே இவ்விரு அவஸ்தைகட்கும் வேறுபாடாம். 'துரியமே நனவு' என இயையும். தத்,துவம், அசி என்பவற்றுள் 'அசிபதமே' பேதப் பிராந்தியைப்போக்கலின், மிகச்சிறந்ததென்பான் 'நற்பத' மென்றூர். 'துரியமே' என்பதிலுள்ள ஏகாரம் தேற்றம். 'ஆண்டவனே' என்பது விளி. 'பொருள் நனவு' என்பது ஆரும் வேற்றுமைத் தொகை. பெரிதும் வேறுபாடின்மையின் ஈஸ்வர துரியமே சிவசாக்கிரமென்று கூறப்பட்டது. நற்பதப்பொருள்—சிவம்(பேதமற்ற அகண்டசைதன்னியம்). இவ்வவத்தையிலும், இனிக்கூறப்படும் அவத்தைகளிலும் சிவசாக்ஷியின் கண்ணுண்டாம் பரிச்சின்னத்வப்பிராந்தியும், ஈஸ்வர சாக்ஷியின்கண்ணுண்டாம் பரோக்ஷத்வப் பிராந்தியும், அனுத்மத்வப் பிராந்தியும் இல்லையாதலாலும் அவ்விரண்டிற்கும் உள்ள ஏகத்துவம் நன்ருய் விளங்குதலாலும் இவ்வவத்தைகள் நற்பதப் பொருளாய சிவசப்தத்தாற் கூறப்பட்டன. (கூஅ)

சிவ சொப்பனம்.

(99) பண்டை விச்சுவ வாதனைப் பழுதுபோய் முழுதுங்
கண்ட கண்ணதே யாகிய கனவதுங் கண்டேன்.



இ-ள்.—பண்டை = முன்னிருந்த, விச்சுவ வாதனை = சகத்வாசனையாகிய, பழுதுபோய் = குற்றம் நீங்க, கண்ட முழுதும் = காணப்பட்ட சர்வதிருசியங்களையும், கண்ணதேயாகிய = திருக்குருபமாய் அறிந்ததாகிய, கனவதும் = (சிவ) சொப்பனத்தையுங், கண்டேன் = பார்த்தேன்;

இரச்சுவடிவ அதிஷ்டானத்தை யறிந்தபின்னர் இரச்சுவிற்றேன்றிய அரவு அவ்வதிஷ்டான இரச்சுவடிவமே என்று அறிவதுபோல, பிரத்யகபின்ன பிரஹ்மரூபமாகிய தன்னிடத்தில் அத்யஸ்தமாகிய சமட்டி வியட்டி வடிவ சர்வப் பிரபஞ்சத்தையும் அதிஷ்டான பிரத்யகபின்ன பிரஹ்ம சாக்ஷாத்காரத்தின் பின்னர் அவ்வதிஷ்டான திருக்குவடிவ பிரஹ்மமாய் அறியும் விருத்தியின் நிலை சிவ சொப்பனம் ஆம்.

சிவசாக்கிரத்தில் கூடஸ்தப் பிரஹ்மங்களின் ஐக்கிய அனுபவமுண்டு. சிவசொப்பனத்தில் அதிஷ்டான அத்யஸ்தங்களின் ஐக்கிய அனுபவமுண்டு. இத்துணையே இவ்விரண்டிற்கும் வேறுபாடு. கூடஸ்தனுக்குப் பிரஹ்மத்தோடு முக்கிய * சாமானாதிகரணியமும், அத்தியஸ்தத்

* இங்குப் பரஸ்பரம் அபின்னமாகிய இரண்டு பதார்த்தங்களின் அபின்னத்தன்மை வடிவ சம்பந்தம் சாமானாதி கரணியமெனப்படும். அது முக்கிய சாமானாதி கரணியம், பாத சாமானாதி கரணியம் என்னும் வேறுபாட்டால் இருவகைப்படும்.

எந்த வஸ்துவிற்கு எதனோடு எப்போதும் அபேதமிருக்கின்றதோ அந்த வஸ்துவிற்கு அதனோடு முக்கிய சாமானாதி கரணியம் சொல்லப்படும். குடாகாசத்திற்கு மகா காசத்தோடு முக்கிய சாமானாதி கரணிய மிருத்தற் போலாம்.

திற்கு அதிஷ்டானத்தோடு பாதசாமானாதிகரணியமும் உண்டென்க.

இங்கு 'விச்சுவ வாதனை' என்றது முன்னர் ஆசிரியர் உபதேசத்தால் உடல்முதல் சித்தமீறாயுள்ள விசுவத்தைத் (உலகத்தை) தன்னினும் வேறென்று உணர்ந்ததனாலாகிய பேதவாசனையை. 'கண்ணது' 'கனவது' என்பவற்றில் 'அது' பகுதிப் பொருள் விகுதி. ஏகாரம் பிரிநிலை. உம்மை இறந்தது தழீஇயது. 'பழுது' என்னும் உரிச்சொல் குற்றமென்னும் பொருளையும், 'முழுதும்' என்னும் உரிச்சொல் எஞ்சாமைப்பொருளையும் உணர்த்திநின்றன. 'போய்' என்பது செயவெனெச்சத்திரிபு. (௯௯)

சிவ சுழுத்தி.

(100) காட்சி யாவையுங் கண்ணதா யக்கணுங் கரைந்த
மாட்சி யாகிய வகோசர முறக்கமாய் மதித்தேன்.

இ-ள்.—காட்சி யாவையும்=திருசியங்களனைத்தையும், கண்ணதாய்=திருக்குரூபமாய் (உணர), அக்கணும்=அந்தத்திருக்ரூபஉணர்ச்சியும், கரைந்த=நசித்த, மாட்சியாகிய=மாட்சிமை பொருந்திய, அகோசரம்=(வாக்கு மனங்கட்கு) எட்டாத நிலைமையை, உறக்கமாய்=(சிவ) சுழுத்தி என்பதாக, மதித்தேன்=நிச்சயித்தேன்; (எ-று.)

திருசியங்களைத் திருக்கு வடிவமாய்க் கண்ட விருத்தியும் இறந்தநிலை சிவசுழுத்தி. இங்குத் திருக்குரூப விருத்

எந்த வஸ்துவிற்குப் பாதமுண்டாய் எதனோடு அபேதமுண்டாகின்றதோ, அந்த வஸ்துவிற்கு அதனோடு பாத சாமானாதி கரணியம் சொல்லப்படுகின்றது. பிரதிவிம்பத்திற்குப் பிம்பத்தோடு பாதசாமானாதி கரணியமிருத்தற் போலாம்.



தியின் நிவிர்த்திக்குக் கதகரேணுவிற்குப் போல, சாதனாந்தரத்தினபேக்ஷையின்றென்பதை உணர்த்த 'கரைந்த' எனத் தன்வினையாற் கூறினான் சசிவன்னன். இஃது * அத்துவித அவஸ்தான ரூபநிர்விகற்ப சமாதியேயாம்.

அகோசரம்-மன முதலியவற்றிற்கு விடயமாகாமை. அ-எதிர்மறை. கோசரம்-விடயம். 'ஆய்' எனும் வினையெச்சம் 'கரைந்த' எனும் எச்சத்தோடும், 'கரைந்த' என்னும் பெயரெச்சம் 'அகோசரம்' எனும் பெயரோடும் சென்றியைந்தன. (க00)

சிவ துரியம்.

(101) அருந்த வாமறை யந்தமா மகோசரந் தனினீ
யிருந்த வாறறி வித்தவா றெங்ஙன மிசைப்பேன்.

இ-ள்.—அருந்தவா=அரிய தவத்தை யுடையவரே!, மறை அந்தமாம்=வேதத்தின் முடிவாகிய, அகோசரந் தனில்=(வாக்கிற்கும் மனதிற்கும்) எட்டாத சிவதுரிய நிலையில், நீ இருந்தவாறு=தேவரீர் இருந்த விதத்தையும், அறிவித்தவாறு=அடியேற்கு அறிவித்த விதத்தையும், எங்ஙனம் இசைப்பேன்=எவ்வாறு கூறுவேன்; (எ-று.)

முற்கூறிய அவத்தைகளைப்போன்று இவ்வவத்தையை விசேடித்துக்கூற வியலாமையின், 'எங்ஙன மிசைப்பேன்'

* கொல்லுலையிற் காய்ச்சப்பட்ட இரும்பின்கண் விட்ட நீர்த்துளிபோல், அத்துவித பாவனாரூப நிர்விகற்ப சமாதியின் அப்பியாச மிகுதிப்பாட்டால் அத்தியந்தப் பிரகாசமான பிரஹ்மத்தின் ஆகாரமான அஞ்ஞாத விருத்தியும் சாந்தமாய் விடுகின்றது; ஆதலால், விருத்தியில்லாததான நிர்விகற்ப சமாதியினை அத்துவித அவஸ்தானரூப நிர்விகற்ப சமாதி என்பர்.

என்றான். துரியத்தில் அவ்விருத்தி இருந்ததென்றும் இறந்ததென்றும் விவகரித்தற்கில்லை என்க. ‘அருந்தவா’ என்பது விளி. இருந்தவாறு என்பதன் பின்னும், அறிவித்தவாறு என்பதன் பின்னும் எண்ணும்மைகள் தொக்கன. (௧௦௧)

‘சீவசாக்கிரமுதலிய சர்வ அவஸ்தைகளிலும், விளங்கும் பொருள்கள் நீரே, யாதலால், உமது லீலையைக் கூறயான் அறிந்திலேன்’ எனச் சசிவர்ணன் கூறல்.

(102) எம்பி ரானிடந் தொறுமிடந் தொறுமது வதுவாய்த்
தம்பி ரானடஞ் செயும்வகை சாற்றுமா றறியேன்.

இ-ள்.—தம்பிரான்=திருக்கூட்டத் தலைவரும், எம்பிரான்=எம திறைவருமாய தேவரீர், இடந்தொறும்=(சீவசாக்கிரமுதல் சிவதுரிய மீறாயுள்ள) அவத்தைகள்தோறும், அது அதுவாய்=அந்தந்த அவஸ்தைகளுக்கேற்ற பொருள் வடிவமாய், நடஞ்செயும் வகை=கிரீடை செய்கின்ற விதத்தைச், சாற்றுமாறு=கூறுகின்றவிதம், அறியேன்=உணரேன்; (எ-று.)

அவ்வவ்வவஸ்தையில் விளங்கும் பொருள்கள்:—சாக்கிரத்தில் ஸ்திர விஷயம், சொப்பனத்தில் அஸ்திர விஷயம், சுழுத்தியில் மூலாஞ்ஞான விஷயம், துரியத்தில் துவம்பத லக்ஷியம், ;பரசாக்கிர முதலிய அவஸ்தைகளில் பாவனா வடிவதத்பத லக்ஷியம், சிவசாக்கிர முதலிய அவஸ்தைகளில் அகண்டசிவம் எனக் காண்க. கிரீடை - விளையாட்டு.

இடம்=அவத்தை;நிலைமை.தொறும்-இடப்பன்மைப் பொருளையும், காலப் பன்மைப் பொருளையும், தொழில் பயில்வுப் பொருளையும் தருமோரிடைச் சொல். இது குருவை வியந்தது. (௧௦௨)



சசிவர்ணன் குரு சந்நிதானத்தில் தன் அனுபவத்தைக் கூறி ஆசிரியர்செய்த வுபகாரத்திற்குக் கைம்மாறு காணே னென்றல்.

(103) ஆவியேயடியேன்செய் கைம்மாறுனக்கென்னெனிற்
பாவி யேனது தானுமுன் னுடையதாம் பண்டே.

இ-ள்.—ஆவியே=எனது பிராணபூதனான சுவாமின்!, அடியேன் செய்கைம்மாறு=(முத்தியையளித்த பேருபகாரத்திற்கு) அடியேன் செய்கின்ற பிரதியுபகாரம், உனக்கு என் எனில்=தேவரீருக்கு என்னவென்றால், பண்டே=(என்னை யடிமைகொண்ட) அன்றே, பாவியேனது தானும்=பாவியாகிய எனதுடற்பொருளாவிமூன்றும்,உன்னுடையதாம்=உம்முடையனவாம்; (ஆதலால் இப்போது செய்யத் தகுந்த கைம்மாறு ஒன்றையும் கண்டிலேன்);

ஆசிரியர் பிறவாநெறியை அளித்ததற்குச் சீடன்குரு தக்ஷிணை கொடுப்பது தொன்றுதொட்ட மரபென்பான் ‘அடியேன் செய் கைம்மாறுனக் கென்னெனில்’ என்றும், மெய்ப்பொருள், பொய்ப்பொருள் என்னும் இரண்டனுள் மெய்ப்பொருள் (முத்திப்பேறு) உம் அருளாற் பெற்றமையானும், பொய்ப் பொருளாகிய உடல் முதலியன அதற்கொப்பாகாமையானும், அடிமைகொண்டவன்றே அவை உம்முடையவாகவே ஆயினமையானும் கைம்மாறொன்றுங் காணேனென்பான் ‘பாவியேனது தானுமுன் னுடையதாம் பண்டே’ என்றும் கூறினான்.

“அன்றே யென்ற னாவியு முடலு
முடைமை யெல்லாமுங்
குன்றே யனையா யென்னையாட் கொண்ட
போதே கொண்டிலையோ

இன்றே ரிடையூ றெனக்குண்டோ எண்டோண்
முக்க ணெம்மானே
நன்றே செய்வாய் பிழைசெய்வாய் நானோ
இதற்கு நாயகமே"

என்று மாணிக்கவாசக சுவாமிகள் கூறிய திங்குணர்க. ()

எனது தேகமுள்ளளவும் தேவரீரது அடியார்களுக்குச்
செய்யும் சேவையே கைம்மாறாகக் கொள்ளல்
வேண்டுமெனப் பிரார்த்தித்தல்.

(104) ஆவல் செய்தென தாக்கையுள் ளளவுநின் னடியார்க்
கேவல் செய்வதே யன்றிமற் றொன்றுநா னறியேன்.

இ-ள்.—எனது ஆக்கை உ.ள்ள அளவும் = அடியேனது உடலிருக்குமளவும், நின் அடியார்க்கு = தேவரீரது தொண்டர்களுக்கு, ஆவல்செய்து = அன்புகொண்டு, ஏவல் செய்வதே அன்றி = ஏவற்பணி விடைகளைச்செய்வதே (கைம்மாறு) அன்றி, மற்றொன்றும் = வேறொன்றையும் (கைம்மாறாக), நான் அறியேன் = நான் உணரேன். (ஆதலின் இதையே கைம்மாறாகக் கொள்ளல்வேண்டும்); (எ-று.)

உமதடியார்க் கடியனாய் எனதுடல் உள்ளளவும் அவர்களிட்ட குற்றேவல் செய்வதே கைம்மாறாகக் கொள்ளல் வேண்டு மென்பான் 'ஆக்கையுள் ளளவுநின் னடியார்க் கேவல் செய்வதேயன்றிமற்றொன்றுநா னறியேன்' என்று கூறினான்.

'பாவியேனது' என்பது துவ்விகுதியும் அகரச்சாரியையும் பெற்றுநின்ற குறிப்பு வினையாலணையும் பெயர். ஈண்டு 'அது' என்பது ஆறனுருபன்று. 'தான்' சாரியை. 'ஆக்கை' என்பதுயாக்கைஎன்பதன் மரூஉ. 'மற்று' என்பது பிறிது என்னும் பொருளது. உள்ள + அளவு; உள்ளளவு; அகரந் தொகுத்தல். 'செய்வது' என்பது எதிர்காலத்தொழிற்பெயர்.



சசிவர்ணன், குருமூர்த்தியின் பணிவிடையை
வியந்து கொண்டாடுதல்.

(105) இறவி லெப்பத மும்பெற வேண்டிலே னென்றும்
பிறவி வேண்டுவ னின்றிருப் பணிசெயப் பெறினே.

இ-ள்.—நின் திருப்பணி செய = தேவரீரது சிறந்த பணிவிடைகளைச்செய்ய, பெறின் = பெற்றால், இறவுஇல் = அழிவின்றிய, எப்பதமும் = எம் முத்தியையும், பெறவேண்டிலேன் = பெறவிரும்பேன்; என்றும் பிறவி வேண்டுவன் = எப்பொழுதும் பிறவியை விரும்புவேன்; (எ-று.)

'ஏவல்' 'பணி' என்பவை ஆத்தமுதலிய அருஞ்செயல்களை. உம்மை யிரண்டனுள் முன்னது உயர்வுசிறப்பு; பின்னது முற்று. 'பெறின்' என்பது செயினென்னும் வாய்பாட்டு வினைஎச்சம்; இது 'வேண்டுவன்' என்னும் வினைகொண்டு முடிந்தது. இங்குச் சசிவர்ணன் கூறியதுபோன்று,

* "தமர மிகுசமயச் சங்கேதஞ் சாரே
நமரும் பிறரு மெனநாடே—மமரருறை
நாடா தரிக்கிலே நாதன் பணியொழிய
வீடா தரிக்கிலேம் வேறு." என இந்நூலாசிரியரும் கூறியிருத்தல் உணரத்தக்கது. (க0ரு)

'இவ்வாறு குருவின் பணிவிடையைப் புகழ்ந்து கொண்டாடிச்
சசிவர்ணன் பின் யாது காரியம் செய்தான்?' என்னும்
பேயின் சங்கைக்குத் தேவி கூறல்.

வேறு.

106) என்றுபல கால்விழு மெழுந்தொழு † மழும்புரிவ
தென்னை யினியா
னின்றுபல வாகவுரை செய்தவவ னன்பினொடு
நெஞ்சு ருகியே.

* அடங்கன்முறை வெண்பாவந்தாதி கக-வது செய்யுள்.

† 'அழும்புரியும்' என்றும் பாடம். சில சுவடிகளில் 'அழும்புரிவது' என்றும் பாடம் உளது. 'அழும்புரியும்' என்றபாடத்தை

இ-ள்.—நின்று=(ஆசிரியர் சந்நிதியில்) நின்று, பலவாக உரைசெய்த = இவ்வாறு பலவிதமாகக் கூறிய, அவன் = அச் சசிவர்ணன், அன்பினொடு = அன்பினால், நெஞ்சு உருகி=மனமுருகி, இனி=மேல், யான் புரிவது என்னை =யான் செய்வது என்னை? (ஒன்றுமில்லை), என்று= என்று கூறி, பலகால் விழும்=பலவிசை நமஸ்கரிப்பன்;

அநுசரித்து இச் செய்யுட்கு ஆன்றோர் இவ்வாறு பொருளுரைப்பர்:—

என்று - என்று இவ்வாறு கூறி, அவன் - அச்சசிவர்ணன், நின்று - (குரு சந்நிதானத்தில்) நின்று, என்னை - (யாதோர் அறத்தினுஞ் சேராத அபக்குவனாகிய) என்னை, இனி யான் (என்று) - இவனும் ஓர் பக்குவனும் என்று திருவுளத்திற் கருதி (எனது குருமூர்த்தியானவர்), பலவாக - (சுருதி, யுக்தி, அநுபவங்களால்) நானாவிதமாக, உரைசெய்த - உபதேசித்து ஞானவாயிலாக வெனது சர்வ துக்கங்களையும் நிவிர்த்தி செய்தனரே, என்று-என்று கருதி, அன்பினொடு-அன்பினால், நெஞ்சுருகி-மனமானது நெக்குவிட்டுருகி, பலகால் விழும் - பன்முறை விழுந்து நமஸ்கரிப்பவனும், எழும் - மீண்டும் எழுந்திருப்பவனும், தொழும் - சிரசிற் கையைக் குவிப்பவனும், அழும் - ஆனந்தக் கண்ணீரைச் சொரிபவனும், புரியும் - துதிப்பவனும் ஆயினன்;

'என்று'என்பது சொல்லெச்சம்என்றும்,'உரைசெய்த'என்றவிடத்து ஈறு தொக்கது என்றும் கூறுவர். எதிர்மறைப் பெயரெச்சம், எதிர்மறை வினைஎச்சம் என்றவிடங்களில் முறையே 'உண்ணாக் குதிரை' என்றும் 'உண்ணாக் கிடந்தன' என்றும் ஈறு கெட்டு வருவதுண்டு; 'உண்ணாது' என்ற எதிர்மறை ஒன்றன்பால் முற்றும் சில விடத்து உண்ணா எனத் தொகுத்தல் விகாரப்பட்டுவரும்; வியங்கோள் வினைமுற்று முதலியவையும் ஈறு கெட்டு வருவதுண்டு. 'உரை செய்தனர்' என்பது 'உரை செய்த' என்று ஈறு தொக்கு வருதற்கு விதி ஆராய்க.



எழும்=எழுந்து நிற்பன்; தொழும்=மீண்டும் நமஸ்கரிப்பன்; அழும்=அழுவன்: (எ-று.)

அன்பு - அருட்குமுதலாகி மனத்தினிகழு நேயமென்பர் நச்சினார்க்கினியர். பலகால் விழுதல்முதலியன அன்பின்செயல்கள். இவையெல்லாந் தத்தம் மனத்தினிகழ்ச்சியை வெளிப்படுப்பனவாகலின் மெய்ப்பாடெனப்பட்டன;

"நகையே யழுகை யிளிவரன் மருட்கை
யச்சம் பெருமிதம் வெகுளி யுவகையென்
றப்பா லெட்டே மெய்ப்பா டென்ப"

என்பதோத்தாதலின். அன்பின் செயலுக்கு உதாரணம்:- சரஸ்வதி அந்தாதி,

"தொழுவார் வலம்வருவார் துதிப்பார்தந்தொழின்மறந்து
விழுவா ரருமறை மெய்தெரிவா ரின்ப மெய்புளகித்
தழுவா ரினுங்கண்க ணீர்மல்குவா ரென்க ணுவதென்னை
வழுவாத செஞ்சொற் கலைமங்கை பாலன்பு வைத்தவரே."

எனவரும்; மற்றும் வருவனவற்றுற்காண்க. விழும், எழும், தொழும், அழும் என்ற செய்புமென்னும் வினைமுற்றுக்கள் படர்க்கை யாண்பாலில் வந்தன. 'ஒடு' என்னும் மூன்றனுருபு கருவிப்பொருளது. 'எவன்' என்னும் வினைக் குறிப்பு 'என்னை' என்றாயிற்று. (கoசு)

சீவன் முத்தித்தன்மையை அடைந்த சசிவர்ணனுக்குப் பிராரப்தக்ஷயத்தில் விதேகமுத்தியைக் கூறவேண்டியது அவசியமாயினும் சீவிதகாலத்தில் முத்தனாகவே யிருக்குமவனுக்கு மீண்டுமம் முத்தியையாம் கூறவேண்டுவ தில்லையெனத் தேவி கூறல்.

(107) எட்டிலறி வின்றியிறை தன்னிலறி வின்றியிவ்
வுடம்பி னுடனே
வீட்டினுறை வானையினி வீடுபெறு மென்பது
விளம்பு கிலமே.

இ-ள்.—எட்டில் அறிவு இன்றி = சாஸ்திர ஜன்னியபரோக்ஷ ஞானமுமின்றி, இறைதன்னில் அறிவு இன்றி = பிரஹ்மத்தின் சாக்ஷாத்காரரூப அபரோக்ஷ ஞானமுமின்றி, இவ்வுடம்பினுடனே = இத்தேகத்துடனே, வீட்டில் உறைவானே = (சர்வ துக்கநிவர்த்தி பரமானந்தப் பிராப்தி வடிவ) மோக்ஷத்தின்கண் ணிருக்குஞ் சசிவர்ணனே, இனி = (தேகம்நீங்கின) பிறகு, வீடுபெறும் என்பது = முத்தியைப் பெறுவன் என்பதை, விளம்புகிலம் = கூறுகின்றிலம்; எ-று.

அசத்வாபாதக (பிரஹ்மமில்லையென்னுந் தன்மையைச் சம்பாதிக்கும்) ஆவரணம் (மறைப்பு) நீங்குதற்பொருட்டுப் பரோக்ஷஞானமும், அபானுபாதக (பிரஹ்மம்விளங்கவில்லையென்னுந் தன்மையைச் சம்பாதிக்கும்) ஆவரணம் நீங்குதற்பொருட்டு அபரோக்ஷஞானமும் வேண்டுவனவாம். பிரஹ்மம் உண்டென்னுஞ்ஞானம் பரோக்ஷமெனவும், பிரஹ்மம் நானென்னுஞ் ஞானம் அபரோக்ஷமெனவும் உணர்க. குடத்தைக் கண்டவுடனே குடத்தினுவரணம் நீங்குவது போலப் பிரஹ்மத்தைக் கண்டவுடனே பிரஹ்மத்தை யிடமாகக்கொண்டு பிரஹ்மத்தையே மறைக்கு மியல்புடைய அஞ்ஞானமும், அதன் சத்தியாகிய அவ்விருவகையாவரணமும் சசிவர்ணன் நீங்கப்பெற்றமையான், பின்னும் பிரஹ்மாகார விருத்தியை அடைவதால் யாதொரு பயனுமின்மையானும்; அல்லது * கதகரேணுநியாயம்போலச் சமாதியின்

* தேற்றாங் கொட்டையின் பொடி நீரின் அழுக்கைப் போக்கித் தானும் நீங்கிவிடுகின்றது; தன்னை நீக்குவதற்கு வேறோர் சாதனம் வேண்டுவதில்லை. அதுபோல், பிரஹ்மஞானமும்அஞ்ஞானத்தைக்கெடுத்துத்தானும்நீங்கிவிடுகின்றது; தன்னை நீக்குவதற்கு வேறோர் சாதனம் வேண்டுவதில்லை என்பதாம்.



கண்ணுண்டாகிய பிரஹ்ம ஞானமும் காரியத்தோடு அஞ்ஞானத்தைக் கெடுத்துத் தானும் அழிந்துபோக, இவன் அகண்டைகரசப் பிரஹ்மமாத்திரமாய் விளங்குவதானும் "எட்டிலறிவின்றி யிறை தன்னிலறி வின்றி வீட்டினுறைவானே" என்றார். தத்துவஞானிக்கு எதுவும் வேண்டுவதில்லை என்பதற்கு உதாரணம்:-கைவல்யம்,

"கிளர்மக னேகேள் தத்துவ மறியார்
கேட்டல்செ யக்கடனே
தளர்வது சிந்தித் தலின்முயல் வார்சிலர்
சந்தே கங்களுளார்
தெளிதலி னிற்பார் விபரீ தப்பேய்
தீரா வாதனையோர்
வெளியுரு வாயறி வாய்நிறை வாயினர்
வேண்டுவ தொன்றுண்டோ."

என்றும், தத்துவஞானம் அஞ்ஞானத்தைக் கெடுத்துத் தானுங்கெடும் என்பதற்கு உதாரணம் கைவல்யம்,

"வீட தாம்பரி பூரண சொரூபத்தில்
விருத்திஞா னமுங்கூடிச்
சேட மாகினு லகண்டமா மனுபவ
சித்தியெப் படியென்றால்
சாடி நீர்மண்ணைப் பிரித்ததேற் றாம்பொடி
தானுமண் ணொடுமாயும்
ஊடி ஞானமு மறிவிலா மையைக்கெடுத்
தொக்கவே கெடுந்தானே."

என்றும் வருவனவற்றாற் காண்க. 'சீவன் முத்தியெனவும், விதேகமுத்தி யெனவும் முத்தி யிருவகைப்படும்; அவற்றுள், சீவன்முத்தியாவது சிரவணமுதலிய

வற்றுற்றோன்றின பிரஹ்ம சாக்ஷாத்காரமுடைய தத்துவ
ஞானிக்குச் சீவித அவத்தையிற் கருத்துருத்தன்மை முத
லிய பந்தத்தோற்றத்தின் நீக்கம். விதேகமுத்தியாவது
அகம் பிரஹ்மமென்னும் மெய்யுணர் வுள்ளவனுக்குப்
போகத்தால் ஊழ்வினைதேய எடுத்தவுடல் நாசமாதல்;
அவ்வாறன்றித்தற்போது இவ்வுடலிருக்க இனி ஒருவுடலை
யுண்டுபண்ணுத் தன்மையே விதேகமுத்தி யென்பசிலர்;
இது தத்துவஞான முண்டாம்பொழுதே யுண்டாகிறது;
ஏனெனின் தத்துவஞானத்தால் அஞ்ஞானம் நீங்கச் சஞ்
சிதவினை (பழவினை)யழிவுறும்; இவ்வினையிருப்பின் இனி
வரும் உடலை யுண்டுபண்ணும்; இது தத்துவஞானத்தா
லழிந்தமையின், வருமுடலை யுண்டுபண்ணுதாதலின் இவ்
விதேக முத்தியின் இலக்கணமும் யாதொருகுற்றமு மின்
றியதென்க. இத்தகைய சீவன்முத்தியும், விதேகமுத்தியும்
சசிவர்ணன் உடலுள்ளபோதே பெற்றுனுதலின் 'இனி
வீடுபெறுமென்பது விளம்புகிலமே' என்ருள்.

ஏடு=ஏட்டுப்புத்தகம்; ஆகுபெயர். 'ஏட்டில்' என்ப
தி லுள்ள'இல்'என்னும்ஐந்தனுருபு ஏதுப்பொருளது.இறை
தன்னிலறிவு=பிரஹ்மத்தைவிஷயஞ் செய்யுமறிவு. இங்கு
'இல்' வேற்றுமைமயக்கம். 'இன்றி' என்னும் வினையெச்ச
மிரண்டும் 'உறைவானை' என்னும் வினையாலணையும் பெயர்
கொண்டு முடிந்தன.

(கoஎ)

சசிவர்ணன் அடைந்த பிரஹ்மஞானத்தின் பிரபாவத்தைத்
தேவி கூறல்.

(104) வஞ்சவலி யானரகில் வீழ்பிதி ரந்நரகு
பாழ்பட மிகா
விஞ்சைவலி யாலடைய வேறினர் சுராதிபர்கண்
மேலு லகமே.



இ-ள்.—வஞ்சவலியால்=(சசிவர்ணன் பூர்வஞ்செய்த)
வஞ்சகத்தோடுகூடிய பாவகர்மத்தின் பலத்தினுல், நரகில்
வீழ்பிதிரர் அடைய=நரகத்தில் வீழ்ந்துள்ள அவனது
குலசம்பந்திகளாகிய பிதிர்க்கள் யாவரும், மிகா=குற்ற
மற்ற, விஞ்சைவலியால்=(இப்போது) சசிவர்ணன் அடை
ந்துள்ள பிரஹ்மஞானத்தின் பலத்தினுல், அந்நரகு பாழ்
பட=அந்நரகமானது சூனியபாவத்தை யடையும்படி,
சுராதிபர்கள் மேலுலகம்=தேவர்கள் தலைவராகிய இந்தி
ராதியருலகத்தை, ஏறினர்=அடைந்தார்கள்; (எ-று.)

இங்கு வடமொழிச் சூதசங்கிதை முத்திகண்டம்
சகூ, சஎ, சஅ-வது சுலோகங்களின் பொருள் (இவன்
(சசிவன்னன்)றந்தையும் என் பிரசாதத்தால், அதைக்
கேட்டு அவ்வியக்கத்தக்க குருபணிவிடையால் மெய்யுணர்
வடைந்து விரைவில் வீடுபெற்றுன்; இவனது பிதிரர்களும்,
இவன் பெற்றஞானவலியால் நரகினின்றும் வெளிப்போந்
தார்கள்; இவன்வம்சமும், தூய்மையடைந்தது; பூமகளும்
(பூமி) மிக்க புண்ணியமுடையவளானுள்; அவனுல் முன்ன
னுபவிக்கப்பட்ட காதற்புலைச்சியும் துறக்கம்பெற்றனள்;
இவனுடைய தீயநண்பர்களும், இவனது ஞானவன்மை
யாற்றுறக்கத்தை யெளிதிற்பெற்றுர்கள்) உணர்க. வஞ்
சம்=தீமை; ஆகுபெயராய்த் தீவினையை யுணர்த்திற்று.
நரகம்—வேதாகமங்களின்மொழிவழி நடவாதாரைத்தண்
டித்தற்பொருட்டுக் கடவுளாலமைக்கப்பட்ட சிறைக்களம்.
'பாழ்பட'என்னும் வினையெச்சம் 'ஏறினர்' என்னும் வினை
கொண்டு முடிந்தது. சூதசங்கிதை முதலிய நூல்களை
நோக்கும்போது தந்தையும் மகனேடுகூடவிருந்து முனிவ
ருக்குப் பணிவிடைபுரிந்து ஞானத்தால் வீடுற்றனரென

வும், இந்நூல் கரு-வதுசெய்யுளை நோக்கும்போது அவ்வா றொன்றுமில்லை யெனவும் வேறுபாடு தோன்றுகின்றமை காண்க. இதுபோன்ற சில வேறுபாடுகள் வழிநூலுக்கிருப்பது இயல்பாதலின் முரணில்லை யென்க.

"பரம ஞானி பணி விடை செய்தநல்
வரம னுஞ்சசி வன்ன னுயர்கதி
விரவ லாலவற் பெற்றமெய் யன்னையு
முரவு முத்தி யுலகம் புகுந்தனள்.

என்னுந்தமிழ்ச் சூதசங்கிதை செய்யுள் கொண்டு அன்னையும் உயர்பதமடைந்தனளெனக் கொள்க.

இங்கு,

"பூன்ற வாரிய னன்று புகறலுந்
தோன்றக் கேட்டுச்சிந் தித்துத்தெ ளிந்துதூ
வான்ற வுள்ளத்த னையெம் மருளினாற்
சான்ற முத்தனு னன்சசி வன்னனே."

"பாக வெக்கிய னும்பர யோகிதன்
சோக மற்றபணி துலங்கச் செய்து
சோக மற்றவு ளத்தின னய்முதிர்ந்
தேக முத்தியை யெய்தின னென்பவே."

"முன்னர் மாகிரை யத்துமு ழுகினோர்
மன்னு வான்சுவர்க் கத்தும லர்மக
னன்னர் மேவுப தத்தந னுகினர்
துன்னு சுற்றமு மேயினசுத்தமே."

"மேவி யன்னவன் விட்டம களிர்கள்
யாவ ருஞ்சுவர்க் கத்தை யடைந்தனர்
தாவி லன்னவன் றங்கிய நல்லிடஞ்
சேவை யாருஞ் செயச்சிறந் திட்டதே."



என்னுஞ் சூத சங்கிதைச் செய்யுட்க ளுணரத்தக்கவை. 'மிகா' ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். 'மிகு'— முதனிலைத் தொழிற்பெயர்; குற்றம் எனும் பொருளது. மிகா-குற்றமற்ற. மிகா-மிக என்பது செய்யுள் நோக்கி நீண்டது எனினும் அமையும். (கoஅ)

சீவன்முத்தனாகிய சசிவர்ணனை விண்ணுலகத்தவரும், மண்ணுலகத்தவரும் வழிபட்டனர்; அவர்களின் வழிபாடு வியந்து கூறத்தக்கதன்று எனக் காரணத்தோடு தேவிகூறல்.

(109) தேவரு மனித்தரு மிவன்றொழில் வியந்துரை
செயப்ப டுவதோ
மூவரும் வணங்கிமுடி யாலவன தேவல்செய
முந்து றுவரே.

இ-ள்.—மூவரும் முடியால் வணங்கி = திரிமூர்த்திகளும் தமது சிரசால் வணங்கி, அவனது ஏவல்செய = அச்சசிவர்ணனது சேவையைச்செய்தற்பொருட்டு, முந்துறுவர் = (யான்முன்னே யான்முன்னே என்று) தலைப்படுகின்றனர்; (இங்ஙனமானால்), தேவரும் = (இந்திரன் முதலிய) தேவர்களும், மனித்தரும் = (சக்கிரவர்த்தி முதலிய) மனுஷ்யர்களும், இவன் தொழில் = இச்சசிவர்ணனுக்குச் செய்த சேவை, வியந்துரை செயப்படுவதோ = அதிசயித்துச் சொல்லத்தக்கதா! அன்று; (எ-று.)

"ஞால முண்டவன் றலைமிசை சுமப்பன்மெய்ஞ்
ஞானிவேண் டுவவெல்லாம்
ஆல முண்டவ னவன்பின்னே திரிகுவ
னவனடித் துகட்கன்றோ
சில மன்னரு மற்றுள தேவருந்
திசைதிசை பணிந்தேத்தக்
காலி ரண்டையுந் தலைமிசை வையெனக்
கழறுவன் கமலத்தோன்."

என்று குறுந்திரட்டுக் கூறுவது இங்குணரத்தக்கது.

ஓகாரம் எதிர்மறைப் பொருளது. 'உரை செயப்படுவது' என்பதுசெயப்பாட்டு வினைமுற்று. 'மூவரும்' என்பதிலுள்ள வும்மை உயர்வு சிறப்போடு முற்றும்மையும் ஆம். ஏனையவும்மைகள் இழிவுசிறப்போடு எண்ணுமாம். (க௦௯)

"அருவ னாகிலு மன்பர்க் குருவனாய், வருவனென்றது மாமறை காணுமே" என்று உபக்கிரமித்ததைத் தேவி உபசம்மரித்தல்.

(110) ஞானியை நரன்சுர னெனுதொழிக ஞாலமுய
நாத னருளான்
மேனியது கொண்டுதனை நல்கவரு மென்றறையும்
வேத முடிவே.

இ-ள்.—ஞாலம்உய = உலகங் கடைத்தேற, நாதன் = இறைவனே, அருளால் = கருணையினால், மேனியதுகொண்டு = திருமேனியைத்தாங்கிக்கொண்டு, தனைநல்கவரும் = (பரிபூரண பிரஹ்மஸ்வரூபமாகிய) தன்னை (அதிகாரிகளுக்குச் சுபாவமாக) அளித்தற்பொருட்டுவருவன், என்று = என்பதாக, வேதமுடிவு அறையும் = உபநிடதங்கள் கூறும்; (ஆதலால்), ஞானியை = தத்துவ ஞானியை, நரன் சுரன் எனுது ஒழிக = மனிதனெனவும் தேவனெனவுங் கூறுதொழிக; (எ-று.)

நாதன் = மும்மூர்த்திகளுக்கு மிறைவன். (கக௦)

சசிவன்ன போத மூலம்.

தத்துவப் பிரகாசிகை என்னுமுரை முற்றிற்று.

ஸ்ரீமத் சங்கராசாரிய சுவாமிகள்

அருளிச்செய்த

## சோபான பஞ்சகம்.

வேதநித்த மோதவேண்டு மதுவிதித்த கன்மமே
விருப்பமோடு செய்யவேண்டு மதுகொ டீசன்பூசனை
தீதிலாதி யற்றவேண்டுங் காமியகன்ம புத்தியைத்
தெகிக்கவேண்டும் பாவபுஞ்ச மூதறவேண்டும் பவசுக
மீதனித்த மாதிதோட மிகவுங்காண வேண்டும்பின்
மெய்யுணர்வ னந்தவின்ப வான்மரூப மடையமெய்க்
காதல்செய்ய வேண்டுந்தன் மனையைவிட்டு வெளியிலே
கடுகவோட வேண்டுநடன ராசனருளை வேண்டியே. (க)

சாதுசங்கம் பண்ணவேண்டுஞ் சாம்பமூர்த்தி பத்தியைச்
சலனமின்றிச் செய்யவேண்டுஞ் சாந்திதாந்தி யாதியைக்
சோதிலாமற் பழகவேண்டும் பின்புகன்ம மியாவையுங்
குற்றமென்று நீக்கவேண்டுங் குணநிறைந்த தேசிகன்
பாதபத்மஞ் சாரவேண்டு மவன்றனேவற் பணிவிடை
பத்தியோடு பண்ணவேண்டும் பிரணவாக் கரந்தனை
யாதரத்தோ டடையவேண்டுஞ் சுருதியீறின் வாக்கிய
மனைத்துங்கேட்க வேண்டுநடன ராசனருளை வேண்டியே.

அந்தவாக்கி யார்த்தமேவி சாரஞ்செய்ய வேண்டும்பின்
னாரணுந்த பட்சங்கைப் பிடிக்கவேண்டும் பின்புநற்
புந்தியாற் குதர்க்கந்தன்னைத் தள்ளவேண்டுஞ் சுருதிக்குப்
பொருந்துதர்க்க மேவவேண்டும் பின்புசத்திய ஞானவா
னந்தப்பிரம நானேயென்று நினைக்கவேண்டு நாடொறும்
நவில்கெருவங் கெடுக்கவேண்டுந் தேகநானெனும்மதி
சந்தியாதே மாற்றவேண்டு மறிஞரோடு வாதமுஞ்
சாந்தமாக்க வேண்டுநடன ராசனருளை வேண்டியே. (௩)

பின்னுஞ்சுத்து ரோகந்தன்னைத் தீர்க்கவேண்டு நாடொறும்
பிட்சையன்ன வவுடதத்தை யுண்ணவேண்டு மிட்டமா
மன்னவிச்சை நீக்கவேண்டு மாரம்பித்த கன்மத்தா
லத்தம்வந்த வன்னமாதி கொடுமெகிழ வேண்டும்பின்
மன்னுதாசி னத்துவம் விரும்பவேண்டும் லோகத்தின்
மருவுநிட்டே ரந்தயைகள் மாற்றவேண்டுஞ் சீதமும்
பன்னுதாப மாதியுஞ் சகிக்கவேண்டும் வீண்சொலும்
பரிகரிக்க வேண்டுரெடன ராசனருளை வேண்டியே. (ச)

சுத்தமான தேசத்திற் சுகாதனத் திருக்கவேண்டுஞ்
சூக்கவஸ்து வின்மனத்தைச் சேர்க்கவேண்டும் பின்புநம்
மத்தனுந டேசன்றந்த வருளினால கண்டமா
மான்மரூபங் காணவேண்டு மவற்றினாற் சகத்தைவா
தித்தாக நோக்கவேண்டுஞ் சஞ்சிதம னைத்தையுந்
தீர்க்கவேண்டு ஞானவலியி னாலேபாவி கன்மமோ
டொத்தசங்கம் விடுக்கவேண்டு மிங்ஙனே பிராரத்த
மூண்ணவேண்டும் பின்புபிரம மாயிருக்க வேண்டுமே. (ரு)

## பிழைதிருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 11 | 23 | கடைத்திறப் | கடைதிறப் |
| 16 | 11 | சத்மார்க்தில் | சத்மார்க்கத்தில் |
| ,, | 13 | சத்மார்கத்திலுள்ள | சக்மார்க்கத்திலுள்ள |
| 17 | 7 | கைவல்லியத்தில் | கைவல்யத்தில் |
| 21 | 11 | (அக்கணமே) | (அக்கணமே), |
| 23 | 7 | அடையப்படுவன. | அடையப்படுவன |
| 23 | 27 | இராஜதிராஜ | இராஜாதிராஜ |
| 24 | 7 | மைந்த | மைந்த, |
| 25 | 27 | லவாணர் | புலவாணர் |
| ,, | ,, | பட்ல்புாரது | பட்டாரது |
| ,, | 28 | டசெவர் | செல்வர் |
| 26 | 12 | மிகவேவிய | மிகமேவிய |
| ,, | 19 | யாவும் | யாவும், |
| ,, | 20 | சசிவர்ணனனைக் | சசிவர்ணனைக் |
| 27 | 13 | துயர் | றுயர். |
| 30 | 21 | (நானனச்) | (நானெனச்) |
| ,, | 26 | ஓழிவற்றுள | ஒழிவற்றுள |
| ,, | 29 | விரையிற் | வுரையிற் |
| 37 | 25 | அஃறினை | அஃறிணை |
| 44 | 18 | என்றார் | என்றார். |
| 46 | 2 | காமமுண்டாம்? | காமமுண்டாம்; |
| 66 | 2 | என்பதிலுள் | என்பதிலுள்ள |
| 69 | 1 | ஒசையின் | ஓசையின் |
| 70 | 7 | மகாத்மியத்தை | மகாத்மியத்தை) |
| 71 | 15 | அர்ந்தமாம் | அர்த்தமாம் |
| 75 | 16 | இவ்விடம்பு | இவ்வுடம்பு |
| 76 | 21 | தோனறாச் | தோன்றாச் |
| 77 | 10 | நியாம் | நீயாம். |
| 82 | 6 | பெயரெச்சம | பெயரெச்சம் |
| 84 | 21 | மாமிசம் | மாமிசம், |
| 86 | 28 | தருக்கதூல் | தருக்கநூல் |
| 95 | 29 | அகஙகார | அகங்கார |
| 100 | 9 | தொழிம் | தொழியும் |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம். |
|---|---|---|---|
| ,, | 17 | வஸ்துவோ) | வஸ்துவோ), |
| 101 | 1 | சொரூபத்தைதக் | சொரூபத்தைக் |
| ,, | 2 | ஆத்மாவவல்ல | ஆத்மாவல்ல |
| 104 | 19 | யொழித்ததற்கு | யொழித்தற்கு |
| 106 | 7 | பிரமம் | பிரஹ்மம் |
| ,, | 19 | வாக்சியத்தின் | வாக்கியத்தின் |
| ,, | 20 | முப்பதக்களின் | முப்பதங்களின் |
| 111 | 11 | காரணோபாதி | காரேணோபாதி |
| ,, | 14 | காரணத்வ | சர்வகாரணத்வ |
| 115 | 12 | சேர்ந்து) | சேர்ந்து), |
| ,, | 16 | பதப் பொருள் சுத்தம் | பதம் சுத்தம் பொருள் |
| 116 | 24 | முதலியவற்குச் | முதலியவற்றிற்குச் |
| 117 | 4 | மறைத்தலைத் | மறைத்தலைச் |
| 118 | 26 | ஆராய்த்தக்கது. | ஆராயத்தக்கது. |
| 121 | 2 | சக்தியத்தின் | சக்கியத்தின் |
| 122 | 16 | முற்றுமை | முற்றும்மை |
| 125 | 19 | சிலர் | சிலர் இலக்கணையை |
| 126 | 2 | (கொண்டு கூட்டு) | (கொண்டு கூட்டுப்) |
| 133 | 22 | பொருளிண்கண் | பொருளின்கண் |
| 141 | 1 | தத்துவசி | தத்துவமசி |
| 145 | 27 | வதுமென்னுஞ் | துவமென்னுஞ் |
| 148 | 17 | மாதலின | மாதலின் |
| 154 | 1 | தோனறலும். | தோன்றலும் |
| 156 | 3 | பொருந்தி | பொருந்தித் |





PRINTED AT THE SRI "BHARATHI" PRESS, CHOOLAI, MADRAS.